# கல்கி

KALKI 14.1.73 45 காசு

பொங்கல் மலர்

கே. பாலசந்தர்

எழுதும்

புதுமைச்சித்திரம்

மூன்று முடிச்சுக்கள்

இந்த இதழில்

ஆரம்பம்



ஆண்,
ஆளப்பிறந்தவன்.
அவன் துணைவி,
அவனது இதயராணி.
பிள்ளைக் கனியமுது,
பேசும் பொற் சித்திரம்.

இல்லறத்தின்
சுவைக்களனில்
மலர்ந்தவை,
மபத்லால்
துணிமணிகள் !

மெஃப்ரின் எஸ்டர்காட் டெரோஸெல்

எளிய சாயல்களிலும்,
எடுப்பான வண்ணங்களிலும்,
பெருமித பிரிண்டுகளிலும்
'மெஃப்ரின்' 100% பாலியெஸ்டர்
சேலைகள், பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன் சேலைகள்;
'மெஃப்ரின்' பாலியெஸ்டர்
இழைகலந்த உடுப்புத்
துணிகள் — இலேசான லான்கள்.
கோடை நிழல் படரும்
கேம்ப்ரிக்குகள், கோலாகல
நகை மிளிரும் பாப்ளின்கள்;
இன்னொளி மிளிரும்
வண்ணங்களிலே, வரிகளிலே,
கட்டங்களிலே 'எஸ்டர்காட்'
பாலியெஸ்டர் இழைகலந்த
காட்டன் சூட்டிங்குகள்; அதி
நவீனமான அரும்பெரும் அழகு
வண்ணங்களில், பிரிண்டுகளில்
'டெரோஸெல்' பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
ஷர்ட்டிங்குகள்.

மபத்லால்
க்ரூப்

AIYARS-M,174 TM

# கல்கி

## பொங்கல் மலர்



### பொருளடக்கம்



பரிதாபி, தை 1 ப 1973, ஜனவரி 14



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

நெல்லூர்

மொழிவாரிப்
பிரிவினைப்பித்து
ஆய்ந்தால்
என்ன,
நான்
இருக்கேனே!

பிரதேசப்
பித்து

அடுத்தாப்பிலே நமக்கெல்லாம்
கூட சான்ஸ் கிடைக்கும்
போலிருக்கே!

மாவட்டப்
பித்து

வட்டப்
பித்து

நகரப்
பித்து

ஹரியானாவைத் தெரியாதா?
தமிழ்நாட்டாரு புரியாதா?

ஹரியானாவை எண்ணாதே!
கரியைப்பூசிக்
கொள்ளாதே!

கல்கி மலர் 32 இதழ் 24



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# அன்பார்ந்த நேயர்களுக்கு...

சதாசிவம்

மூர்த்தி இல்லாத கோயிலாக நெஞ்சம் வெறிச்சோடிக் கிடக்கிறது. துயருற்றவர், ஆறுதல் சொல்பவர் என்கிற பேதமின்றி உலகம் முழுவதும் சோகத்தில் ஆழ்ந்திருக்கும்போது என் சொந்தக் கிலேசத்தைச் சொல்லிக் கொள்வதற்கு நேயர்கள் மன்னிக்க வேணும்! 'துயரத்தை வெளியிட்டுச் சொல்லிக் கொள்வதே அதற்கு ஓரளவு பரிகாரம்' என்று ஸ்ரீ காமகோடிப் பெரியவர்கள் சொல்வார்கள்.

சகல உலகத்துக்கும் பொதுவான மகாநிதியாகிய ராஜாஜி நமக்கு விசேஷமாக மிக மிக நெருங்கிய உறவினராக, குருவாக, தெய்வமாக இருந்தார். 'நமக்கு' என்னும்போது கல்கி வாசகர்கள் அனைவரையும், கல்கிப் பத்திரிகையையும், கல்கி குடும்பத்தினரையும் குறிப்பிடுகிறேன். தனது முதல் இதழிலிருந்து தொடங்கி இந்த முப்பத்திரண்டு ஆண்டுகளாக 'என் கை உனக்கல்லாது எப்பணியும் செய்யற்க' என்று கல்கிப் பத்திரிகை ராஜாஜிக்கே திருத்தொண்டு புரியும் பாக்கியத்தைப் பெற்றிருக்கிறது; இனியும் பெறப் போகிறது. என்றென்றும் வாழும் தமது அமர எழுத்துக்களை, மகாபாரதத்தை, ராமாயணத்தை, பஜகோவிந்தத்தை, ராமகிருஷ்ண உபநிஷதத்தை, வள்ளுவர் வாசகத்தை, முதல் மூவரை, திருமூலர் தவமொழியை, இன்னும் பலப் பல தர்மக் கருவூலங்களை மகாபுருஷர் இந்த ஏட்டின் மூலமே உலகுக்கு அருளினார். தமது சுதந்திர அரசியல் போராட்டத்துக்காக அவர் எழுப்பிய சத்திய கோஷத்தைப் பரப்பும் சங்கமாகக் கல்கியையே உவந்து ஏற்றார். அவர் பக்கம் பக்கமாக இந்தப் பத்திரிகையில் பொன்னெழுத்துக்களை எழுதினார். அவரைப் பற்றியும் பத்திரிகையும் பக்கம் பக்கமாக எழுதிப் பூரித்தது. ஆதிகாலத்தில் என் அருமை நண்பர் கல்கி, டி. கே. சி. ஆகியோருடனும் பிற்பாடு காஸா சுப்பாராவ் அவர்களுடனும் சேர்ந்து ராஜாஜி அன்பில் முக்குளித்த நாட்கள் இன்று நினைவுத் திரையில் அலைமோதுகின்றன. அந்த மூவரும் புண்ணியசாலிகள். இன்றைய சோகம் அவர்களுக்கு இல்லை. அவரைக் குறித்து எண்ணியும் பார்த்திராத சம்பவத்தை எழுத்திலே வடிக்க வேண்டிய கொடுமை எனக்கே நேர்ந்து விட்டது.

எண்ணியும் பார்த்ததில்லைதான்! அவர் யௌவனப் பருவத்தில் மறைந்து விடவில்லை. தொண்ணூற்று நான்கு நீண்ட நெடிய ஆயுளை ஒவ்வொரு நொடியும் உலகுக்குப் பயனுறுமாறு பரம புனிதமாக வாழ்ந்துவிட்டே பழுத்த பழமாகக் கொம்பிலிருந்து விடுபட்டிருக்கிறார்! ஆனாலும்கூட மனத்தில் சோரேல் என்கிறது. காரணம், அவருக்குச் சாமானிய மானுடர் போல் ஒரு முடிவு உண்டு என்று நான் கற்பனை செய்தும் பார்த்ததில்லை. ஸ்ரீராமசந்திர மூர்த்தியைப் போல் மானுட தர்மத்தின் பரிபூரணத்துவத்தை வாழ்ந்து காட்டுவதற்காக வந்துள்ள ராஜாஜி, ஸ்ரீராமனைப் போலவே தாமாகத் திருஉளம் கொண்டபோதுதான் தேகம் துறப்பார் என்று ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தேன். தான் என்பதை என்றோ துறந்துவிட்ட அந்த ஜீவன் முக்தர் தேகத்தைத் துறப்பதைப் பற்றி ஒருபோதும் எண்ணியதில்லை. அனவரதமும் லோக க்ஷேமார்த்தமான உழைப்பிலேயே ஈடுபட்டிருந்த அந்தக் கர்மயோகேசுவரருக்கு மரணத்தைப் பற்றி எண்ணுவதற்கு அவகாசமும் இல்லை. என் நம்பிக்கை வலுப்பட்டது.

ஆனால் இரண்டாண்டுகளுக்கு முன் ஓர் இருட் கிரணம் மெல்லத் தலைகாட்டியது. தமிழகத்தில் மது அரக்கனுக்கு ஏழை எளியவர்கள் பலி கொடுக்கப் பட்டபோது மகானின் தளர்வறியா மனமும் சிறிதே தளர்ந்து, அவர் தமது பிற்காலம் பற்றிப் பேசுவதைக் கேட்கும் படியாயிற்று. அப்போது என் மனம் பட்ட பாடு சொல்லத் தரமன்று.

மதுவிலக்கு ரத்தானபோது மனம் நொடித்த மகாபுருஷர் மறுபடியும் பழைய உற்சாகத்தை, உத்வேகத்தைப் பெற்றது கல்கி நேயர்களுக்கே தெரியும். சென்ற ஆண்டு நானும் என் நண்பர்களும் ராஜாஜி—93 மலரை மகோந்நதமான முறையில் உருவாக்குவதற்கு

முயற்சி எடுத்துக் கொண்டபோது அவர் எழுதினர்: ''ஸ்ரீ சதாசிவமும் அவரது குழுவினரும் ராஜாஜி — 93 மலரைக் குறித்துச் செய்கிற பெரிய ஆர்ப்பாட்டத்தைப் பார்க்கும்போது, அவர்கள் அவ்வாறு உத்தேசிக்கா விட்டாலும்கூட இந்த டிஸம்பரோடு என்னைப் பொது வாழ்விலிருந்து வெளியேற்றிவிட நினைப்பதுபோலிருக்கிறது! ஆனால் நான் வெளியேற உத்தேசிக்கவில்லை .... எத்தனை காலம் வாழ வேண்டும், என்ன காரியம் செய்ய வேண்டும் என்பதை எல்லாம் நாமே நிர்ணயித்துக் கொள்கிற அதிகாரம் நமக்கில்லைதான். ஆயினும் இன்றைய சூழ்நிலையில் நானாகத் தப்பி ஓட விரும்பவில்லை.'' வாடியிருந்த என் மனத்தை இப்படி எழுதி மீண்டும் மலரச்செய்தார். ஆனால் 'தானாகத் தப்பி ஓட விரும்பாத' அவரை, ஒருவர் எத்தனை காலம் வாழவேண்டும் என்பதை நிர்ணயிக்கும் அதிகாரம் படைத்த மகாசக்தி தன்னிடம் அழைத்துக் கொண்டு, என்னையும் உங்களையும் உலகத்தையும் சோதித்து விட்டது.

உறுதியின் உருவான அவரது ஆத்மாவிடமே எனக்குத் தெளிவு கோரிப் பிரார்த்திக்கிறேன். அவரது பணியை நம்மால் முடிந்த அளவுக்குத் தொடர்ந்து செய்வதே உண்மையில் அவரிடம் நமக்குள்ள அன்புக்கு அடையாளமாகும் என்றும் எனக்கு நானே வலியுறுத்திக் கொள்கிறேன்.

தந்தை மறைந்ததும் தவித்து 'தந்தை போயினன் பாழ்மிடி சூழ்ந்தது ...,எந்த மார்க்கமும் தோன்றில(து)என் செய்கேன்?' என்று புலம்பிய அமரகவி, உடனுக்குடனே இது மகாசக்தியின் லீலை என்பதை நினைவு கொண்டு விடுத்த பிரார்த்தனையை நானும் விடுக்கிறேன்:

அறிவிலே தெளிவு, நெஞ்சிலே உறுதி
அகத்திலே அன்பின் ஓர் வெள்ளம்
பொறிகளின் மீது தனி அரசாணை
பொழுதெலாம் நினது பேரருளின்
நெறியிலே நாட்டம், கரும யோகத்தில்
நிலைத்திடல் என்றிவை அருளாய்!

* * *

அவர் விட்டுச் சென்றுள்ள பணி என்ன? மனித சுதந்திர மாண்பினை எடுத்தோதி வளர்ப்பதுதான். இது சாசுவதமான மனித ஆத்மாவை, நிரந்தரமான ஜீவன தர்மத்தைச் சேர்ந்த விஷயம். இந்த அமரமான லட்சியத்தில் அவரும் அமரராக வாழ்கிறார். இந்த மகத்தான லட்சியத்தில் அரசியல் கலப்பும் ஓரளவு உண்டு. மனிதன் தனது சுதந்திரத்தை அரசாங்க யதேச்சாதிகாரத்திடம் பறிகொடுத்து விடலாகாது என்று அரசியல் துறையில் எச்சரிக்கிறது இந்த மாபெரும் லட்சியம்.

அரசுக்கு அடிமைப்படாமலிருப்பது எவ்வளவு முக்கியமோ அதைவிட முக்கியமானது ஆண்டவனுக்கு அடிமைப்பட்டுக் கிடப்பதே ஆகும்.

பூமியில் எவர்க்கும் இனி அடிமை
செய்யோம் — பரி
பூரணனுக்கே அடிமை செய்து வாழ்
வோம்.

இது ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றலாம். ஆனால் முரண் இல்லை.

இதனால்தான் ராஜாஜி பக்தியை மீண்டும் மீண்டும் வலியுறுத்தினர். சுதந்திர மந்திரத்தின் மகரிஷியாக விளங்கிய அவர் தமது இந்த அரசியல் பணியைவிட, மக்களைத் தருமவாழ்வில் கட்டிப் போடுவதற்காகத் தாம் வியாசர் விருந்தும், சக்கரவர்த்தித் திருமகனும் எழுதியதைத்தான் பெருந் தொண்டாகக் கருதி நிறைவு பெற்றார். சென்ற ஆண்டு ஏறக்குறைய இதே பொங்கல் சமயத்தில் அன்னை ஆனந்தமயீ தேவி நம் கல்கிப் பூங்காவில் எழுந்தருளி விடை கொண்ட சமயத்தில் ராஜாஜி ''அரசியலின் இடத்தில் சமயத்தை நிறுவுவோம்'' என்று எழுதியது நினைவிருக்கும். அக்கட்டுரையில் கூறினர்:

''சமயங்கள் கூறும் தர்மம் ஒன்றே சத்தியமானது; அதன் சக்தியே அழிக்கவொண்ணாதது. இந்தக் காரணத்துக்காக மட்டுமின்றி, நடைமுறைப் பிரயோஜனத்தைப் பார்த்தாலும்கூட, ஒழுக்கமில்லாத அரசியலால் சுபிட்சத்தை உண்டாக்க முடியவில்லை எனக் காண்கிறோம். ஆகவே சுபிட்சத்தை வேண்டியும் கூடச் சமயத்தையே பேணி வளர்க்க வேண்டியதாகிறது. சமயம் கலக்காத அரசியல் மக்களை எல்லா நிலைகளிலும் பாழ்படுத்தி, சூதுவாதற்ற நமது கிராம மக்களைக் கூட வெகுவேகமாகக் கெடுத்து விட்டதைக் காண்கிறோம். இப்போது உள்ள பரிதாப நிலையை மாற்றி, நம்பிக்கை உண்டாக்க வேண்டுமாயின், அடுத்து வரும் சிறிது காலத்துக்குச் சமயமே நம் அரசியலாக இருக்க வேண்டும்.

''இப்போது தேசத்துக்கு மட்டும் சுயாட்சி கிடைத்திருக்கிறது; ஆனால் மக்கள் தரும வழியில் தம்மைத் தாமே அடக்கி ஆண்டுகொள்கிற தார்மிக சுயாட்சியைப் பெறவில்லை..

''மொத்தத்தில் நாம் உன்னி உணர வேண்டிய உண்மை இதுவே—

சமயமும், பாபத்தில் பயமும், பகவானிடம் நம்பிக்கையுமே இன்று நமக்கு அரசியல்.''

இந்த 'அரசியல்' பணியை ராஜாஜியின் தோன்றாத்துணை கொண்டு இன்று போல் இனியும் குன்றா உறுதியுடன் தொடர முயலுகிறேன்.

* * *

கல்கியின் இலக்கியப் பணி தழைத்திடவும் இயன்றதெல்லாம் செய்வோம். ராஜாஜியே சிறுகதைச் சிற்பியாக இந்த ஏட்டில் இலக்கியத் தொண்டு செய்தவர் அல்லவா? கல்கியின் முப்பத்தோராவது பிறந்த தினத்தன்று அவர் அளித்த அற்புத ஆசிச் செய்தி இன்னமும் அகச் செவியில் அமிருத சஞ்சீவினியாக ஒலிக்கிறது:

'' குடிநீர் எவ்வாறு சுத்தமாக இருக்க வேண்டுமோ அவ்வாறே லட்சக் கணக்கில் மக்கள் படிக்கும் பத்திரிகைகளும் பரிசுத்தமாக இருக்க வேண்டும்... இல்லாவிடில் எப்படி அசுத்தத் தண்ணீர் உடல் நலத்தைக் கெடுக்கிறதோ, அப்படிப் பத்திரிகைகளின் அசுத்தப் பண்பு மக்களின் குணத்தைக் கெடுத்துவிடும். பாப எண்ணங்களையும் அவிவேகங்களையும் தூண்டும் கதைகளை விலக்கி, பரிசுத்த உள்ளங்களுக்குத் தைரியம் தரும் முறையில் கதைகள் இருக்கவேண்டும்... கல்கி பத்திரிகை முப்பது ஆண்டுகளாகத் தருமத்துக்கும் தேசத் தொண்டுக்கும் பணி ஆற்றி வந்து தமிழ்ப் பத்திரிகைகளின் முதல் வரிசையில் ஒன்றாக நிற்கிறது... எவ்வித பயமும் இன்றி பாபங்களையும் குற்றங்களையும் எதிர்த்து, தேச பக்தி, தெய்வ பக்தி, நல் வாழ்க்கை மூன்றுக்கும் இத்தனை ஆண்டுகள் பணி செய்து வந்ததுபோல் இன்னும் பல்லாண்டு அது தமிழ் மக்களுக்காகப் பணி செய்ய வேண்டும்'' என்று எழுதினார் மகான்.

கல்கி பாக்கியசாலிதான்! நாமும் பாக்கியசாலிகள்தாம். உண்மையான வைஷ்ணவனை—பரம பக்தனை—ஒரு முறை தரிசித்தாலே ஒருவனது எழுபத்தியோரு தலைமுறைகள் உய்வு பெறும் என்றார் நரஸிமேதா. நாமோ பரம பக்த சிரேஷ்டரை, ஞானச் சக்கரவர்த்தியைத் தரிசித்தது மட்டுமின்றி, பலப்பல ஆண்டுகள் அணுகி அண்டியிருந்து அருள் மழையில் குளித்திருக்கிறோம். இதற்கு நாம் எத்தனை தவம் செய்திருக்க வேண்டும்?

* * *

முந்தைத் தவப்பயனுகக் கிடைத்த ராஜாஜியின் நல்லாசி இனியும் சூட்சும உருவில் நம்மை ரட்சிக்கும் என்று நம்பிடம் கொள்ள முயல்கிறேன். என்றும் நம்மைக் காத்து வரும் அருள் மூர்த்தியான ஜகத்குரு காஞ்சிப் பெரியவர்களின் திருவடி பணிந்து திருவருளை நாடுகிறேன். ராஜாஜியின் பூரண ஆசியைப் பெற்றது போலவே ஜகத்குரு அவர்களின் நிறைந்த அருளையும் பெற்ற கல்கி நாள்தோறும் பொலிவுற்றுத் திகழும் என்பதில் ஐயமில்லை.

ஜகத்குரு காஞ்சி மகாமுனிவரின் அநுக்கிரக சக்தியிலேயே புத்துணர்ச்சி பெற முயல்கிறேன். அதோடு உங்கள் அனைவரின் அன்பும் அநுதாபமும் அபிமானமும் ஆதரவும் எனக்கும், உங்களது இந்தப் பத்திரிகைக்கும் உரமூட்டும்.

மூர்த்தி இல்லாத கோயில் என்று முதலில் சொன்னேன். மூர்த்தி இல்லாமற் போனாலும் கடவுள் இல்லாமற் போகமுடியாதன்றோ? இதை எண்ணியே சூனியத்தை விரட்டி, பூரணத்தை உணர முயல்கிறேன். பொங்கல் திருநாளன்று பயிர் அறுவடையானாலும் மறுபடியும் பச்சையாக வயல் நிறைவது போல், ராஜாஜி என்ற சரீரம் முற்றிய பயிராகச் சாய்ந்தாலும் அவர் நம் அன்பு நெஞ்சில் என்றும் பசுமையாக வாழ்வார்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக!



### பெருமை பெறும் பெரு வீரர்களைப் பாராட்டுகிறோம்

1971-ம் ஆண்டு பாகிஸ்தான் போரில், வரலாற்றிலே இடம் பெறத்தக்க சாகசம் என்னும்படி பாரதத்துக்கு வெற்றி தேடித் தந்த மாவீரர் மானக்ஷா. இவருக்கு ஆயுள் காலம் வரை ஃபீல்ட் மார்ஷல் என்ற பதவி வழங்கப்பட்டிருப்பது குறித்து ஒவ்வொரு இந்தியனும் பூரிப்பு அடைகிறான். பாரதத்தின் முதலாவது ஃபீல்ட் மார்ஷல் இவரே.

அவர்வகித்த ஸ்தானத்துக்கு,பதவி உயர்வு பெறும் ஜெனரல் ஜி. ஜி. பேவூர் போர் முனையில் முழு அனுபவம் பெற்றவர் என்பதோடு இந்தியாவில் என். ஸி. ஸி. அமைப்பைச் சீரிய முறையில் வலுப்படுத்தியவர். அவருக்கு நமது நல்வாழ்த்துக்கள்.



# வராது வந்த வெற்றி

☐ கல்கத்தா ஏடன் கார்டனில் நடைபெற்ற இரண்டாவது டெஸ்ட்டில் வெற்றி கடிகாரப் பெண்டுலம் மாதிரி இங்கிலாந்து - இந்திய கோஷ்டிகளுக்கு இடையே ஊசலாடி ரசிகர்களை அயர வைத்தது. கடைசியில் இந்தியாவுக்கு ஒரு 'த்ரில்லிங் விக்டரி'யாக முடிந்தது. கல்கத்தா வெற்றிக்காக நமது விளையாட்டு வீரர்களை வாழ்த்துகிறோம். கடைசி வரை விட்டுக் கொடுக்காமல் போராடிய இங்கிலாந்து கோஷ்டி வீரர்களை விசேஷமாகப் பாராட்டுகிறோம்.



ஸ்ரீ பி. எஸ். சந்திரசேகர்

☐ இங்கிலாந்தில் ஸர்ரே மைதானம். இங்கு 1971 ஆண்டில் ஓர் அற்புத சாதனையைத் தம் பந்து வீச்சில் நடத்தி மாபெரும் புகழைத் தட்டிக் கொண்டவர் பி. எஸ். சந்திரசேகர். 18 ஓவர்கள் பந்து வீசி இங்கிலாந்து கோஷ்டியின் ஆறு விக்கெட்களை வீழ்த்தியது இந்திய வெற்றிக்கு அஸ்திவாரமிட்டது.

☐ சந்திரசேகர் முதன் முதலில் கிரிக்கெட் டெஸ்டில் நுழைந்தது 1963ம் ஆண்டில்., காப்டன் பட்டோடியின் தலைமையில்.

☐ சந்திரசேகர் ஆஸ்திரேலியாவுக்குச் சென்று வந்தபோது காயமடைந்து திரும்பினர். அதோடு ஸ்கூட்டர் விபத்தும் சேர்ந்து கொண்டது. இதனுல் அவர் கிரிக்கெட் எப்படி இருக்குமோ என்று அவரது உயிர் நண்பர்களுக்குக் கவலை. ஜோதிடர்களையும் குருக்களையும் அணுகி அவரது எதிர்காலம் பற்றி அக்கறையுடன் விசாரித்தனராம். பௌலிங் நிபுணர் சந்திரசேகருக்கு ஒரு குறை. Poliomyelitis என்ற [வியாதியால் அவர் முன்பு பாதிக்கப்பட்டதால், பந்தை வலது கையால் சுழற்றி வீசினுலும், பந்தை பீல்டிங்கில் எறிவதெல்லாம் இடது கையால்தான்.

☐ ஸ்பின்னர் பி. எஸ். பேடி ஆஸ்திரேலிய கோஷ்டிக் கெதிராக 69-70 ஆண்டில் 98 ரன்களுக்குள் ஏழு விக்கெட்டுகள் எடுத்தது அரிய சாதனை. பத்மஸ்ரீ, அர்ஜுன விருதுகளைப் பெற்றவர் இவர்.

☐ ஆல்ரௌண்டர் டோனி கிரெய்க் கல்கத்தா டெஸ்ட்டில் இரண்டாவது இன்னிங்ஸில் 67 ரன்களை எடுத்து இங்கிலாந்துக்கு வெற்றியைத் திருப்ப அரும்பாடு பட்டார். இருபத்தைந்து வயதான இவர் உயரம் ஆறு அடி ஏழு அங்குலம். இவரது விக்கெட்டை எடுத்துத்தான் பி. எஸ். சந்திரசேகர் வெற்றியை இந்தியா பக்கம் திருப்பினர். கல்கத்தா வெற்றி காரணமாகச்சென்னை டெஸ்ட் ஆரம்பமாகு முன்னரே, விறு விறுப்பு கொண்டதாகிவிட்டது.

— குண்டுமணி

## பொங்கல் பிரார்த்தனை






# தமிழ் நாட்டிலே...

தீரன்

## உதவி கலெக்டர் தேர்வில் உதவாக்கரை வினா

தமிழ்நாட்டில் உதவி கலெக்டர், உதவி போலீஸ் சூப்பரிண்டெண்ட்களுக்காக நடத்தப்பட்ட அரசாங்கத் தேர்வில் ஒரு கேள்வி கேட்கப்பட்டிருந்ததாகப் பத்திரிகைகளில் செய்தி வெளியாகியுள்ளது. தேர்வில் ஒரு பகுதியான 'தமிழ் மொழியும் இலக்கியமும்' — என்ற தலைப்பில் ஜனவரி இரண்டாம் நாளன்று தமிழ் நாடு முழுவதும் நடந்த மேற்படி பரீட்சையில், 'இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க்கவிதை வளர்ச்சிக்குத் தமிழவேள் டாக்டர் கலைஞர் ஆற்றிய தொண்டின் சிறப்பை விளக்கும்படி' ஒரு கேள்வி கேட்கப்பட்டிருந்ததாம். பட்டதாரிகளான மாணவர்கள் பலர் தேர்வின் தலைப்பு 'தமிழ் மொழியும் இலக்கியமும்' என்று இருப்பதனால் இலக்கண இலக்கியங்களை எல்லாம் கரைத்துக் குடித்துவிட்டுப் பரீட்சைக்கு வந்திருக்கிறார்கள். பரீட்சையில் இந்த எதிர்பாராத 'டாக்டர் கலைஞர்' பற்றிய கேள்வியைப் பார்த்ததும் பலருக்கு என்ன பதில் எழுதுவது என்றே புரியவில்லை. ஒரு நூற்றாண்டே சிறப்பை அடையும்படி அவ்வளவு பெரிதாகவும், அரிதாகவும் டாக்டர் கலைஞர் என்ன சாதித்திருக்கிறார் என்பது தெரியாததால், பாவம், பலர் அந்தக் கேள்விக்குப் பதிலே எழுதாமல் விட்டு விட்டு வந்து விட்டார்களாம். கம்பராமாயணம், சிலப்பதிகாரம் என்று அவர்கள் படித்து விட்டுப் போனவற்றில் எதுவும் கேள்வியே வராவிட்டால் அவர்கள் என்ன செய்வார்கள்? உதவாக்கரை வினவுக்கு அவர்கள் எப்படிப் பதில் அறிந்திருக்க முடியும்?



## கவர்னரின் ஆசை

காந்தி கிராமத்தின் வெள்ளி விழா நிகழ்ச்சியின் முதல்நாளன்று தமிழக கவர்னர் திரு கே. கே. ஷா கலந்துகொண்டு விழாவைத் தொடங்கி வைத்திருக்கிறார்.

''காந்தி கிராமத்தில் போதிக்கப்படுவது போல் வேலை வாய்ப்புக்கு வசதியான கல்வியைக் கற்றுக் கொடுக்கும் பல நிறுவனங்கள் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் அமைய வேண்டும். காந்தி கிராமத்தில் கற்பிக்கப்பட்டு வரும் கல்வி தேசத்தில் பரவினால் அது அரசின் கல்விக்கான செலவைக் குறைப்பதுடன், ஏழை மாணவர்களுக்கு மிகவும் பயன்படும். காந்திய வழியின் மூலம்தான் உலகம் உய்ய முடியும்'' என்றெல்லாம் நாட்டுக்குப் பயன்படும் பல கருத்துக்களை அந்த வெள்ளி விழாத் தொடக்க நாளில் கூறிய கவர்னர், ''மாணவர் அனைவரும் எதிர்காலத்தில் கருணாநிதி போல் வரவேண்டும்'' என்றும் ஒரு வாக்கியத்தைத் தமது பிரசங்கத்தின் நடுவே கூறியதாகத் தெரிகிறது. கவர்னருடைய அருமையான பிரசங்கத்தில் இந்த ஒரே ஒரு வாக்கியம் மட்டும் மாணவர்களுக்கு அவர் செய்த ஆசீர்வாதமா, அல்லது வெறும் வாதமா என்பதுதான் நமக்குப் புரியவில்லை.

## சிரித்தாரா ? சிரிக்கவில்லையா ?

புத்தாண்டு பிறந்ததுமே டில்லி சென்று திரும்பிய தமிழக முதல்வர் சென்னையில் பத்திரிகை நிருபர்களிடம் பேசும்போது, ''எனது அமைச்சரவை மீதான குற்றச்சாட்டுக்களையும் அதற்கு அளிக்கப்பட்ட விரிவான பதிலையும் பிரதம மந்திரி பார்த்திருப்பார். புகார்ப் பட்டியலில் உள்ள அபத்தமான குற்றச்சாட்டுகளை நான் சுட்டிக்காட்டியபோது பிரதமர் சிரித்தார். மற்ற அமைச்சர்களும் சிரித்தார்கள். பிறகு டில்லியில் நிருபர்கள் கூட்டத்தில் நான் பேசியபோது அவர்களும் இந்தக் குற்றச்சாட்டுகளின் அபத்தத்தைக் கேட்டுச் சிரித்தார்கள்'' என்று கூறியிருக்கிறார். தி. மு. க. நாளிதழ் உள்பட எல்லாத் தினசரிகளிலும் வெளிவந்திருக்கிறது. ஆனால் உடனே தமது மந்திரி சபை மீதான ஊழல் புகார்ப் பட்டியலிலுள்ள சில அபத்தமான குற்றச் சாட்டுக்களைத் தாம் எடுத்துக் கூறியபோது 'பிரதமர் சிரித்தார்' என்று தமிழக முதல்



மந்திரி கருணாநிதி கூறியதை மத்திய அதிகார வட்டாரங்கள் கடுமையாக மறுத்துவிட்டன. இப்படி மத்திய அதிகார வட்டாரங்கள் மறுத்த மறுதினம் காலையிலேயே, தாம் அப்படிச் சொல்லவில்லை என்றும், '' 'பொதுவாக எல்லாரும் சிரித்தார்கள்' என்றுதான் சொன்னேன். பத்திரிகைகளில் 'பிரதமர் சிரித்தார், மற்ற மந்திரிகளும் சிரித்தார்கள்' என்று தவறாகப் பிரசுரித்து வெளியிட்டு விட்டார்கள்'' என்றும் தமிழக முதல்வர் இதை ஆட்சேபித்தும் ஓர் அறிக்கை விட்டு விட்டார். தமிழக முதல்வருக்கு முன் சாதாரணமாக முகமனுக்காகச் சிரிப்பது கூட எவ்வளவு அபாயகரமானது என்பதை இதிலிருந்து பிரதமரும் மற்ற மத்திய அமைச்சர்களும்

## ராஜாஜி சிந்தனை

பஞ்ச பூதங்களால் ஆன ஜட உலகில் மிகவும் ஆற்றலுடன், முக்கியத்துவத்துடன் நிகழும் இயக்கம் ஆகர்ஷண சக்தியே ஆகும். ஆன்மிக உலகில் இந்த ஆகர்ஷண சக்தியே அன்பு என்கிற பெயரில் மிகவும் சக்தியுடன் முக்கியத்துவத்துடன் விளங்குகிறது.

கடவுளிடம் பய பக்தியுடன் இருக்க வேண்டும், God-fearing ஆக இருக்க வேண்டும் என்று பொதுவாகச் சொல்லப்படுகிறது. ஆனால் இந்தச் சொற்றொடர் எனக்கு உவப்பாக இல்லை. கடவுளிடம் பயந்து வாழ வேண்டும் என்கிறபோது, உண்மையில் பாபத்திடமும், அதருமத்திடமும் பயந்து வாழ்வதே குறிப்பிடப்படுகிறது. பகவானிடம் பயப்படத் தேவையில்லை. பாபத்தைக் கண்டே அஞ்சவேண்டும். பக்தி என்றால் காதல் என்றே பொருள், அச்சம் அல்ல.

ஏகமாக இருந்த பகவான் தன்னையே பலவாகப் பகுத்துக் கொண்டான். ஒன்று பலவாகப் பிரிந்தபோது ஒரு மகா சக்தி உண்டாயிற்று. அந்தச் சக்தியின் வேகத்தில் பிரிந்தவை மீண்டும் நெருங்கின. (ஜட உலகில் இதுவே பூமியின் ஆகர்ஷண சக்தியும், உலக கோளங்கள் ஒன்றையொன்று ஆகர்ஷித்துச் சுழலும் சக்தியும் ஆயிற்று.) ஆன்ம உலகில் இச்சக்தியே அன்பாகப் பிறந்தது. அன்பில் விளைந்த ஆனந்தமும் பிறந்தது. அந்த அன்போடு சக்தி இயக்கம் நின்றிருந்தால், பலவாக ஆனதெல்லாம் மறுபடியும் ஏகமாக ஆகிவிட்டிருக்கும்; லீலை முடிந்துபோயிருக்கும்.

லீலை முடியக் கூடாதென்றே துவேஷமும் கோபமும் சிருஷ்டிக்கப்பட்டன. பலவாகப் பிரிந்த பிராணிகள் இவற்றால் ஒவ்வொரு சமயத்தில் மேலும் மேலும் ஒன்றுக்கொன்று விலகலாயின. விலகினால்தான் பிற்பாடு கூடும்போது உண்டாகும் பேரின்பம் கிட்டும். கூடலின்பத்தைப் பல விதங்களில் எல்லை யில்லாமல் பெருக்கி நடத்திக் காட்டுவதற்காகவே, பிரிவுச் சக்தியான கோபமும் துவேஷமும் கற்பிக்கப்பட்டன.

அநேக சந்தர்ப்பங்களில் துவேஷத்தைப் பிரேமையிலிருந்தும், நல்லதைத் தீமையிலிருந்தும் வித்தியாசம் கண்டு கொள்ள முடியாமல் இருக்கிறது. சகலத்துக்கும் உள்ளே ஒரு சட்ட நியதி மறைவாகப் புதைந்தோடுகிறது. பூரணமான அந்தச் சரட்டின் ஒருசில துண்டுகளை மட்டுமே நாம் ஒவ்வொரு சமயத்திலும் கண்டு கொள்ளுகிறோம்.

புரிந்து கொண்டிருப்பார்கள் என்று நினைக்கிறோம்.

பிரதமர் சிரித்தாரோ சிரிக்கவில்லையோ, தமிழக முதல்வரின் முதல் நாள் அறிக்கையையும் மறுநாள் திமர் மறுப்பையும் படித்துப் பார்த்துத் தமிழ் மக்கள் சிரியோ சிரி என்று வாய் விட்டுச் சிரித்திருப்பார்கள் என்பதுமட்டும் நிச்சயம்.

## நகர பஸ்கள் சீரமைப்பு

சென்னை நகர பஸ் ரூட்டுகளைச் சீரமைப்பதற்குப் பரீட்சார்த்தமாகச் சில முயற்சிகள் மேற்கொள்ளப்படும் என்று பல்லவா போக்குவரத்து நிர்வாக இயக்குநர் அறிவித்திருக்கிறார்.

அதில் ஒன்று, பஸ்கள் நிற்கும் இடங்களைப் பொறுத்து இரண்டு முறைகளைக் கையாள்வது. அதாவது பஸ்கள் கட்டாயமாக நிற்க வேண்டிய நிறுத்தங்கள் என்றும், பிரயாணிகளின் வேண்டுகோளின்படி மட்டுமே நிற்க வேண்டிய நிறுத்தங்கள் என்றும் இரு முறை இருக்குமாம். நடைமுறையில் இது எப்படி சாத்தியம் என்பது தெரியவில்லை. போகப் போகத்தான் தெரியும். வேண்டுகோள் நிறுத்தங்கள் முன்பே முடிவு செய்யப்பட்ட பட்டியல்படி இடங்களைத் தேர்ந்தெடுத்து நிறுத்தப்படுமா, அல்லது பஸ் போய்க் கொண்டிருக்கும் போதே பிரயாணி சொல்லி நிற்கச் செய்து இறங்கலாமா என்பது தெளிவாக்கப்பட வேண்டும்.

இதில் மற்றொன்றும் உண்டு. பஸ் கட்டாயமாக நிற்கும் இடம், பிரயாணிகள் வேண்டி நிற்கும் இடம், ஆகிய இரண்டும் தவிர பஸ்களை விரும்பி நின்றுவிடும் (பிரேக் டவுன்) இடங்களும் இருக்கின்றனவே! அதை என்ன செய்வது?

## மந்திரி கவலைப்படுகிறார்

தமிழ் நாட்டில் உணவுப் பொருள்களின் விலை நாளுக்கு நாள் ஏறி வருவதைப் பற்றித் தமிழக உணவு அமைச்சர் திரு மன்னை நாராயணசாமி சென்னை வியாபாரிகள் சங்கத்தில் பேசுகையில் கவலைப்பட்டிருக்கிறார். உணவு தானியங்கள் பற்றியோ பண்டங்கள் பற்றியோ அமைச்சர் கவலைப்படுவதால் மட்டுமே விலைகள் குறைந்து வழிக்கு வர முடியாது. விலைவாசிகளைக் குறைப்பதற்கான உருப்படியான முயற்சிகளை அமைச்சர் அரசாங்கம் மூலம் செய்ய வேண்டுமே தவிர மேடைகளில் கவலைப்பட்டுப் பயன் ஏதுமில்லை. மந்திரி கவலைப்படுகிறார் என்பதற்காக விலைவாசிகள் பயப்பட்டுக் கீழே இறங்கிப் படுமலிவாகிவிடப் போவதில்லை.

'இதைத் தடுப்பது பற்றி அரசு யோசித்து வருகிறது' என்றும் அமைச்சரே அக்கூட்டத்தில் கூறியுள்ளார். சில சமயங்களில் அரசு யோசித்து முடிப்பதற்குள் ஐந்து வருடங்களும் கழிந்து அடுத்த தேர்தல்கூட வந்துவிடுகிறது. எனவே, யோசிப்பது, கவலைப்படுவது போன்றவற்றை விடுத்து விலைகளை இறக்குவதற்கான செயல்களில் உடனே இறங்குமாறு அமைச்சரை வேண்டுகிறோம்.







# ஐயப்பன்

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

**பொங்கல் திருநாளன்று சபரிமலையில் லட்சோப லட்சம் அடியாரைக் கவர்ந்திழுக்கும் கலியுக வரதரான ஐயப்ப ஸ்வாமிக்கு மகர விளக்கு மகோற்சவம் நடக்கிறது.**

பரமாத்மா ஒன்றே சிவனாகவும் நாராயணனாகவும் ரூபம் தரிக்கிறது. சிவனாக இருக்கும்போது ஞானமூர்த்தியாக இருக்கிறது. நாராயணனாக இருக்கும்போது லோக சம்ரக்ஷணம் செய்கிறது. இப்படிச் சொல்வதால் சிவனுக்குப் பாலன சக்தி இல்லை என்றோ, விஷ்ணுவுக்கு ஞான சக்தி இல்லையென்றோ அர்த்தமில்லை. அவர்கள் முக்கியமாகச் செய்கிற அநுக்கிரகத்தையே குறிப்பிட்டேன்.

ஆல விருக்ஷத்தின் கீழோ, பனிமலை உச்சியிலோ சிவபெருமான் வீற்றிருக்கிறார். உடலெல்லாம் விபூதிப் பூச்சு. புலித் தோலை இடுப்பில் கட்டி, யானைத் தோலைப் போர்த்தியிருக்கிறார். அவர் ஸ்வரூபம், அலங்காரம், வாசஸ்தானம் எதைப் பார்த்தாலும் ஞானிகளுக்கு உரியதாக இருக்கிறது. அவர் கரத்திலேயே ஞான முத்திரை தாங்கியிருக்கிறார். ஆத்ம தியானத்தில் ஆழ்ந்திருக்கிற அவரது சந்நிதி ஒரே சாந்தமாக இருக்கிறது. பரம சத்தியத்தைப் போதிக்கிற பரமகுரு அவரே. அந்தப் பரம சத்தியமும் அவரன்றி வேறில்லை. இந்த உபதேசம் ஞானியின் தொழில்.

லோக ரக்ஷணம் என்பது ராஜாவின் கடமை. அதனால்தான் நாராயணனை ஸ்ரீ வைகுண்டத்தில் சக்கரவர்த்தி போல் தியானிக்கிறோம். பீதாம்பரம், கௌஸ்துபம், வனமாலை, கிரீட குண்டலங்கள் தரித்து, ராஜாதி ராஜனாக இருக்கிறார் ஸ்ரீ மகாவிஷ்ணு.



ஆசார சீலரான ரிஷிகளைப் போல் ஈசுவரனுக்கு எப்போது பார்த்தாலும் ஸ்நானம் செய்வதில் பிரியம். அதனால்தான் வடதேசத்தில் ஈசுவரன் கோயில்களில் எல்லாம் சிவலிங்கத்தின் மேல் எப்போது பார்த்தாலும் ஜலம் கொட்டிக் கொண்டிருக்கும்படி தாரா பாத்திரத்தைக் கட்டி வைத்திருக்கிறார்கள். சக்கரவர்த்தி போன்ற மகாவிஷ்ணுவுக்கோ அலங்காரத்தில் பிரியம் அதிகம். அவருக்குப் பட்டும் பொன்னும் புனைந்து மகிழ்கிறோம்.

**அலங்கார ப்ரியோ விஷ்ணு:**
**அபிஷேக ப்ரியோ சிவ:**

என்றே சொல்வார்கள்.

ஈசுவரனின் அழகு மனத்தை அடங்கச் செய்கிற சாந்த ஸ்வபாவம் வாய்ந்தது. ஸ்ரீமந் நாராயணனின் சௌந்தரியமோ மனத்தை மோகிக்கச் செய்து ஆனந்தக் கூத்தாடச் செய்வது. விஷ்ணுவின் திவ்விய ரூபத்திலிருந்து வைத்த கண்ணை வாங்க முடியாமல் எவரும் சொக்கிக் கிடக்க வேண்டியதாகிறது. ஸ்ரீ ராமனாகவும், கிருஷ்ண பரமாத்மாவாகவும் அவதரித்த போதும் இந்த ஜகன்மோகன சௌந்தரியம் அவரை விட்டு நீங்காமலே இருந்திருக்கிறது. இப்படிப்பட்டவர் மோகினி என்றே ஓர் உருவம் கொள்ளும்போது எத்தனை அழகாக இருந்து எல்லோர் உள்ளங்களையும் கொள்ளை கொண்டிருப்பார்? பரம ஞானியாக, தபோ மயமாக ஜ்வலித்துக் கொண்டிருந்த பரமேசுவரனின் மனத்தைக்கூட மகாவிஷ்ணுவின் மோகினி ரூபம் மயக்கிவிட்டது என்று புராணங்கள் சொல்கின்றன. மோகினியாக வந்த நாராயணனின் காருண்ய லாவண்யமும் பரமேசுவரனின் சாந்த ஞானமும் ஒன்றுசேர்ந்தவுடன் ஒரு மகா தேஜஸ் — ஒரு பெரும் ஜோதி — பிறந்தது. இந்தத் தேஜஸே ஐயப்பனாக உருக்கொண்டது.

ஹரிஹர புத்திரன் என்றும், சாஸ்தா என்றும் ஐயனார் என்றும் சொல்வது இந்த ஐயப்பனைத்தான்.

ஐயன் என்பது 'ஆர்ய' என்பதன் திரிபு. 'ஆர்ய' என்றால் 'மதிப்புக்குரிய' என்று பொருள். சாக்ஷாத் பரமேசுவரனுக்கும்



நாராயணமூர்த்திக்கும் ஜனித்த குழந்தையை விட மதிப்புக்குகந்தவர் எவருண்டு? ஞானமும் தவமும் கலந்த சிவனின் பிரம்ம அம்சம், கிருபையும் சௌந்தரியமும் கலந்த விஷ்ணுவின் க்ஷத்ர அம்சம் இரண்டுமே நாம் உய்வு பெற அத்தியாவசியமாகும். ஹரிஹர புத்ரனாகிய ஐயப்பனிடம் இவை யெல்லாமே ஒன்று சேர்ந்திருப்பதாகக் கொள்ளலாம். இதனால்தான் போலிருக்கிறது. சிவபெருமானின் மற்ற இரு பாலர்களைப் பிள்ளையார் என்றும் குமரன் என்றும் குழந்தைகளைக் குறிக்கிற சொல்லால் குறிப்பிட்டாலும், அல்லது மூன்றாவது புத்திரனான சாஸ்தாவை மட்டும் மதிப்புக்குரியவராக — ஆர்யராக — ஐயனாராகக் குறிப்பிடுகிறோம்.

தமிழ் நாட்டில் கிராமத்துக்குக் கிராமம் ஐயனார் கோயில் உண்டு. கேரளத்தில் வேறு விதத்தில் ஐயப்பன் வழிபாடு வெகுவாகப் பரவி வளர்ந்திருக்கிறது. அவர் நம்மைக் காவல் புரிகிற தெய்வம். பலவித தீய சக்திகளிலிருந்து நம்மைக் காப்பாற்றுகிறவர். இதெல்லாவற்றுக்கும் மேலாக நாராயணனிடமிருந்து நம் வாழ்க்கையையே பாலிக்கும் சக்தியைப் பெற்றிருக்கிறார். ஈசுவரனிடமிருந்து நமக்கு விமோசனம் தருகிற ஞானத்தை அளிக்கும் சக்தியும் பெற்றிருக்கிறார்.

சுதந்திர இந்தியாவில் ஐயப்பன் ரொம்ப ரொம்ப கியாதி பெற்று வருகிறார். சுதந்திர சாஸனம் அளித்திருக்கிற பேச்சு சுதந்திரத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஒரு பக்கத்தில் நாஸ்திகப் பிரசாரம் தடபுடலாக நடக்கிற போதே, மறுபக்கத்தில் அது எடுபடாத அளவுக்கு ஐயப்ப பக்தி நாளுக்கு நாள் அமோகமாக விருத்தியாகிக் கொண்டிருக்கிறது.

கேரளத்தில் எட்டாக் கையில் சபரிமலையில் இருக்கிற ஐயப்பன் கொஞ்சம் கொஞ்சமாகத் தமிழ்நாடு, மற்ற ராஜ்யங்கள் மீதெல்லாம் கூடத் தம் ராஜதானியை விஸ்தரித்துக் கொண்டே வருகிறார்!



இது மிகவும் உற்சாகமளிக்கிற விஷயம். நாஸ்திகப் பிரசார விஷத்தைத் தடுக்கிற அருமருந்தாக வந்திருக்கிறது ஐயப்ப பக்தி.

அவரது கிருபையை நாடி, அதற்குப் பாத்திரர்களாக வாழ்ந்தோமானால் நாமும், நாடும், உலகமும் சிறப்புற்று விளங்குவது நிச்சயம்.



# பூர்வ கதை

ராஜம்பேட்டை பட்டாமணியம் கிட்டாவய்யர் தம்முடைய புதல்வி லலிதாவுக்காக வரன் தேடினார். புதுடில்லியில் பெரிய உத்தியோகத்திலிருந்த சௌந்தரராகவன் எம்.ஏ., லலிதாவைப் பார்ப்பதற்காக வந்த இடத்தில் பம்பாயிலிருந்து வந்திருந்த கிட்டாவய்யரின் தங்கை பெண் சீதாவைப் பார்த்து அவளை மணக்க விரும்பினான். அவ்வாறே அவர்களுக்குத் திருமணம் நடந்தது. லலிதாவைத் தேவப்பட்டணத்து வக்கீலின் குமாரன் பட்டாபிராமனுக்குக் கல்யாணம் செய்து வைத்தார்கள்.

பட்டாபிராமனும் எதிர் வீட்டு அமரநாதனும் லலிதாவின் சகோதரன் சூரியாவும் சிநேகிதர்கள். சூரியா படிப்பை இடையில் நிறுத்திவிட்டுக் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியில் சேர்ந்து தேச சேவையில் ஈடுபட்டான். ஹரிபுரா காங்கிரஸிலிருந்து புதுடில்லிக்குப் போனான்.

சௌந்தரராகவனும் சீதாவும் சூரியாவும் ஆக்ராவுக்குத் தாஜ்மகால் பார்க்கச் சென்றார்கள். தாஜ்மகாலில் சௌந்தரராகவனின் பழைய சிநேகிதியான தாரிணியைச் சந்தித்தார்கள். தாரிணியும் சூரியாவும் சிநேகிதர்கள் ஆனார்கள். ரஜனிபூர் ஏரியில் படகிலிருந்து விழுந்து தத்தளித்த சீதாவைத் தாரிணி காப்பாற்றினாள்.

சீதா சிறு வயதில் பம்பாயில் வசித்த காலத்தில் ரஸியா பேகம் என்னும் ஒரு ஸ்திரீ மர்மமாக வந்து அவளுக்கு ஒரு ரத்தின மாலை கொடுத்துவிட்டு வந்தாள். அந்த ஸ்திரீ புதுடில்லியில் ஒரு நாள் இரவு ரத்தம் தோய்ந்த கத்தியுடன் வந்து சீதாவின் வீட்டில் ஒளிந்து கொண்டாள். அவள்தான் தாரிணியின் வளர்ப்புத் தாய் என்று சீதா அறிந்தாள். தாரிணியின் பிறப்பு சம்பந்தமாக ஏதோ ஒரு மர்மம் இருப்பதாகத் தெரிய வந்தது.

சூரியாவும் தாரிணியும் சிநேகமாயிருப்பது கண்ட சௌந்தரராகவனின் உள்ளத்தில் பொறாமைத் தீ கொழுந்து விட்டது. அவன் தாரிணியிடம் தன் காதலை வெளியிட்டான். அவள் அதை உறுதியாக நிராகரித்தாள்.

சூரியா 1942ம் வருஷத்தில் ஆரம்பமான புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டு மாறுவேடத்துடன் தேசமெல்லாம் சுற்றி வந்தான். தேவப்பட்டணத்தில் பட்டாபிராமன் காங்கிரஸ் இயக்கத்தில் ஈடுபட்டுச் சிறையில் இருந்தான். அச்சமயம் அவனுடைய ஆண் குழந்தைக்கு ஆண்டு நிறைவு கொண்டாடினார்கள். அன்றைய தினம் சூரியா அங்கு வந்திருந்தது அறிந்து போலீஸார் அவனைப் பிடிக்கப் பார்த்தார்கள். எதிர் வீட்டு அமரநாதனின் உதவியால் சூரியா தப்பித்துப் புதுடில்லிக்குச் சென்றான்.

புதுடில்லியில் சீதாவின் இல்லற வாழ்க்கை நாளுக்கு நாள் நரகமாகி வந்தது. அதற்குக் காரணம் தாரிணிதான் என்பதாக எண்ணி அவளைச் சீதா துவேஷித்தாள். புருஷன் மனைவி சண்டையில் ஒரு நாள் சௌந்தரராகவன் குழந்தை வஸந்தியைப் பலமாக அடித்து விட்டான். அவனுடைய தாயார் காமாட்சி அம்மாள் குழந்தை வஸந்தியுடன் சென்னைக்குச் சென்றாள்.

சீதா ஒரு நாள் இரவு கைத் துப்பாக்கியால் சுட்டுக் கொண்டு சாக யத்தனித்த சமயத்தில் சூரியா வந்து அவளைத் தடுத்துக் காப்பாற்றினான். சீதா தன்னால் இனிமேல் சௌந்தரராகவனுடன் வாழ முடியாது என்றும் தன்னை எங்கேயாவது அழைத்துக்கொண்டு போகும்படியும் சூரியாவிடம் வற்புறுத்திச் சொன்னாள்.

சூரியா வந்துவிட்டுப் போனதை அறிந்து சௌந்தரராகவன் அவனைப் போலீஸுக்கும் பிடித்துக் கொடுக்க யத்தனம் செய்தான்.

தில்லியில் ஜும்மா மசூதிக்குப் பக்கத்திலிருந்த மைதானத்தில் சூரியாவும் தாரிணியும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பதைச் சில முரட்டு ஆட்கள் கவனித்துக் கொண்டிருந்தார்கள். தாரிணியைக் கைப்பற்றுவதற்கு உதவி செய்தால் சூரியாவுக்கு லட்சம் ரூபாய் தருவதாகச் சொன்னார்கள். சூரியா தாரிணியிடம் இதைச் சொல்லி எச்சரிக்கை செய்தான். அதை அவள் லட்சியம் செய்யவில்லை.

மேற்கூறிய முரட்டு ஆட்கள் மறுநாள் சீதாவைக் கைப்பற்றி மோட்டாரில் வைத்துக்கொண்டு ஓடினார்கள். இன்னொரு மோட்டாரில் தொடர்ந்து வந்த சூரியா யமுனைப் பாலத்தின் அருகில் நிறுத்தப்பட்டுப் போலீஸாரால் கைது செய்யப்பட்டான். சில நாட்களுக்கெல்லாம் போலீஸ் பாதுகாப்பிலிருந்து அவன் தப்பித்துக் கொண்டான்.

சீதாவைக் கைப்பற்றியவர்கள் அவளுக்கு மயக்க மருந்து கொடுத்து ஒரு சுதேச ராஜாவின் அரண்மனைக்குக் கொண்டு போனார்கள். அங்கே ராஜமாதாவும் ராஜகுமாரனும் சீதாவைப் பார்த்துப் பேசியபோது அவளைத் தாரிணி என்று நினைத்துத் தவறாகக் கொண்டு வந்ததாக ஏற்பட்டது. பிறகு சீதாவைத் திரும்பக் கொண்டு போய் ஆக்ராவில் விட்டு விட்டார்கள். ஆக்ராவில் சீதாவின் பேரில் ஒரு திருட்டு வழக்கு தொடரப்பட்டது. ஒரு முஸ்லிம் கனவான் திருட்டைத் தாம் ஒப்புக்கொண்டு அவளை விடுவித்தார். கல்கத்தாவில் அமரநாதனும் அவனுடைய மனைவி சித்ராவும் இருப்பதைச் சூரியாவின் மூலம் அறிந்திருந்த சீதா கல்கத்தாவுக்குச் சென்றாள். அவள் ரயிலிலிருந்து இறங்கிச் சென்றபோது ஏற்பட்ட வெடிகுண்டு விபத்தினால் மூர்ச்சையடைந்து வீதி ஓரத்தில் கிடந்தாள். அமரநாதனும் சித்ராவும் தெய்வாதீனமாக அவளைப் பார்த்துக் காப்பாற்றினார்கள்.

ஒரு வாரத்துக்கெல்லாம் மறுபடியும் போலீஸார் வந்து சீதாவைப் பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்தார்கள். சீதா புரட்சி இயக்கத்தைச் சேர்ந்தவள் என்றும் அவளே தாரிணி என்ற மாறு பெயர் வைத்துக் கொண்டிருந்ததாகவும் போலீஸார் தவறாக நம்பி அவளைக் கைது செய்ததாகத் தெரிந்தது. ஆனால் சீதா போலீஸ் குற்றச்சாட்டை மறுத்துச் சொல்ல விரும்பவில்லை. சிறைவாசம் தனக்கு மன நிம்மதி அளிக்கும் என்று நம்பிச் சந்தோஷமாகச் சிறை புகுந்தாள்.

# 1. தாயின் மனக்குறை

இராஜம்பேட்டைகிராமத்தை நாம் பார்த்து ஏறக்குறைய ஒரு வியாழ வட்டம் ஆகிறது. கணக்காகச் சொல்லப்போனால் பதினொரு வருஷமும் பத்து மாதமும் ஆகின்றன. பழைய தபால் சாவடிக் கட்டிடமும் ஏறக்குறைய முன்னால் பார்த்த மாதிரியே காணப்படுகிறது. ஆனால் அக்கட்டிடத்தின் வெளிச் சுவரிலும் தூண்களிலும் சில சினிமா விளம்பரங்கள் ஒட்டப் பட்டிருப்பதைக் காண்கிறோம். விளம்பரம் ஒட்டப் படாத இடங்களில் ''ஜே ஹிந்த்'' என்றும், ''நேதாஜி வாழ்க!'' என்றும் எழுதப்பட்டிருந்தன.

தபால் சாவடிக்கெதிரே சாலையில் கப்பும் கிளையுமாகப் படர்ந்திருந்த பெரிய ஆலமரத்தைக் காணவில்லை. இதனால் அந்தச் சாலையின் அழகு குன்றி வெறிச்சென்றிருந்தது. மிட்டாய்க்கடை இருந்த இடத்தில் இப்போது ரேஷன்

கடை இருந்தது. கடைக்காரர் மனசு வைத்து எப்போது அரிசிப் படி போடுவார் என்று எதிர்பார்த்துக் கொண்டு நாலைந்து ஸ்திரீகள் கையில் கூடையுடன் நின்றார்கள்.

தபால் சாவடிக்குள்ளே ஜன நடமாட்டம் காணப்பட்டது. ஆனால் நமக்குத் தெரிந்தவர்கள் யாரும் அங்கில்லை. போஸ்டு மாஸ்டர், போஸ்டுமேன், ரன்னர் — எல்லோரும் நமக்குப் புதியவர்கள். வரப்போகும் தபால் ஸ்டிரைக்கைப் பற்றி அவர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். இந்தத் தெரியாத மனிதர்களை விட்டு விட்டு நமக்குத் தெரிந்த மனிதர்கள் இன்னும் வசிக்கும் இராஜம்பேட்டை அக்கிரகாரத்துக்குப் போவோம்.

அக்கிரகாரத்தின் தோற்றத்தில் சில மாறுதல்கள் காணப்பட்டன. முன்னே நாம் பார்த்ததற்கு இப்போது இன்னும் சில வீடுகள் பாழடைந்து போயிருந்தன. கிட்டாவய்யரின் வீட்டு வாசலில் பந்தல் இல்லை. வீட்டின் முகப்பு களை குன்றிப் போயிருந்தது. ஆனால் சிமாச்சுவய்யரின் வீடு இப்போது முன்னை விட ஜோராக இருந்தது. சிமாச்சுவய்யர் சரியான சமயத்தில் தேவப்பட்டணத்துக்குப் போய் ஜவுளிக் கடை வைத்தார். திருமகளின் கடாட்சம் அவருக்கு அமோகமாகப் பெருகியது. பழைய வீட்டைத் திருத்தி நன்றாகக் கட்டியிருந்தார்.

கிட்டாவய்யருக்குச் சமீப காலத்தில் சில கஷ்டங்கள் ஏற்பட்டிருந்தன. குடி படைகளுக்கும் மிராசுதார்களுக்கும் குடியிருக்கும் மனைக்கட்டு விஷயமாக நெடுங் காலமாய்ச் சச்சரவு நடந்து கொண்டிருந்தது. சென்ற வருஷத்தில் கோர்ட்டில் மிராசுதார்களுக்குச் சாதகமாகத் தீர்ந்தது. இந்த வழக்கில் முன்னால் நின்று நடத்தும் பொறுப்பு கிட்டாவய்யரின் தலையில் சுமந்திருந்தது. இதனால் பண விரயம் அதிகமானதோடு குடிபடைகளின் விரோதத்தைச் சம்பாதித்துக்கொண்டிருந்தார்.

யாரும் எதிர்பாராத விபத்து ஒன்று கிட்டாவய்யருக்குச் சென்ற வருஷம் நேரிட்டது. சுற்றுப்புறங்களில் திருட்டுக்களும், கொள்ளைகளும் அடிக்கடி ஏற்பட்டுக் கொண்டிருந்தன. திருட்டுக் குற்றத்துக்காகக் கைது செய்யப்பட்ட ஒரு கூட்டத்தினர் பட்டாமணியம் கிட்டாவய்யரைச் சம்பந்தப் படுத்தி வாக்குமூலம் எழுதி வைத்தார்கள். உடனே கிட்டாவய்யர் பட்டாமணியம் உத்தியோகத்தி லிருந்து சஸ்பெண்ட் செய்து வைக்கப்பட்டார். குற்றச் சாட்டுதலைப் பற்றிய போலீஸ் விசாரணையும் உத்தியோக விசாரணையும் நடந்தன. கடைசியாக விரோதத்தின் பேரில் பொய்யாக எழுதி வைக்கப்பட்ட குற்றச்சாட்டு என்று ஏற்பட்டது. ஆயினும் விசாரணை நடந்து கொண்டிருந்த போது கிட்டாவய்யரின் மனத்தில் ஏற்பட்ட வேதனைக்கு அளவே கிடையாது. வீட்டை விட்டு வெளியே புறப்படுவதற்கே அவருக்கு வெட்கமாக இருந்தது! ஆயினும் வெளியில் கிளம்புவது அவசியமாகவும் இருந்தது! பணம் நிறையச் செலவாயிற்று. முடிவாக ஒன்றுமில்லை என்று ஏற்பட்ட போதிலும், ''பணத்தைச் செலவழித்து அமுக்கி விட்டார்'' என்ற பேச்சும் பராபரியாகக் காதில் விழாமற் போகவில்லை.

பத்து நாட்களுக்கு முன்பு கிட்டாவய்யர் தேவப்பட்டணம் சென்று, அதற்குச் சில நாளைக்கு முன்னால்தான் சிறையிலிருந்து விடுதலையடைந்து வந்திருந்த தம் மாப்பிள்ளை பட்டாபிராமனைப் பார்த்து விட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார். இராஜம்பேட்டையிலிருந்து நாலு மைல் தூரத்தில் இராத்திரி பத்து மணிக்குக் கட்டை வண்டியில் வந்து கொண்டிருந்தபோது முகமூடி அணிந்திருந்த திருடர்கள் ஏழெட்டுப் பேர் வந்து சூழ்ந்து கொண்டு வண்டிக்காரனையும் கிட்டாவய்யரையும் நன்றாக அடித்துவிட்டு அவரிடமிருந்த மணி பர்ஸை அபகரித்துக் கொண்டு போய் விட்டார்கள்.

கிட்டாவய்யர் உடம்பெல்லாம் காயங்களுடன் வீட்டுக்கு வந்து சேர்ந்தார். அன்றிரவே அவருக்குக் கடுமையான சுரமும் வந்து விட்டது.

இந்தச் செய்தியை அறிந்ததும் தேவப்பட்டணத்திலிருந்து பட்டாபிராமனும் லலிதாவும் குழந்தைகளுடன் புறப்பட்டு வந்தார்கள். இரண்டு நாட்கள் இருந்து விட்டுப் பட்டாபிராமன் போய்விட்டான். கிட்டாவய்யரும் சரஸ்வதி அம்மாளும் கேட்டுக் கொண்டதன் பேரில் லலிதாவையும் குழந்தைகளையும் இன்னும் சில நாட்கள் இருந்துவிட்டு வரும்படி சொல்லிப் போனான்.

* * *

ரேழிப் பக்கத்துக் காமரா அறையில் போட்டிருந்த கட்டிலில் கிட்டாவய்யர் படுத்திருந்தார். அவருக்கு இப்போது உடம்பு சௌகரியமாகி விட்டது. ஆனாலும் முன்போல் எழுந்து நடமாடும்படியான தெம்பு இன்னும் ஏற்படவில்லை. இப்போது அவர் அரைத் தூக்கமாக இருந்தார்.

வீட்டுக்குள்ளே கூடத்தில் பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னால்

முதன் முதலில் பார்த்த காட்சியை இன்றைக்கும் பார்க்கிறோம். லலிதாவுக்கு அவளுடைய தாயார் சரஸ்வதி அம்மாள் தலை வாரிப் பின்னிக் கொண்டிருந்தாள். ஆனால் லலிதா முன்னைப் போல் இப்போது சின்ன வயதுக் கன்னிப் பெண் அல்ல. அவள் இரண்டு குழந்தைகளின் தாயார். அந்தக் குழந்தைகள் இருவரும் — பட்டுவும் பாலுவும் —சற்றுத் தூரத்தில் உட்கார்ந்து பொம்மைகள் நிறையப் போட்டிருந்த ஒரு தமிழ் சஞ்சிகையைப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

லலிதாவின் முக மண்டலத்தில் அவ்வளவாகச் சந்தோஷம் குடிகொண்டிருக்கவில்லை. அவளுடைய கண்கள் கலங்கி யிருந்தன. மழை பொழியத் தொடங்குவதற்குத் தயாராக இருக்கும் மாரிக் காலத்து இருண்ட மேகங்களை அவளுடைய கண்கள் அச்சமயம் ஒத்திருந்தன. ஏதாவது ஒரு சின்னக் காரணம் ஏற்பட வேண்டியதுதான்; அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் மழை சொரியத் தொடங்கிவிடும்.

அத்தகைய காரணத்தை ஏற்படுத்திக் கொடுக்க லலிதாவின் தாயார் சரஸ்வதி அம்மாள் இருக்கவே இருந்தாள். லலிதாவின் தலையை வாரிக்கொண்டே தன் மனக் குறைகளையும் அந்த அம்மாள் வெளியிட்டுக் கொண்டிருந்தாள்.

''இறுக்கம் தாங்கவில்லை. ஆனால் பாழும் மழை மட்டும் பெய்ய மாட்டேன் என்கிறது. வயல்களில் பயிரெல்லாம் காய்கிறதாம். தெய்வம் எப்போது கண் திறந்து பார்க்குமோ, தெரியவில்லை. இந்தக் கலியுகத்தில் தெய்வத்துக்கே சக்தி இல்லாமல் போய் விட்டதுபோல் தோன்றுகிறது. இல்லாவிட்டால் இந்தமாதிரி அக்கிரமங்கள் எல்லாம் உலகத்தில் நடக்குமா? உங்கள் அப்பா பெயரைச் சொன்னால் நாடு நகரமெல்லாம் நடுங்கிக் கொண்டிருந்த காலம் உண்டு. இப்போது அவருடைய வண்டியைத் திருடர்கள் வழிமறித்து அடித்துப் பணப் பையைப் பிடுங்கிக் கொள்ளும் காலம் ஏற்பட்டு விட்டது. ஒரு அதிகாரம் — ஒரு அத்து — இப்போதெல்லாம் கிடையாது. பயம் என்பதே இல்லாமல் போய்விட்டது.''

லலிதா குறுக்கிட்டு, ''அம்மா! ஊரெல்லாம் அப்பா பெயரைக் கேட்டுப் பயந்து கொண்டிருந்த காலத்தில் நீமட்டும் பயப்படவில்லையே? எதிர்த்துப் பேசிக் கொண்டுதானே இருந்தாய்?'' என்றாள்.

''நன்றா யிருக்கிறதடி நீ சொல்வது! என் மாதிரி புருஷனுக்குப் பயந்து எல்லாரும் நடந்தால் போதாதா? ஒரு வார்த்தை எதிர்த்துப் பேசுவதற்குக் கூடப் பயந்து பயந்து இருந்தபடியால் தான் இந்தக் குடும்பம் இந்தக் கதிக்கு வந்தது! நான் மட்டும் எதிர்த்துப் பேசியிருந்தேனானால் இப்படி யெல்லாம் நடந்திருக்குமா? உன்னுடைய கல்யாணத்தையே எடுத்துக்கொள்! என் இஷ்டப்படி விட்டிருந்தால் இந்த இடத்தில் உன்னைக் கொடுத்திருப்பேனா? கிளியை வளர்த்துப் பூனை கையில் கொடுக்கிறது என்று சொல்வார்கள். அந்த மாதிரி உன்னுடைய கதி ஆகி விட்டது!....''

''ஏதாவது உளறாதே அம்மா! குழந்தைகளின் காதில் விழப் போகிறது.''



''விழுந்தால் என்ன? நன்றாய் விழட்டும். உன் பெண்ணும் பிள்ளையும் வேண்டுமானால் மாப்பிள்ளையிடம் போய்ச் சொல்லட்டும். எனக்கு ஒருவரிடத்திலும் பயம் கிடையாது. காங்கிரஸாம்! காந்தியாம்! இரண்டு வருஷங்கள் ஜெயில்லே இருந்துவிட்டு வந்தாராம்! எதற்காக ஜெயிலுக்குப் போக வேணும்? திருடினாரா, கொள்ளையடித்தாரா? மாப்பிள்ளைக்குப் போட்டியாக இந்தப் பிராமணரும் ஜெயிலுக்குப் போய்விடுவாரோ என்று எனக்குப் பயமாயிருந்தது. ஏதோ நான் செய்த பூஜா பலத்தினால் அது ஒரு அவமானம் இல்லாமல் போயிற்று. உன் அகத்துக்காரர் இரண்டு வருஷங்கள் ஜெயிலில் இருந்து விட்டுத்தான் வந்தாரே? என்ன பலனைக் கண்டார்? சிலபேர் காங்கிரஸிலே சேர்ந்து ஜெயிலுக்குப் போய் வந்துவிட்டு, மெம்பர் கிம்பர் என்று ஆகிச் சம்பாதித்து வருகிறார்களே? அப்படியாவது ஏதாவது உண்டா? அதுவும் கிடையாது...!''

''அம்மா! இவர் மற்றவர்களைப் போல் சட்டசபை மெம்பர் ஆவதற்காகவோ, வேறு உத்தியோகப் பதவிக்காகவோ ஜெயிலுக்குப் போகவில்லை. சுயராஜ்யத்துக்காகப் போனார்.''

''சரி! அப்படியாவது சுயராஜ்யம் வந்ததா? சொல்லேன், பார்ப்போம்! யுத்தத்திலே ஹிட்லர் ஜெயித்துவிடப் போகிறான்—இங்கிலீஷ்காரன் வாயிலே மண்ணை வாரிப் போட்டுக் கொண்டு போய்விடப் போகிறான் என்று எல்லோருமாகச் சேர்ந்து சொன்னீர்கள். உன் அண்ணா சூரியா இருக்கிறானே, அந்தச் சமர்த்துப் பிள்ளை உன் அப்பாவைப் பட்டாமணியம் வேலையை விட்டுவிட வேண்டும் என்று சொன்னான். கடைசியில் என்ன ஆயிற்று? சுயராஜ்யத்தையும் காணோம், கியராஜ்யத்தையும் காணோம். அதுதான் போனால் போகிறது என்றால் இப்போதாவது மாப்பிள்ளை கோர்ட்டுக்குப் போய், நாலு பணம் சம்பாதிக்கலாம் அல்லவா? வக்கீல் வேலைக்குப் படித்துவிட்டு வீட்டிலே கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தால் என்ன பிரயோஜனம்? இல்லையென்றால், ஏதாவது உத்தியோகமாவது தேடிக் கொள்ள வேணும். சும்மா யிருந்தால் எப்படி ஜீவனம் நடக்கும்? நீயோ சம்சாரியாகி விட்டாய்! இங்கேயாவது முன்னைப் போல் கொட்டிக் கிடக்கிறதா? பணத்தினால் காசினால் அதிகம் செய்ய முடிகிறதா? அப்படிச் செய்தால்தான் என்ன? உனக்கு வைத்துக் கொண்டு வாழத் தெரியவில்லை. அவர்தான் சொன்னார் என்று ஒரு தங்க



ஒட்டியாணத்தை விற்றுவிட்டேன் என்று சொல்கிறாயே? உன்னுடைய சமர்த்தை என்னவென்று சொல்லுவது? கட்டிய பெண்டாட்டிக்கு ஒரு புருஷன் புதிதாக நகை பண்ணிப் போடா விட்டாலும் ஏற்கனவே பண்ணிய நகையை விற்பானா? இது என்னடி வெட்கக்கேடு?...''

''அம்மா! இப்படியெல்லாம் நீ அவரைப் பற்றிக் குறை சொல்வதாயிருந்தால், இரண்டு நாட்களுக்குப் பிறகு போகிறவள் இன்றைக்கே புறப்பட்டு விடுகிறேன்...'' என்றாள் லலிதா.

''போ! போ! இந்த நிமிஷமே புறப்பட்டுவிடு! என் தலையெழுத்து அப்படி. நான் யாருக்கு என்னமாய் உழைத்தாலும் என்பேரில் யாருக்கும் ஈவிரக்கம் கிடையாது. தான் பெற்ற பிள்ளையும் பெண்ணும் தனக்கே சத்துரு என்றால், அது தலையெழுத்துத்தானே? பத்து மாதங்கள் நான் உன்னை வயிற்றில் சுமந்து பெற்றெடுக்கவில்லையா? பெற்ற தாயாருக்கு ஒரு வார்த்தை சொல்லுவதற்குப் பாத்தியதை கிடையாதா?''

''என்னை நீ எவ்வளவு வேணுமானாலும் சொல், அம்மா! பொறுத்துக் கொள்கிறேன். ஆனால் அவரைப் பற்றி ஒன்றும் சொல்லாதே! நீதானே அவரைத் தேடி என்னை அவருக்குக் கல்யாணம் செய்து கொடுத்தாய்? இப்போது குறை சொல்லுவதில் என்ன பிரயோஜனம்?'' என்று கேட்டாள் லலிதா.

''நான் ஒன்றும் இந்த மாப்பிள்ளையைத் தேடிப் பார்த்துப் பிடித்துக் கொண்டு வரவில்லை. உன் அண்ணா சூரியா சொன்னான் என்று உன் அப்பா ஏற்பாடு செய்து விட்டார். ஆயிரம் ரூபாய் சம்பளக்காரனை நான் உனக்காக வரன் பார்த்திருந்தேன். கொடுத்து வைக்கவில்லை. பம்பாயிலிருந்து அந்த மகராஜி — உன் அத்தை — சரியான சமயம் பார்த்து அந்தப் பெண்ணையும் அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்தாள். பெண்ணைப் பார்க்க மாப்பிள்ளை வருகிற சமயத்திலே வீட்டிலே வேறு பெண் இருக்கக் கூடாது என்று முட்டிக் கொண்டேன். என் பேச்சை யாரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. நான் என்ன இங்கிலீஷ் படித்தவளா? நாகரிகம் தெரிந்தவளா? பட்டிக்காட்டு ஜடம்தானே? என் பேச்சை யார் கேட்பார்கள்? ஆனாலும் இந்தப் பட்டிக்காட்டு ஜடம் சந்தேகப் பட்டுச் சொன்னது போலவே நடந்து விட்டது. உன்னைப் பார்ப்பதற்காக வந்தவனை உன் அத்தங்கா சீதா மயக்கி விட்டாள். அவளிடம் என்ன மோகனாஸ்திரம் வைத்திருந்தாளோ, என்ன சொக்குப் பொடி வைத்திருந்தாளோ, தெரியாது. வந்தவனும் பல்லை இளித்து விட்டான்! உன்னுடைய அதிர்ஷ்டம் கட்டையாகப் போய்விட்டது...''

''இல்லவே இல்லை; என் அதிர்ஷ்டம் நன்றாயிருந்தது. அந்த ஆயிரம் ரூபாய் சம்பளக்காரனைச் சீதா கல்யாணம் செய்து கொண்டாளே, அவளுடைய கதி என்ன ஆயிற்று? அவள் பட்ட கஷ்டமெல்லாம் உனக்குத் தெரியாதா அம்மா! போன மாதத்திலே கூடச் சித்ரா கடிதம் எழுதியிருந்தாள், சீதாவின் புருஷன் ரொம்பப் பொல்லாதவன், அயோக்கியன் என்று. அதையெல்லாம் சொல்லக் கூட எனக்குப் பிடிக்கவில்லை. அவனுக்கு என்னைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்திருந்தால் நானும் சீதாவைப் போலத்தானே கஷ்டப்பட வேண்டும்?'' என்றாள் லலிதா.

''அப்படி ஒன்றும் கிடையாது. அந்தப் பெண் சீதாவுக்குத் துக்கிரி ஜாதகம். அதனாலே அவள் போன இடம் அப்படியாயிற்று. உன்னை அந்த வரனுக்குக் கொடுத்திருந்தால் இப்போது ராஜாத்தி மாதிரி இருப்பாய்!''

''என்னுடைய ஜாதகம் அதிர்ஷ்ட ஜாதகமாயிருந்தால், நான் வாழ்க்கைப் பட்ட இடத்தில் சுபிட்சமாயிருக்க வேண்டுமே? அவ்விதம் ஏன் இல்லை?'' என்று கேட்டாள் லலிதா.

''உன் அரட்டைக்கல்விக்கு என்னால் பதில் சொல்ல முடியாது. நீ போன இடத்தில் இப்போது என்ன குறைந்து போய்விட்டது? வீடு, வாசல், பணம், சொத்து எல்லாம்தான் இருக்கிறது! நாமாகக் கஷ்டத்தை வரவழைத்துக் கொள்வதற்கு அதிர்ஷ்டம் என்ன செய்யும்? ஜாதகம் என்னசெய்யும்? உன் தங்க ஒட்டியாணத்தை விற்றுத்தான் சாப்பிட வேண்டும் என்று ஆகிவிடவில்லை. மாப்பிள்ளைக்கு ஏதோ கிறுக்குப் பிடித்திருக்கிறது. நீயும் சேர்ந்து கூத்தடிக்கிறாய்!'' என்றாள் சரஸ்வதி அம்மாள்.

''சரி, அம்மா, சரி! தலை பின்னியாகிவிட்டதோ இல்லையோ? போதும், விடு!'' என்றாள் லலிதா.

இவ்வளவு நேரமும் சரஸ்வதி அம்மாள் தன் பெண்ணின் கூந்தலை வாரி ஜடை போட்டுக் கொண்டிருந்தாள். கூந்தலை விட்டு விட்டால் அப்புறம் லலிதாவை உட்கார வைத்துத் தன் மனக் குறைகளைக் கேட்கச் செய்ய முடியாது என்று சரஸ்வதி அம்மாளுக்குத் தெரிந்திருந்தது. ஆகையினாலேயே சிறிதும் அவசரப்படாமல் சாவகாசமாகக் கூந்தலை வாரிப் பின்னிவிட்டாள்.

அவள் தலை பின்னி முடிந்த சமயத்தில் வாசலில், ''தபால்!'' என்ற சத்தம் கேட்டது. லலிதா உடனே அம்மாவின்

பிடியிலிருந்து தலைப் பின்னலைப் பலவந்தமாகத் திமிறி விடுவித்துக் கொண்டு எழுந்தாள்.

''இவ்வளவு வயதாகியும் உன் சுபாவம் மட்டும் மாறவில்லை. அந்த நாளில் திமிறிக் கொண்டு ஓடியது போலவே இப்போதும் ஓடுகிறாய். நல்ல வேளையாகத் தபால் ஆபீஸுக்கே ஓடிப் போகாமல் வீட்டு வாசலோடு நிற்கிறாயே, அதுவரையில் விசேஷந்தான்!'' என்றாள் சரஸ்வதி அம்மாள். அவளுடைய வார்த்தைகளை அரைகுறையாகக் காதில் வாங்கிக்கொண்டு லலிதா வாசற் பக்கம் சென்றாள்.

## 2. ''சீதா வருகிறாள்!''

**வா**சலில் வந்து நின்று, ''தபால்!'' என்று சப்தமிட்ட போஸ்டுமேன் வயதான மனிதர். அவர் லலிதாவை ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, ''நீங்கள்தானா, அம்மா, லலிதா பட்டாபிராமன் என்கிறது?'' என்று கேட்டார். ''ஆமாம்!'' என்று சொல்லி லலிதா கையை நீட்டினாள். போஸ்டுமேன் கடிதத்தை அவள் கையில் கொடுத்துவிட்டுப் போனார்.

கடிதத்தின் மேல் விலாசம் கணவருடைய கையெழுத்திலே இருக்கிறது என்பதை லலிதா கவனித்துவிட்டு ஆவலுடன் உறையைப் பிரித்தாள். அதற்குள்ளே இரண்டு கடிதங்கள் இருந்தன. ஒன்று கணவர் எழுதியிருப்பதுதான்; இன்னொன்று, ஆகா! — சீதாவின் கையெழுத்துப் போல அல்லவா இருக்கிறது? இருக்கட்டும்; முதலில் இவருடைய கடிதத்தைப் படிக்கலாம்:—

''சௌ, லலிதாவுக்கு ஆசிர்வாதம்.

உனக்குக் கடிதம் எழுத ஆரம்பிக்கும் போது, 'என் ஆருயிரே!' 'அன்பின் சிகரமே!' 'காதற் கனிரசமே!' 'வாழ்வின் துணைவியே!' என்றெல்லாம் எழுதி ஆரம்பிக்க வேண்டும் என்று எண்ணுகிறேன். ஆனால் எழுதும்போது அதெல்லாம் வருவதில்லை. பழைய கர்நாடக பாணியில்தான் ஆரம்பிக்க வேண்டியிருக்கிறது.

இங்கே நான் சௌக்கியமாகவும் சௌகரியமாகவும் வந்து சேர்ந்தேன். யாரும் என்னை வழிமறித்து மணிபர்ஸைப் பறிக்கவில்லை. அப்படி யாராவது பறித்திருந்தாலும் அதிகமாக அவர்களுக்கு ஒன்றும் கிடைத்திராது. ஓர் ஆளுக்குத் தேவப்பட்டணத்துக்கு ரயில் சார்ஜும் மேலே ஒன்றரை அணாவுந்தான் கிடைத்திருக்கும். ஏமாந்து போயிருப்பார்கள்!

நல்ல சமயம் பார்த்துச் சமையற்கார அம்மா லீவு வாங்கிக் கொண்டுவிட்டாள். நான்தான் இப்போது சமையல் செய்கிறேன். 'சமையல் பஸ்ட்கிளாஸ்' என்று உன் தம்பி சுண்டு சர்டிபிகேட் கொடுக்கிறான். நான் இரண்டு வருஷங்கள் ஜெயிலில் இருந்ததில் என்ன பிரயோஜனம் என்று உன் தாயார் உன்னைக் கேட்டுக் கொண்டிருந்தாளே; இதைக் காட்டிலும் என்ன பிரயோஜனம் வேண்டும்? ஜெயிலில் இருந்திராவிடில் சமையல் செய்யக் கற்றுக் கொண்டிருக்க முடியுமா? வீட்டில் நான் சமையற்கட்டுக்குள் வந்தாலே நீங்கள் எல்லோரும் குடி முழுகிப் போனதுபோல் கூச்சல் போடுவீர்களே, போகட்டும்.

''அத்திம்பேருக்கு ஒத்தாசையாயிரு!'' என்று நீ சுண்டுவிடம் சொல்லி அனுப்பினையல்லவா? சுண்டு எனக்கு மிகவும் ஒத்தாசையாக இருந்து வருகிறான். நேற்றுக் குழம்பை அடுப்பிலே கவிழ்த்து விட்டான்! 'போதும், அப்பா, உன் ஒத்தாசை! நீ சும்மா இருந்தால், அதுவே பெரிய உதவியாயிருக்கும்!' என்று சொன்னேன். சுண்டு ஒத்தாசைக்கு வந்துவிடப் போகிறானே என்று எனக்கு இப்போது ஓரே பீதியாக இருக்கிறது.

உன் தாயார் ஒட்டியாணத்தை மறந்துவிட்டாளா, இல்லையா? அது தங்க ஒட்டியாணம் அல்ல. — மூலாம் பூசிய பித்தளை ஒட்டியாணம் என்பதையும், அதை நான் விற்றுவிடவில்லை — தானம் கொடுத்தேன் என்பதையும் உன் அம்மாவிடம் சொல்லிவிட்டாயா? சொன்னால் ஒரு வேளை அவளுடைய கோபம் இன்னும் அதிகமாகிவிடுமோ, என்னமோ? உன் தாயாரின் சமாசாரம் உனக்குத்தான் தெரியும். ஆசையால் உன்னுடைய உசிதப்படி செய்துகொள்.

மாமாவுக்கு இப்போது உடம்பு நன்றாய்ச் சௌகரியமாகியிருக்கும் என்று நம்புகிறேன். அவருக்கு இப்படிப்பட்ட கஷ்டம் வந்ததை நினைத்தால் எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. நம்முடைய சூரியா சொன்ன யோசனையைக் கேட்டு நடந்திருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும். இந்த மாதிரியெல்லாம் பொருள் நஷ்டமும் மனக் கஷ்டமும் ஏற்பட்டிருக்குமா? எல்லாம் கடவுளுடைய செயல்!

நீ எப்போது புறப்பட்டு வருவதாக உத்தேசம்? கூடிய சீக்கிரம் வந்துவிடு

வது நல்லது. நீ சீக்கிரம் வரவேண்டிய தற்கு ஒரு முக்கிய காரணத்தை இத்துடன் இருக்கும் கடிதத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்வாய்.

உன் தோழி சீதா உன்னைப் பார்க்க வருவதாகச் சொல்லிப் பயமுறுத்தியிருக்கிறாள். அவள் வரும்போது நீ இங்கே இல்லாமல் இருந்தால் என்னால் என்ன செய்ய முடியும்? அதைப் பற்றி நினைத்தாலே எனக்குப் பயமா யிருக்கிறது. ஸ்ரீமதி சீதா புது டில்லி முதலான இடங்களில் இருந்து நாகரிக வாழ்க்கைக்குப் பழக்கப்பட்டவள். நானோ சுத்தக் கர்நாடக மனிதன். ஆகையால் ஸ்ரீமதி சீதா தேவியை வரவேற்று உபசரிக்கும் விதம் எனக்கு எவ்விதம் தெரியும் ?

ஆகையினால் இந்தக் கடிதம் பார்த்தவுடன் அப்பா — அம்மாவிடம் நல்லபடியாகச் சொல்லி விடைபெற்றுக்கொண்டு வந்து சேரவும். சீமாச்சுவய்யர் உன்னைப் பத்திரமாக அழைத்துக் கொண்டு வந்து விடுவதாக வாக்குறுதி கொடுத்திருக்கிறார்.

இங்ஙனம்,
பட்டாபிராமன்''

மேற்படி கடிதத்தைப் படித்து வந்த போது அதில் பல விஷயங்கள் எழுதியிருந்த போதிலும், ''சீதா வருகிறாள்'' என்னும் ஒரு விஷயமே லலிதாவின் மனத்தில் தங்கியது. கணவன் கடிதத்தைப் படித்து முடிந்ததும் அடங்கா ஆர்வத்துடன் சீதாவின் கடிதத்தைப் படிக்கத் தொடங்கினாள்.

அப்போது காமரா அறையிலிருந்து, ''லலிதா!'' என்று அப்பா அருமையாக அழைக்கும் குரல் கேட்கவே, லலிதா கடிதத்தைப் படித்தவண்ணமே உள்ளே சென்றாள்.

அவளைப் பார்த்தவுடன் கிட்டாவய்யர், ''லலிதா! எனக்கு ஏதாவது கடிதம் உண்டா? கையில் இரண்டு கடிதங்கள் வைத்திருக்கிறாய் போலிருக்கிறதே ! இரண்டும் உனக்கு வந்தது தானா ? யார் கடிதம் எழுதியிருக்கிறார்கள்?'' என்று கேட்டார்.

'' ஒரு கடிதம் தேவப்பட்டணத்திலிருந்து இவர் எழுதியிருக்கிறார். இன்னொன்று அத்தங்கா சீதா எழுதிய கடிதம், அப்பா! கல்கத்தாவில் சித்ராவின் வீட்டிலிருந்து எழுதியிருக்கிறாள். சீக்கிரத்தில் அவளுடைய பெண்ணைப் பார்க்க மதராஸுக்கு வருகிறாளாம். அப்படியே தேவப்பட்டணத்துக்கும் வருவதாக எழுதியிருக்கிறாள்....''

''ஓகோ! அப்படியா? சீதா கடிதம் எழுதியிருக்கிறாளா? பாவம் ! கொஞ்ச நாட்களாய் அவளைப் பற்றி ஒரு தகவலும் தெரியாமல் இருந்தது. அவளை ஒரு தடவை பார்க்க வேண்டும் என்ற சபலம் எனக்குக்கூட உண்டு. அவளைப் பார்த்துச் சில புத்திமதிகள் சொல்ல வேண்டும் என்று இருக்கிறேன். தேவப்பட்டணத்துக்குச் சீதா வந்தால் இங்கேயும் ஒரு தடவை வரச் சொல்கிறாயா, லலிதா! எனக்குத்தான் இன்னும் ஒரு மாதம் வெளியில் புறப்பட முடியாது போலிருக்கிறது!'' என்றார் கிட்டாவய்யர்.

''ஆகட்டும், அப்பா! வரச் சொல்கிறேன். இப்போது நான் ஊருக்குப் புறப்படலாமா, அப்பா! சீதா வருகிறதாக எழுதியிருக்கிறபடியால் என்னைச் சீக்கிரம் புறப்பட்டு வரச் சொல்லி இவர் எழுதியிருக்கிறார். உங்களை இப்படி விட்டு விட்டுப் போக எனக்கு மனசு கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஆனபோதிலும்.......''

'' நீ போக வேண்டியதுதான், லலிதா ! சீக்கிரம் புறப்பட வேண்டிடியதுதான். மாப்பிள்ளை இரண்டு வருஷங்கள் ஜெயிலில் இருந்துவிட்டு இப்போதுதான் வந்திருக்கிறார். அவரை எத்தனை நாட்கள் நீ தனியாக விட்டு விட்டு இருக்க முடியும்? சீதாவும் வருகிறதாகச் சொல்லி இருக்கிறபடியால் அவசியம் போகத்தான் வேண்டும். எனக்குக்கூட ஒவ்வொரு சமயம் தேவப்பட்டணத்துக்கே வந்து விடலாமா என்று தோன்றுகிறது. இந்த ஊரில் எனக்கு இனிமேல் நிம்மதி இராது! எங்கேயாவது போனால்தான் மனம் சாந்தி அடையும்.''

''அதற்கென்ன அப்பா! பேஷாக வாருங்கள்! நீங்கள் தேவப்பட்டணத்துக்கு வருவதற்கு யாரைக் கேட்கணும்? நான் நாளைக்குப் புறப்படுகிறேன். இன்றைக்கு அவருக்கு ஒரு பதில் எழுதிவிட்டு வருகிறேன். தபால் ஆபீஸில் தபால் கட்டும் சமயம் ஆகிவிட்டது!''

இவ்விதம் சொல்லி விட்டு லலிதா உள்ளே போய்க் கடிதம் ஒன்று எழுதத் தொடங்கினாள். அப்போது அவளுடைய செல்வக் குமரி பட்டுவும் அவளுடைய புத்திரன் பாலசுப்பிரமணியனும் அம்மாவின் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டார்கள்.

''அம்மா! அப்பாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறதா?'' என்று பட்டு மெதுவாகக் கேட்டாள்.

''ஆமாம்! இந்தா படி!'' என்று லலிதா கடிதத்தை எடுத்துப் பட்டுவிடம் கொடுத்தாள். பட்டு தட்டுத் தடுமாறி அதில் ஒரு வரி படித்துவிட்டு, ''அப்பா கோணலும் மாணலுமாய்க்

கிறுக்கித் தள்ளுகிறார். எனக்குப் புரிய வில்லை. இந்த இன்னொரு கடிதம் யார் எழுதியது?'' என்று கேட்டாள்.

''அதுவா? சீதா அத்தங்கா எழுதி யது!'' என்றாள் லலிதா.

''சீதா அத்தங்கா என்றால் யார்?'' என்று பட்டு கேட்டாள்.

''சீதா அத்தங்கா என்னுடைய அத்தையின் மகள். ரேழி அறையில் தாத்தா படுத்துக் கொண்டிருக்கிறார், பாரு அவருக்கு ஒரு தங்கை இருந்தாள். அவள் தான் எனக்கு அத்தை. அவளுடைய பெண் சீதா! சீக்கிரத்தில் உங்கள் இரண்டு பேரையும் பார்ப்பதற்கு வருவதாகச் சொல்லியிருக்கிறாள். அதற்குள்ளே நீங்கள் இரண்டுபேரும் சமர்த்தாக ஆகிவிட வேண்டும். நச்சுபிச்சு என்று வந்தவர்களை ஏதாவது கேள்வி கேட்டுக்கொண்டே இருக்கக் கூடாது.''

''இல்லை; நான் கேள்வி கேட்கவில்லை அம்மா! சீதா அத்தங்காவை நான் பார்த்ததே கிடையாதே! எப்படி அம்மா அவள் இருப்பாள்?''

லலிதாவுக்குச் சட்டென்று ஓர் எண்ணம் உதித்தது. பாதி எழுதியிருந்த கடிதத்தை அப்படியே வைத்துவிட்டுக் கூடத்துக் காமிரா அறைக்குள் போனாள். அங்கே இருந்த ஒரு பழைய அலமாரியைத் திறந்து அதில் அடைத்து வைத்திருந்த குப்பைக் கூளங்களில் கையை விட்டுத் தேடினாள். கடைசியாக, ஒரு மங்கிப் போயிருந்த போட்டோப் படத்தை எடுத்துக் கொண்டு வந்தாள். இரண்டு பக்கமும் இரண்டு குழந்தைகள் உட்கார்ந்திருக்க அந்தப் புகைப்படத்தைக் காட்டி, ''இதோ பார்த்தாயா, பட்டு! இதுதான் சீதா அத்தங்கா! இது தான் நான்! சிறு பிராயத்தில் நாங்கள் இரண்டு பேரும் ரொம்பச் சிநேகமாக இருந்தோம். எங்களுக்குக் கல்யாணம் ஆன சமயத்தில் இந்தப் படம் எடுத்தது. குளத்தங்கரைப் பங்களாவுக்குப் போய் அடிக்கடி பேசிக் கொண்டிருப்போம். அதையெல்லாம் நினைத்தால் இப்போது சொப்பனம் மாதிரி இருக்கிறது'' என்றாள்.

இந்தச் சமயத்தில் சரஸ்வதி அம்மாள் கிட்டாவய்யருக்குச் சாப்பாடு கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வந்தாள். வரும்போதே, ''ஏண்டி லலிதா! இதென்னடி நான் கேள்விப்படுகிறது? இந்தப் பிராமணர் சொல்லுகிறது நிஜமா? தேவப்பட்டணத்துக்குச் சீதா வரப்போகிறாளாமே வாஸ்தவம்தானா?'' என்று இரைந்து கொண்டு வந்தாள்.

''ஆமாம், அம்மா! சீதா வருகிறாள்! அதற்காக நீ ஏன் இவ்வளவு இரைச்சல் போடுகிறாய்?'' என்றாள் லலிதா.

''நானா இரைச்சல் போடுகிறேன்? அழகாய்த்தான் இருக்கிறது. நீ மாத்திரம் என்னிடம் சொல்லாமல் மறைக்கலாமாக்கும்! அந்தத் துக்கிரி இப்போது எதற்காக வருகிறாள்? யார் அவளை வரச் சொன்னார்கள்? அவள் வரவில்லை என்று யார் அழுதார்கள்? லலிதா! நான் சொல்லுகிறதைக் கேள். இங்கே இப்பொழுது சௌகரியமில்லை. ஆகையால் வரவேண்டாம் என்று உடனே கடிதம் எழுதிப் போட்டு விடு!''

''அம்மா! சீதா இந்த ஊருக்கு வரவில்லை. என்னையும் என் குழந்தைகளையும் பார்க்கத் தேவப்பட்டணத்துக்குத் தான் அவள் வருகிறாள். நீ எதற்காக வீணாய்ச் சண்டை பிடிக்கிறாய்?''

''அப்படியானால் நான் வேறு நீ வேறா என்று கேட்கிறேன். நான் உன்னைப் பெற்ற தாயார் இல்லையா? உன்னுடைய குழந்தைகள் என்னுடைய பேரன் பேத்திகள் இல்லையா? ஏன்தான் இப்படி என்னைக் கண்டு கரிக்கிறீர்களோ தெரியவில்லை...''

''உனக்குச் சீதா அத்தங்காவை எப்போதும் பிடிக்கிறது கிடையாது. அதனாலேதான் சொன்னேன்.''

''அதனாலேதான் நானும் கேட்கிறேன். எனக்குப் பிடிக்காதவள் உனக்கு மட்டும் எதற்காகப் பிடித்திருக்க வேணும்? நான் சொல்கிறதைக் கேள், லலிதா! அவள் ரொம்பத் துக்கிரி. மனத்தில் நல்ல எண்ணம் கிடையாது. பாம்புக்குப் பாலைக் கொடுத்தாலும் அது விஷத்தைத்தான் கக்கும். இந்தச் சமயம் தேவப்பட்டணத்துக்குக்கூட வர வேண்டியதில்லை என்று உடனே எழுதி விடு. இன்றையத் தபாலிலேயே கடிதத்தைச் சேர்த்துவிடு. தெரிகிறதா?...''

இந்தச் சமயத்தில் வாசலில் மாட்டு வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

''வண்டிச் சத்தம் கேட்கிறதே! யார் வந்திருப்பார்கள்? நேற்றைக்கு முற்றத்தில் காக்காய் கத்தியபோதே எனக்குத் தெரியும், யாராவது விருந்தாளிகள் வந்து நிற்பார்கள் என்று. பட்டு! நீ போய்ப் பாரடி அம்மா!''

பட்டுவோடு லலிதாவும் எழுந்து வாசற் பக்கம் போனாள். வண்டியிலிருந்து இறங்கியவர்களைப் பார்த்ததும் லலிதாவின் அதிசயமும் மகிழ்ச்சியும் அளவு கடந்து பொங்கின. (தொடரும்)

# சிதைய விடலாமா, சிம்மேந்திரனை?

ஜனார்த்தனன்





சிங்கங்கள் இயற்கையான சூழ்நிலையில் வசிப்பதை ஆசியாவிலேயே பாரதத்தின் குஜராத் மாநிலத்தில் உள்ள ஜுனகட் மாவட்டத்தின் கிர் காட்டில் (Gir Forest) மட்டும்தான் காண முடியும். இக் காட்டில் வசித்து வரும் சிங்கங்களின் தற்போதைய எண்ணிக்கை 177 என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.

கிர் காட்டில் வசிக்கும் சிங்கம் ஆரம்பத்தில் ஆப்பிரிக்கச் சிங்கங்களை ஒத்திருந்தபோதிலும், பல நூற்றுண்டுகளாகப் பாரதத்தில் வசித்து வருவதன் காரணமாக இங்குள்ள சீதோஷ்ண நிலை, சூழல் இவற்றுக்குத் தக்கபடி அவற்றின் தோற்றத்திலும் குணங்களிலும் சில மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. கிர் காட்டுச் சிங்கம் சுமார் ஒன்பதரை அடி நீளமுள்ள பலமுள்ள மிருகமாகும். அதன் பிடரி மயிர் குட்டையாக இருக்கும். ஏழெட்டு சிங்கங்கள் ஒன்று சேர்ந்து கூட்டமாக ஆறுகளின் ஓரமாக வளர்ந்துள்ள அடர்த்தியான மரப் புதர்களில் வசிக்கின்றன. ஒவ்வொரு கூட்டமும் பொதுவாக ஒரே குடும்பத்தைச் சேர்ந்ததாக இருக்கும்.

சிங்கங்கள் ஓய்வெடுக்கும்பொழுது அவற்றின் குட்டிகள் முகங்களை நக்கிக் கொடுத்தும், உடல்களை முட்டி இடித்துக் கொடுத்தும் தம் உடல் மேல் ஏறி விளையாடுவதையும் விரும்புகின்றன. பிடித்த இரையை உண்ணும்பொழுது முதலில் ஆண் சிங்கமும், பெண் சிங்கமும் வயிறு நிறைய உண்ணும்வரை காத்திருந்து பின்னர் சிங்கக் குட்டிகள் உண்ணுகின்றன.

நன்கு வளர்ந்த சிங்கம் 400 முதல் 500 பவுண்டு எடையுள்ளதாக விளங்குகிறது. சுமார் இருபத்தைந்து ஆண்டுகள் உயிருடனிருக்கும் சிங்கம் நான்கு வயதானவுடன் வயது வந்ததாகக் கருதப்படுகிறது. இரண்டரை வயதில் பெண் சிங்கம் மகப் பேறு பெற்று ஒரு தடவைக்கு இரண்டு அல்லது மூன்று குட்டிகளை ஈன்று விடுவது வழக்கம்.

சிங்கங்கள் பதினொரு அடி தூரம் வரை தாண்டக்கூடிய சக்தியுடையவை. அவற்றுக்கு ஒரே அடியில் முழு வளர்ச்சி பெற்ற ஓர் எருமையை அடித்துக் கொல்வதற்குப் பலமுண்டு.

மற்ற மிருகங்களைப் பார்க்கும்பொழுது, சிங்கம் பல விதங்களில் தனிச் சிறப்புடையதாகத் திகழ்கிறது. வயிறு நிறைந்திருக்கும் பொழுது தன் அருகில் வரும் எந்தப் பிராணியையும் சிங்கம் தீண்டுவதில்லை. இதுவரை சிங்கம் சீண்டப்படாதபோது தானாகவே எந்த மனிதனையும் தாக்கியதாகத் தெரியவில்லை. வழி தவறிச் சென்றாலோ அல்லது பட்டினி கிடக்க நேர்ந்தாலோ ஒழிய மனிதர்கள் வசிக்கும் பிராந்தியங்களைச் சிங்கங்கள் எட்டியும் பார்ப்பதில்லை. சாதாரணமாக மனிதர்களின் பார்வைக்குத் தென்படுவதையே அவை விரும்புவதில்லை. மனிதன் கொடுக்கக் கூடிய உணவை இலட்சியம் செய்யாமல் தாமாக வேட்டையாடி உண்பதையே சிங்கங்கள் விரும்புகின்றன.

சிங்கங்களுக்கு மோப்ப சக்தி மிக அதிகம். குடும்பத்தை விட்டுப் பிரிந்துவிடும் பொழுது அவை மோப்பம் பிடித்துத் தம் குடும்பத்தைத் தேடித் திரும்பி வந்து விடுகின்றன. அதே சமயம் தொலை தூரத்தில் வரும் மற்றப் பிராணிகளையும் மோப்ப சக்தியின் மூலம் கண்டறிகின்றன. சிங்கத்தின் கண்கள், முகத்தைத் திருப்பாமலேயே பக்க வாட்டிலும் பார்க்க வசதியாக அமைந்துள்ளன. ஒரு தனிப்பட்ட உறுமலின் மூலம், பிரிந்துவிடும் தம் குடும்பத்தாரைத் தன்னிடம் திரும்ப அழைத்துக்கொள்ளும் ஆற்றலும் சிங்கங்களுக்கு உண்டு.







1. கிர் காட்டில் ஆண் சிங்கம்.
2. எம். ஜி. எம். நிறுவனத்தின் சிங்கம் — ஸ்டூடியோ செட்டில் நடிகைகளுடன்.
3. கிர் காட்டில் கூட்டமாக வாழும் சிங்கங்கள்.
4. சிங்க ராணி.
5. 'நெஸ்' பகுதியில் வசிக்கும் மால்தாரிகள்.
6. கே. எஸ். ஸங்காலா.

[படங்கள் : 3, 4, டி. காசிநாத்.]

கடந்த 1961ம் ஆண்டு கணக்கெடுத்ததில் கிர் காட்டில் மொத்தம் 177 சிங்கங்கள் இருப்பதாகத் தெரிய வந்தது. அழிக்க முடியாத மை நிரப்பப்பட்ட தோட்டாக்களை அழுத்தம் நிறைந்த (Compressed) துப்பாக்கிகளின் உதவியால் சிங்கங்களின் மீது செலுத்தி அவற்றின் உடலில் ஓர் அழியாத அடையாளத்தைப் பொறித்துச் சிங்கங்களின் எண்ணிக்கையைக் கணக்கிடுகிறார்கள். இதே போல் மயக்க மருந்துள்ள தோட்டாக்களைச் செலுத்தி நோயுற்ற சிங்கங்களைச் சுமார் அரை மணி நேரம் மயக்கமுறச் செய்து சிகிச்சை செய்வதுண்டு.

சில ஆண்டுகளுக்கு முன் கிர் காட்டில் தங்கிச் சிங்கங்களின் நடத்தையைப் பற்றி ஆராய்ச்சி செய்தார் டாக்டர் நீல் டாட் என்ற அமெரிக்க விஞ்ஞானி.

கிர் காட்டில் நடத்தப்பட்ட ஆராய்ச்சிகளின் மூலம் சிங்கங்களின் எண்ணிக்கை குறைந்து வருவதற்கான காரணங்கள் தெரிய வருகின்றன. கடந்த பல ஆண்டுகளாக மூத்நாளைய சமஸ்தான இளவரசர்களும் பிரிட்டிஷ் கவர்னர்களும் வைசிராய்களும் வேட்டையாடு வதற்குக் கிர் காட்டுக்கு வருவதுண்டு. கடந்த நூற்றாண்டில் கிர் காட்டின் பரப்பு இப்போ இருப்பதை விட மூன்று மடங்காக இருந்ததாகக் கூறப்படுகிறது. காட்டின் பரப்பளவு குறைந்ததே ஒழிய மக்களின் ஜனத்தொகை அன்றைக்கு இன்று அதிகரித்துள்ளது. இதன் காரணமாகக் கிர் காட்டுப் பகுதியைச் சுற்றிலுமுள்ள பிராந்தியம் பாசன நிலமாக மாற்றப்பட்டுள்ளது.

கிர் காட்டில் 'நெஸ்' என்று அழைக்கப்படும் பிரதேசத்தில் இருபத்தையாயிரத்துக்கும் அதிகமான எண்ணிக்கையுள்ள மால்தாரிகள் என்ற மாடு மேய்க்கும் வகுப்பினர் வசித்து வருகின்றனர். இக் காட்டில் ஆண்டொன்றுக்குச் சுமார் எண்பது லட்சம் டன் புல் விளைவதாக ஆராய்ச்சியாளர்கள் கணக்கிட்டிருக்கிறார்கள். ஆயினும் என்ன? இந்த அடர்ந்த புல்லில் தொண்ணூறு சதவிகிதத்தை மால்தாரிகளின் ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட ஆடு மாடுகள் மேய்ந்து விடுகின்றன. நான்கு சதவிகிதம்தான் சிங்கங்களின் இரையாக அமையும். காட்டு மான், பன்றி முதலிய காட்டு மிருகங்களுக்கு உணவாக உபயோகப்படுகிறது. போதாக் குறைக்குக் குஜராத் மாநிலமே அடிக்கடி வறட்சியால் பாதிக்கப்படுகிறது.

சுபாவமாக, சிங்கங்கள் தங்களுக்குக் காட்டு மிருகங்கள் கிடைத்தால் ஆடு மாடு முதலிய வீட்டு மிருகங்களை வேட்டையாடித் தின்ப






36 வயலின், 8 மிருதங்கம், 4 பியானோ, 8 டோல் 10 தபேலா, 9 ஹார்மோனியம், 15 மாண்டலின், 6 புல்புல் தாரா, 2 ஜலதரங்கம், 3 மௌத் ஆர்கன், 5 ஷெனாய், 4 சிதார் வாத்தியங்களுடன் லைட் மியூசிக் நேற்று நடந்தது. இன்று வீணை, மிருதங்கத்துடன்......."

"ஸ்ட்ராங்க் மியூசிக்கா?"

இல்லை. இரவில் உணவு கிடைத்தால் பகலில் அவை இரையைத் தேடி அலைவதுமில்லை.

பம்பாய் இயற்கை வள சரித்திர சங்கம் (Bombay Natural History Society) அமெரிக்காவின் ஏல் (Yale) சர்வ கலாசாலையின் ஒத்துழைப்புடன் கிர் காட்டுச் சிங்கங்களின் இருநூறு மலக் குவியல்களைப் பரிசோதித்து அவற்றில் அகப்படும் உரோமங்களைக் கொண்டு அதிகமாகக் காட்டு மிருகங்களை உண்கின்றனவா அல்லது வளர்ப்பு மிருகங்களை அடித்து உண்கின்றனவா என்பன போன்ற ஆராய்ச்சிகளை நடத்தி யிருக்கிறது.

கிர் காட்டுப் பிரதேசத்தில் வசிக்கும் வகுப்பினர் சிலர் மால்தாரிகளுடன் சேர்ந்து கொண்டு சிங்கங்கள் ஆடு மாடுகளைக் கொன்றவுடன் அவற்றை உண்ண விடாமல் விரட்டியடித்து விடுகின்றனர். கொல்லப்பட்ட மிருகத்தின் தோல்களை உரித்துக் கொடுத்து விட்டு மாமிசத்தை எடுத்துச் சென்று விடுகின்றனர். தோல் உனக்கு, புலால் எனக்கு என்ற ரீதியில் இது குத்தகை வியாபாரமாகவே கூட நடக்கிறது. இது போதாதென்று நூற்றுக் கணக்கான ராஜாளிக் கழுகுகள் சிங்கம் வேட்டையாடிக் கொன்ற பிராணிகளின் மாமிசத்தை நொடிப் பொழுதில் தின்று தீர்க்கக் காத்திருக்கின்றன. இருநூறு பவுண்டு எடையுள்ள ஓர் எருமையை அரை மணி நேரத்தில் ராஜாளிக் கழுகுகள் வெறும் எலும்புக் கூடாக்கி விடும்.

சிங்கங்களின் எண்ணிக்கை குறையாதிருக்கக் கிர் காட்டின் 125 சதுர கிலோ மீட்டர் பகுதியைத் தேசிய 'பூங்கா'வாக்கிச் சிங்கங்களைப் பராமரிக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. கிர் காட்டிலுள்ள 177 சிங்கங்களும் பதினைந்து கூட்டங்களாக வசித்து வருவதாகக் கூறப்படுகிறது. இவ்வாறு கூட்டமாக வசிக்கும்போது கிழடு தட்டிய, நோயுற்ற அல்லது காயமுற்ற ஆண் சிங்கம் தன் குழுவிலுள்ள மற்றச் சிங்கங்கள் கொல்லும் மிருகத்தையே உண்ணுகிறது. கொல்லப்பட்ட மிருகம் சிறியதாக இருக்க நேரிட்டால் கூட்டத்திலுள்ள பலசாலியான சிங்கங்கள் அதைத் தின்று விடும். தைரியமில்லாத பலவீனமான சிங்கக் குட்டிகள் இரை கிடைக்கப் பெறாமல் பட்டினியால் வாடி இறந்து விடுவதுமுண்டு.

ஒரு சிங்கக் கூட்டம் வசிப்பதற்குக் குறைந்தது ஒரு சதுர கிலோமீட்டர் பரப்பளவுள்ள நிலம் தேவை. ஆகவே, 125 சதுர கிலோ மீட்டர் பரப்பைத் தேசிய 'பூங்கா'வாக்க உத்தேசித்திருப்பது, கிர்காட்டுச் சிங்கங்கள் வசிப்பதற்குப் போதுமானதாகத் தெரியவில்லை.'

பாரதத்தில் சிங்கங்களின் எண்ணிக்கையைப் பெருக்க, 1957ம் ஆண்டில் ஒரு புதுமையான முயற்சிமேற்கொள்ளப்பட்டது. கிர் காட்டிலிருந்து சில சிங்கங்களைப் பிடித்துக் கொண்டு போய் உத்தரப் பிரதேசத்தில் வாரணாசிக்கருகே உள்ள சாகியா காட்டுப் பகுதியில் சந்திரபிரபா நதிக் கரையிலுள்ள வன விலங்கு சரணாலயத்தில் விட்டனர். இந்தப் பகைமைச் சூழலில் சிங்கங்கள் சிரமமின்றி இரை தேடி உண்டு இனவிருத்தி செய்து வாழும் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் அவற்றில் ஒன்றுகூடத் தற்சமயம் உயிருடன் இருப்பதாகத் தெரியவில்லை. அப்பிராந்தியத்தைச் சுற்றிலும் உள்ள கிராமவாசிகள் அவற்றை விஷமிட்டுக் கொன்றிருக்கக் கூடும் என்று யூகிக்கப்படுகிறது. விந்திய மலைச் சாரலில் விஜய்நகர் காட்டில் சிங்கங்களை வளரவிடும் யோசனையை உத்தரப் பிரதேச மாநில அரசு தற்போது பரிசீலித்து வருகிறது.

கிர் காட்டில் சிங்கங்கள் இயற்கைச் சூழ்நிலையில் வசிப்பதை இருபது கெஜ தூரத்திலிருந்து மக்கள் கண்டுகளிப்பதற்கான வசதிகளைக் குஜராத் மாநில அரசு செய்து கொடுத்திருக்கிறது. அவற்றை அருகிலிருந்து புகைப்படம் எடுக்கவும் வசதிகள் உண்டு.

சமீப காலம் வரை தில்லி மிருகக் காட்சிச் சாலையின் டைரக்டராகப் பணிபுரிந்த கே. எஸ். ஸங்காலா என்பவர் பாரதத்தின் காட்டு மிருகங்களைப் பற்றி நன்கறிந்தவர். அவர் நேருஜியின் பெயரால் ஆராய்ச்சிகளுக்கென வழங்கப்படும் மான்யம் பெற்றுச் சிங்கங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்து வருகிறார்.

பலவித இடையூறுகளுக்கிடையில் வாழ்ந்தும் பலவிதங்களில் பெருமை பெற்றுள்ள கிர் காட்டுச் சிங்கங்கள் உலகத்தின் பல மிருகக் காட்சி சாலைகளில் உள்ளன. அமெரிக்க நிறுவனமான எம். ஜி. எம். திரைப்பட ஸ்டுடியோ, தனது திரைப்படங்களிலெல்லாம் ஆரம்பத்தில் காட்டும் சின்னம் ஒரு கிர் சிங்கமே. இதற்காக அங்கு ஒரு சிங்கம் வளர்க்கப்பட்டு வருகிறது.

அது மட்டுமா? அநேகமாகப் பாரதத்தின் எல்லாக் கோயில்களிலும் சிற்ப வடிவில் இடம் பெற்றிருக்கும் அன்னை பராசக்தியின் வாகனமாகிய சிங்கம், பாரத அரசாங்கத்தின் சின்னமாக விளங்கும் அசோக ஸ்தூபியிலும் விளங்கிப் பெருமையுற்றிருக்கிறது. இத்தகைய சிறப்புக்களுடைய சிம்மேந்திரன் வம்சம் சிதைந்து போகாமல் காத்து வர வேண்டியது நம் கடமை.

# மூன்று முடிச்சுக்கள்



கே.பாலசந்தர்



## முன்னுரை

கல்கி வாசகப் பெருமக்களுடன் இந்தத் தொடர் சித்திரத்தின் மூலம் தொடர்பு கொள்வதில் பெருமையும் பூரிப்பும் அடைகிறேன். இந்தத் தொடர் சித்திரத்தின் முதல் அத்தியாயத்தை எழுதத் தொடங்குகின்ற நேரத்திலேதான் பெருமதிப்புக்குரிய ராஜாஜி அவர்களின் உடல் நிலை மிகவும் கவலைக்கிடமாகி விட்டது என்ற செய்தியும் சிறிது நேரத்துக்கெல்லாம் அவர் அமரராகிவிட்டார் என்ற துயரச் செய்தியும் வானொலியில் ஒலிபரப்பப்பட்டு இந்திய மக்கள் அனைவரையுமே பெரும் துயரத்தில் ஆழ்த்தின.

கல்கி பத்திரிகையின் வளர்ச்சியில் பெருமளவில் பங்கு கொண்டவரும், அதனுடன் நெருக்கமான தொடர்பு கொண்டவருமான மாமேதை ராஜாஜி அவர்களை எனது முன்னுரையில் இந்தச் சந்தர்ப்பத்தில் நினைவுபடுத்திக் கொள்வதை எனது கடமையாகக் கருதுகிறேன். A Statesman is one who tries to do something for everybody; while a politician is one who tries to do everybody for something. என்று ஆங்கிலத்தில் ஒரு ஹாஸ்யப் பொன்மொழி உண்டு.

ஆம்! ராஜாஜி அவர்கள் பெரிய ராஜநீதி நிபுணர். வெறும் அரசியல் வாதியல்ல! இந்த நூற்றாண்டின் தலைசிறந்த சிந்தனைவாதியும் 'பாரத ரத்னா'வுமான ராஜாஜி அவர்கள் சரித்திரம் படைத்த உலகத் தலைவர்களிலே ஒருவர் என்பதை மாற்றுக் கட்சியில் இருப்பவர்களும் மறுக்க மாட்டார்கள்; அவரால் ''முதல் விரோதி''யாகக் கருதப்பட்டவர்களும் மறுக்கமாட்டார்கள்.

1939ம் ஆண்டு என்று நினைக்கிறேன். அப்பொழுது எனக்கு ஒன்பது வயது. தஞ்சை மாவட்டத்தில் நன்னிலம் என்ற எங்கள் ஊரில் ஒரு பொதுக் கூட்டம் ஏற்பாடாகியிருந்தது. ராஜாஜி அவர்கள் அன்று ஒரு சொற்பொழிவை நிகழ்த்தினார். அவரைப் பார்ப்பதற்கும் அவருடைய கருத்துக்களைக் கேட்பதற்கும் கூடியிருந்த மக்கள் கூட்டத்தின் மத்தியில் நானும் நின்று கொண்டிருக்கிறேன். ராஜாஜி அவர்கள் பேசுகிறார்கள். மக்கள் ஆரவாரம் எழுப்புகிறார்கள். பேச்சுக்குப் பேச்சு மக்கள் கை தட்டுகிறார்கள். சின்னச் சின்ன வார்த்தைகள்; சின்னச் சின்ன வரிகள்; ராஜாஜி அவர்கள் தமக்கே உரிய பாணியில் ஒரு குட்டிக் கதை சொல்கிறார் மேடையில். எந்த அரசியல் சூழ்நிலைக்கு உவமையாக ராஜாஜி அவர்கள் குட்டிக் கதை கூறினார் என்பது எனக்கு நினைவில்லை! அன்றைய அரசியலைப் புரிந்துகொள்ளும் வயசும் அன்று எனக்கு இல்லை.

ஆனாலும் அவர் பேசிய பாணி, இன்றும் நினைவிருக்கிறது. அந்தப் பாணி என்றும் மாறவில்லை. சின்னச் சின்ன வார்த்தைகளால் கருத்த உவமைகளோடு கருங்கச் சொல்லி விளங்க வைக்கும் பாணி அது. தனித்தன்மை வாய்ந்தது. பேராற்றல் படைத்த அந்த இலக்கியவாதியின் அழகு தமிழ்நடையை, தொடர் சித்திரம் தொடங்குவதற்கு முன்பாக நினைவு கூர்வதில் தவறென்ன இருக்க முடியும்?

திரைப்பட இயக்குனர் என்கிற முறையிலே எனக்கோர் ஆசை எப்பொழுதுமே இருந்ததுண்டு. என்னால் இயக்கப்பட்ட திரைப்படம் ஏதாவது ஒன்றை ராஜாஜி அவர்களைப் பார்க்க வைக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய நெடுநாளைய ஆசை. திரைப்படங்களையே பார்க்காத அவருக்கு, பார்க்கவும் விரும்பாத அவருக்கு (பல ஆண்டுகளுக்கு முன் வெளி வந்த ''ராமராஜ்யா'' என்ற திரைப்படத்தை மட்டும் அவர் பார்த்திருப்பதாக எங்கோ படித்திருக்கிறேன்) எந்தப் படத்தைப் போட்டுக் காட்டுவது என்பதும் என்னுள் எழுந்த பெரிய பிரச்னைதான். அந்த நேரத்தில்தான் காந்தியக் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்ட 'புன்னகை' வெளி வந்தது. அந்தத் திரைப்படத்தை அவருக்கு எப்படியாவது போட்டுக் காட்டிவிட வேண்டும்; அவருடைய பாராட்டுக்களைப் பெற்றுவிட வேண்டும் என்றும் முடிவு செய்து கொண்டேன்! ஆனாலும் அவரை நெருங்கிக் கேட்கவும் எனக்குப் பயம்; பார்த்தபின் அவர் சொல்லக்கூடிய கருத்துக்களை, அபிப்பிராயங்களைத் தாங்கிக் கொள்ளும் சக்தி எனக்கு இருக்கிறதா என்ற யோசனை! ஒருவேளை படத்தைப் பார்த்த பின் "This is not the truth Gandhiji has preached" என்று சொல்லி விட்டுப் போய் விட்டாரானால்?

1952ம் ஆண்டு என்று நினைக்கிறேன். ஒரு பெரிய அமெச்சூர் குழுவின் நாடகம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். ஒரு புராண நாடகம் என்ற

நினைவு. ராஜாஜி அவர்கள் நாடகத்துக்குத் தலைமை தாங்கி நடிகர்களைப் பாராட்டுவார் என்று விளம்பரப்படுத்தப்பட்டிருந்தது.

ராஜாஜி அவர்கள் மேடைக்கு வருகிறார். தலைமை உரை நிகழ்த்துகிறார்:

''நடிகர்கள் அத்தனை பேரும் கஷ்டப்பட்டு நடித்தார்கள். நீங்களும் கஷ்டப்பட்டுப் பார்த்தீர்கள்!''

மெல்லிய சன்னமான குரலில்தான் சொன்னார். நாடகக் கொட்டகை அப்படியே அதிர்ந்து போய்விட்டது!

'புன்னகை' திரைப்படத்தைப் பார்க்க, அவரை நான் அழைக்க அஞ்சியதற்கும் இது தான் காரணமோ?

பின்னால் திரைப்படமாக நான் தயாரிக்க விருக்கும் ''மூன்று முடிச்சுக்கள்'' என்ற இத் தொடர் சித்திரத்தைத் தொடங்கு முன் மறைந்துபோன இம்மாமேதையை நினைவு படுத்திக் கொள்வதில் அர்த்தம் இருக்கிறது. அவர் அமரராகி விட்ட இந்த நேரத்தில் அவர்களின் பாத கமலங்களில் இந்தத் தொடர்ச் சித்திரத்தை அன்புக் காணிக்கை யாகச் செலுத்தி மேலே தொடர்கிறேன்.

எத்தனையோ நாடகங்களை எழுதியிருந்தும் பல கட்டுரைகளைப் பத்திரிகைகளில் எழுதும் வாய்ப்புக் கிட்டி இருந்தும் இந்தத் தொடர் சித்திரத்தை எழுதத் தொடங்கும்போது என் னுள் பயம் எழுகிறது. காரணம்? தொடர் நாவல் போல் எழுதுவது இதுதான் முதல் தடவை! ஆகவே இது என்னுடைய கன்னி முயற்சி! இதைத் தொடர் நாவல் என்று நீங்கள் நினைக்க வேண்டாம்; தொடர் நாவல் எழுதும் பாணி எனக்குப் பழக்கப்பட்டது மல்ல! இதை ஒரு தொடர் நாடகமென்றும் வாசகர்கள் கருதிவிட வேண்டாம்! திரையிலே காணப்படும் திரைக் கதை அமைப் போடும் இதை எழுதப் போவதில்லை.

இது ஒரு புதிய பாணி! ஆகவேதான் தொடர் சித்திரம் என்று கூறிக் கொண்டே வந்திருக்கிறேன். "As for me all I know is that I know nothing" என்று உலகப் புகழ் பெற்ற தத்துவ ஞானி சாக்ரடீஸ் அவர்களே சொல்லியிருக்கும்போது நாமெல்லாம் என்ன சொல்லிக் கொள்ள முடியும்? ஆகவே தெரிந்தவரையில் எழுதப் போகிறேன் என்றுமட்டும் கூறிக் கொள்கிறேன்.

''மூன்று முடிச்சுக்கள்'' — ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் எவ்வளவோ முடிச்சுக்கள்! சிலரின் வாழ்க்கையில் சுலபமாக அவிழ்க்கக் கூடிய முடிச்சுக்கள்! சிலர் வாழ்க்கையில் அவிழ்க்க முடியாத மணி முடிச்சுக்கள். முடிச்சுக்களே இல்லாத போனாலும் வாழ்க்கை ருசிப்பதில்லை! மூன்று முடிச்சுக்கள் ஒன்றாக ஓரிடத்தில் சேரும்பொழுது அது சுபமான முடிச்சாகவும் மாறுகிறது. ஆகவே, முடிச்சுக்கள் தேவைப்படுகின்றன, வாழ்க்கைக்கும் சரி, கதைகளுக்கும் சரி!

''மூன்று முடிச்சுக்கள்'' என்றால் மூன்று கதைகளா? இல்லை யென்றால் ஒரே கதையில் மூன்று முடிச்சுக்களா? அதாவது மூன்று வித மான சிக்கல்களா? இல்லை, மூன்று விதமான உணர்ச்சிப் போராட்டங்களா?

திரைப் படங்களுக்கான பாடல் புத்தகங்களுக்குக் கதைச் சுருக்கம் எழுதிய பழக்கம் போலும், ஒரே கேள்விக் குறிகளாக அமைந்து விட்டன! பாடல் புத்தகத்தில் ''வெள்ளித் திரையில் காண்க'' என்று போடுவோம். இங்கே....

முன்னுரை முற்றும்;

முதல் முடிச்சு தொடங்கும்!




டிங் டாங்! டிங் டாங்! டிங் டாங்!

ஹால் சுவரில் மாட்டியிருந்த கடிகாரம் பதினொன்கு முறைகள் அடித்து ஓய்ந்தது. நூதன முறையில் இரட்டை இரட்டையாக ஒலி எழுப்பும் அந்தக் கடிகாரத்தில் மணி ஏழு என்று அர்த்தம். வாசல்புறத்தை இருள் கவ்விக் கொண்டிருந்தது.

வாசல்புறத்தைப் பார்த்துப் பார்த்து மோகனசுந்தரம் சலிப்படைந்துவிட்டான். அப்பொழுதுதான் படித்து முடித்த ஓர் ஆங்கில நாவலைப் புத்தக அலமாரியில் திருப்பிச் செருகினான். அங்கிருந்தபடியே வாசற்புறத்தை மீண்டும் ஒரு தடவை நோட்டம் விட்டான். வாசல்நிலையில் தொங்க விடப்பட்டிருந்த திரைச்சீலைகூட அசைந்து கொடுக்க வில்லை! காத்துக் காத்து ஏமாந்து போயிருந்த அவனது கண்களின் ஓரத்தில் இப்பொழுது கவலையின் அறிகுறிகள் காணப்பட்டன. சற்று வியர்க்க ஆரம்பித்தது. ஹால் நடுவில் தொங்கும் மின்விசிறியைப் போட எண்ணி அவன் நகர்ந்தான்.

இரீச்... இரீச்... இரீச்...!

மின் விசிறியின் 'ரெகுலேட்டரை' வலது கையால் ஒரு சுற்றுச் சுற்றினான்.



சுவரின் ஓரத்திலிருந்து ஹாலின் நட்ட நடுவே வர நகர்ந்தான்.

கிரீச்! கிரீச்! கிரீச்!

மின் விசிறியின் காற்று இதமாகவே இருந்தது.

மீண்டுமொருமுறை வாசற்படியை நோக்கினான். ஏதோ ஓர் அசைவு! வேறொன்றுமில்லை; திரைச்சீலை மின் விசிறியின் காற்றினால் சற்று அசைந்து கொடுத்தது! அதைத் தவிர வேறெந்த விதமான மாற்றமும் இல்லை; சலனமும் இல்லை!

சாதாரணமாகப் பைரவி ஆறு மணிக்குள்ளாகவே வந்துவிடுவாள்! ஏழு மணி ஆகியும் அன்று மட்டும் அவள் அலுவலகத்திலிருந்து இன்னமும் வீடு திரும்பாதது மோகன சுந்தரத்துக்குக் கவலையை அளிக்கத்தான் செய்தது.

வாசலையே பார்த்துக் கொண்டிருப்பதனால்தானோ என்னவோ அவள் இன்னமும் வரவில்லை; கொஞ்ச நேரமாவது வாசற்படியைப் பார்க்காமல் இருப்போமே! அப்பொழுதாவது வந்துவிடுவாளா? யாருடைய வரவுக்காகவாவது காத்திருக்கின்ற பொழுது எந்த வயதினராக இருந்த போதிலும் சரி, இம்மாதிரி சிறுபிள்ளைத்தனமான எண்ணங்கள் அந்த நேரத்தில் தோன்றுவது இயற்கைதானே! மோகனசுந்தரத்துக்கு அப்படி என்ன வயதாகி விட்டது? முப்பத்திரண்டு இருக்கலாம்! அவனது முகத்தில் இருக்கும் சற்றுக் கனமான மீசை அவனது வயதைக் கொஞ்சம் அதிகமாகப் பறைசாற்றிக் கொண்டிருப்பது வாஸ்தவம். ஆனாலும் முப்பத்தைந்துக்கு அதிகமாக மதிக்க முடியாது. வாசற்படியைப் பார்க்கக் கூடாது என்ற முடிவோடு அவன் திரும்பி உட்கார நினைத்தான்.

கிரீச்; கிரீச்; கிரீச்; கிரீச்!

ஒரு விநாடியில் திரும்பி உட்கார்ந்து விட்டான். அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது. பைரவியின் மீதல்ல!

அவன் உட்கார்ந்திருக்கும் சக்கர நாற்காலியின் மீது! அதுதான் அப்படிக் 'கிரீச் கிரீச்'சென்று சத்தம் எழுப்பிக் கொண்டிருந்தது. அந்தச் சக்கர நாற்காலியில்தான் அவன் வளைய வளைய வர வேண்டும். பரந்து விரிந்து கிடக்கும் உலகத்தை அவனைப் பொறுத்தவரை ஆண்டவன் அந்த நான்கு சுவர்களுக்குள் அடைத்துப் போட்டு விட்டானே! போலீஸ் அதிகாரியாகப் பணி புரிந்த மோகனசுந்தரம் தனது கடமையைச் சிறப்புற ஆற்றிக் கொண்டிருந்த பொழுதுதான் ஒரு காலை இழக்க வேண்டி வந்தது. அதற்காக அவன் இடிந்து போய்விடவில்லை! போலீஸ் அதிகாரிகளுக்கே உரித்தான மிடுக்கும் வைர நெஞ்சமும் இன்றும் அவனிடம் குடிகொண்டிருந்தன. ஏதோ உபகாரச் சம்பளம் கொடுத்து உட்கார்த்தி வைத்துவிட்டார்கள்; அவன் கலங்கவில்லை!

பைரவி இருக்கும்பொழுது அவனுக்கு என்ன குறைவு? அழகே உருவான மனைவி; அன்பே உருவான தாரம்; கணவனைப் பேணிக் காக்கும் கடமையே உருவான காரிகை! பைரவி ராகத்தின் இனிமையைத் தன் மனைவியிடம் கண்டான். மோஹன ராகத்தின் இதத்தைப் பைரவி இவனிடம் கண்டாள். இவர்களுடைய ஜோடிப் பொருத்தம் தான் பலருடைய கண்களைக் குத்தியிருக்கிறதோ என்னவோ! மோகனசுந்தரத்தின் வாழ்க்கையில் சிறிது சுருதி பேதம் ஏற்பட்டது; அவன் தனது காலை இழந்தான்.



ராஜாஜியின் கண்டனத்துக்கு ஆளாவதுகூட ஒரு பெருமைதான்!'' -கென்னத் கால்ப்ரெய்த்



சேலம் நகரிலேயே முதன் முதலாகக் கார் வாங்கி ஓட்டியவர் ராஜாஜி. -கே. ஆர்

பைரவியும் சதா அழுது கொண்டிருக்கவில்லை; முடிவெடுத்தாள். கல்லூரியிலே அவள் பெற்ற பட்டப் படிப்பு இப்பொழுது கைகொடுத்தது. அவள் பி. காம். பாஸ் பண்ணியிருந்தாள்; போதாக்குறைக்கு நேரம் கிடைக்கும் பொழுதெல்லாம் சுருக்கெழுத்தும் தட்டெழுத்தும் படித்து வைத்திருந்தாள். ஒரு 'சார்ட்டர்டு அக்கௌண்டெண்டு' கம்பெனியில் உத்தியோகத்தில் அமர்ந்தாள்.

பைரவி வேலைக்குப் போய்ச் சம்பாதிப்பதை மோகனசுந்தரம் முதலில் வேண்டாம் என்று கருதினான். வீட்டில் 'பிக்கல் பிடுங்கல்' எதுவும் கிடையாது. அவர்கள் இருவரைத் தவிர வேறு யாருமில்லை. ஆகவே எப்படியோ காலத்தை ஓட்டி விடலாம் என்று நினைத்தான். ஆனால் சீக்கிரமே தான் போட்ட கணக்கு தப்பு என்று அவனுக்குப் புரிந்து போயிற்று. அவன் தந்தை விட்டுச் சென்ற அந்த வீடும் கிராமத்திலுள்ள சில காணி நிலமும், அவனது சொத்துக்களாக இருந்த போதிலும் அதிலிருந்து எந்தவிதமான வருவாயும் எதிர்பார்க்க முடியாதென்ற நிலை. அவனுக்குக் கிடைக்கிற உபகாரச் சம்பளத்தில் இருவரும் வாழ்க்கை நடத்திவிடலாம் என்பது காரிய சாத்தியமாக இல்லை. ஆகவேதான் பைரவி ஓர் உத்தியோகத்தில் அமர்ந்து கொள்ள மோகனசுந்தரம் ஒப்புதல் அளித்தான்.

'ஐயா!' என்று குரல் கேட்டுத் திரும்பினான் மோகனசுந்தரம். ''வேலையெல்லாம் முடிஞ்சுபோச்சு எசமான்! நான் வீட்டுக்குப் போகட்டுங்களா?'' புகையிலையை வாய்க்குள் குதப்பியபடி நின்று கொண்டிருந்தாள் வேலைக்காரி அஞ்சலை!

''இன்னும் அம்மா ஆபீஸிலேயிருந்து வரலையே அஞ்சலை!'' என்று சொன்ன மோகன சுந்தரம் அவளது முகத்தில் இலேசாக ஏற்பட்ட ஓர் எரிச்சலை எளிதாகக் கண்டு கொண்டான்.

''அவுங்க எப்போ வருவாங்களோ! எனக்கு நேரமாச்சுய்யா!'' என்று சொல்வது போலிருந்தது அஞ்சலை மௌனமாகப் புகையிலையைக் குதப்பும் விதம்..... குறிப்பைப் புரிந்து கொண்டான் மோகன சுந்தரம். ''நகரும் பொழுது இந்தச் சக்கர நாற்காலி ஒரேயடியாச் சத்தம் போடுது. நாலைக்குக் கொஞ்சம் எண்ணெய் போட்டுவை! இப்போ நீ வீட்டுக்குப் போகலாம்.'' அவளுக்கு விடை கொடுத்து அனுப்பினான்.

வேலைக்காரி இருந்தவரையில் பாத்திரங்களை 'டக்' 'டக்'கென்று வைத்துக் கொண்டிருந்த சத்தமாவது கேட்டுக் கொண்டிருந்தது. இப்பொழுது அந்த ஒலியுமில்லை! 'டிக்' 'டிக்' என்ற சுவர்க் கடிகாரத்தின் சத்தம் மட்டும்தான் எழுந்தது.

பைரவியின் மீது இப்பொழுது முதன் முறையாக அவனுக்குக் கோபம் வந்தது. இன்றைக்கு ஏன் இவ்வளவு தாமதம்? அடுத்த விநாடி அவள்மீது பச்சாத்தாபப்பட்டான்! பாவம் பைரவி! காலையில் எழுந்ததும் ஓடியாடித் தானே சமையல் வேலைகளைச் செய்து முடிக்கிறாள்; பிறகு கணவனுக்குச் செய்ய வேண்டிய சிகிச்சைகள் அத்தனையையும் கவனித்துவிட்டு அலுவலகம் செல்கிறாள். ஆறு மணி வாக்கில் வீடு திரும்புகிறாள்; வரும்பொழுதும் கையில் ஏகப்பட்ட பைல்கள்; இரவு சமையல் செய்து கணவனுக்குப் பரிமாறியபின் அவனைப் படுக்க வைத்துவிட்டு இரவு வெகு நேரம் வரையில் தான் கொண்டு வந்த கடிதங்களை 'டைப்' அடிக்கிறாள்...... டைப் அடிக்கின்ற சத்தம் தனது கணவனுக்குத் தொந்தரவாக இருக்கக் கூடாதென்று டைப்ரைட்டரை மாடி அறையில்தான் வைத்திருக்கிறாள். ஒரு நாளைக்கு எத்தனை மணி நேரம்தான் ஒரு பெண் இப்படிக் கடுமையாக உழைப்பாள்?

மோகனசுந்தரத்தின் கோபம் இப்பொழுது அந்தச் 'சார்ட்டர்டு அக்கவுண்டெண்டு' கம்பெனி முதலாளிகள் மீது திரும்பியது. 'க்ரூயல் ஃபெல்லோஸ்' என்று அவனது வாய் முணுமுணுத்தது.

அவளது குரலைக் கேட்டாலொழிய வாசற்பக்கம் தன் பார்வையைச் செலுத்தப் போவதில்லை என்ற முடிவுக்கு வந்தவனாக மோகனசுந்தரம் மறுபடியும் சக்கர நாற்காலியை வாகவாகத் திருப்பினான். குறுகிய நிருவல்

லிக்கேணி வீதியிலும்கூட விருட்டென்று திரும்பும் ஆட்டோ ரிக்ஷாவைப் போல் சரேலென்று திருப்பிப் புத்தக அலமாரி இருக்குமிடம் நகர்ந்து சென்றது சக்கர நாற்காலி! நேரத்தைப் போக்க வேண்டுமே! இரண்டு விரல்களால் ஒவ்வொரு புத்தகமாகத் தள்ளிக்கொண்டே வந்தான்! எல்லாப் புத்தகங்களையும் ஏற்கனவே அவன் படித்திருக்கிறான்! எதையாவது திருப்பிப் படிக்கலாமா?... ஒரு புத்தகத்தை எடுத்து அவனது விரல்கள் பக்கங்களைப் புரட்டின. 'உலகப் பொன்மொழிகள்' என்ற புத்தகம் அது! இந்தப் புத்தகத்தில் ஒரு சௌகரியம்! எந்தப் பக்கத்தையும் பிரிக்கலாம்; எந்த நேரமும் படிக்கலாம்! முடிக்க வேண்டுமென்பதில்லை! திருப்பி வைத்துவிடலாம்!

பைரவி வரும்வரையில் இதைப் படித்துக் கொண்டிருப்போமே! புத்தகத்தின் கடைசியிலிருந்து பக்கங்களைத் தள்ளிக்கொண்டே வந்தான். 'பெண்' என்ற தலைப்பின் கீழ் வெவ்வேறு அறிஞர்கள் சொன்ன பொன்மொழிகள் ஒரு பக்கத்தில் தரப்பட்டிருந்தன.

**எந்த ஜீவராசியிலும் பெண் இனம் ஆண் இனத்தைவிடக் கொடியது.**

அவன் கண்களில் பட்ட முதல் பொன்மொழி! அவன் உதடுகளில் இலேசாகப் புன்னகை அரும்பியது. அடுத்தது—

**ஆண்டவன் பெண்ணைப் படைத்தான். அந்த நேரத்திலிருந்து வாழ்க்கையில் சலிப்பு ஓடி மறைந்தது. ஆனால் அத்துடன் பல நல்ல விஷயங்களும் ஓடி மறைந்து விட்டன.**

மோகனசுந்தரம் இதை ரசித்தான்; ஆனாலும் இதைச் சொன்ன அறிஞர் மீது சற்று வெறுப்புக் கொண்டான்.

அடுத்தது —

**பெண் எனப்படுபவள் இயற்கை செய்த மாபெரும் தவறு!**

இதிலுள்ள ஹாஸ்யத்தை ரசிக்க மோகனசுந்தரம் தயாராக இல்லை.

அடுத்தது —

**பெண் உன்னுடைய நிழல் போன்றவள். நீ அவளைத் தொடர நினைத்தால் முன்னால் பறந்து செல்வாள்! அவளை விட்டுப் பறந்து ஓடு! உன் பின்னால் அவள் ஓடி வருவாள்.**

மோகனசுந்தரத்துக்குச் 'சுர்'ரென்று கோபம் வந்துவிட்டது! தாய்க் குலத்தைப் பற்றி இப்படியா கண்டபடியெல்லாம் எழுதுவது? தமாஷ் என்றாலும் அதற்கு ஓர் எல்லை கிடையாதா? பெண்வர்க்கத்துக்காக மோகனசுந்தரம் வக்காலத்து வாங்கியவன் போல் எண்ணலானான்: 'இவர்கள் யாருமே என் மனைவி பைரவியைப் பார்த்ததில்லை! பார்த்திருந்தால், அவளைச் சந்தித்திருந்தால் இப்படியெல்லாம் ஹாஸ்யத்துக்காகக்கூட எழுதத் துணியமாட்டார்கள்!'

இதையெல்லாம் சொன்ன அறிஞர்கள் அவன் முன்னால் மட்டும் இருந்



திருந்தால் மோகனசுந்தரம் என்ன செய்திருப்பானோ? ஆனால் இப்பொழுது அவனுக்கு வந்த கோபத்துக்கு ஆளானது அவன் கையிலிருந்த 'உலகப் பொன்மொழிகள்' என்ற அந்தப் புத்தகம்தான். அதை விசிறியடித்தான்.

'சரக்' என்ற சத்தத்துடன் அந்தப் புத்தகம் காற்றைக் கிழித்துக்கொண்டு பாய்ந்து சுவரைத் தாக்கிப் பின்னர் தரையில் விழுந்தது. அதே நேரத்தில் 'டக் டக், டக் டக்'கென்று உயரமான குதிகால்செருப்பு சப்தமிட எழிலோவியமாகப் பைரவி வாசற்படியில் வந்து நின்றாள். **(தொடரும்)**

# சந்திப்பு

## கல்பனா

கிளியந்தட்டு விளையாடின பையன்கள் எல்லோரும் பனியனையும் சட்டையையும் மாட்டிக் கொண்டு கிளம்பிப் போய் விட்டார்கள். மைதானத்தைச் சுற்றியிருக்கிற மாமரங்களுக்குக் கிளிகள் எல்லாம் 'வீடு திரும்பி'யாகி விட்டது.

ஒரு மரம் பாக்கி வைக்காமல், ஒரு கிளை பாக்கி விடாமல் எல்லாவற்றிலுமே ஜோடி ஜோடியாக நெருங்கி நெருங்கி உட்கார்ந்து கொண்டு, லோகத்தையே மறந்து வாய் ஓயாமல் பேசித் தீர்க்கத் தொடங்கின கிளிகள்.

என்னதான் பேச இருக்குமோ? — புதிசாக இப்பத்தான் கல்யாணம் பண்ணிக்கொண்ட புருஷன் — பெண்டாட்டி மாதிரி; 'பேச வேண்டியவைகளை யெல்லாம் இப்பவே பேசித் தீர்த்துடணும்' என்று தீர்மானித்து விட்ட மாதிரி; 'கொள்ளைச் சமாசாரம் இருக்கிறதே: அதற்குள் .எழுந்து போகிறுயே' என்று இழுத்து இழுத்து வைத்துப் பேசுகிற மாதிரி—

''ஐயோ, சித்தே பேசாமல் இருங்களேன்— வாயை மூடிக் கொண்டு'' என்று தலையில் அடித்துக் கொண்டு கத்தவேண்டும் போலிருக்கிறது. ''நான் உங்கள் குரலைக் கேட்கவா தினம் தினம் இங்கே வந்து அலைந்து கொண்டிருக்கிறேன் — ஒரு வருஷமாய்! என் உசிரின் குரலைக் கேட்க அல்லவா? என் தெய்வத்தின் குரலைக் கேட்க அல்லவா? அந்தக் குரல் என்னைத் தேடி வருகிறபோது அதை என் காதிலேயே விழாமல் அடித்து விடுவீர்கள் போல் இருக்கிறதே'' என்று கதற வேண்டும் போலிருக்கிறது.

விஜயன் இருந்தபோது இந்தக் கொல்லைத் தோப்பில் இத்தனை கிளிகள் இல்லை. அய்யனுர் கோயிலைத் தாண்டி, நாகலிங்க மரத்தைத் தாண்டி, அதற்கும் அப்பால் குறுக்குத் துறை கோயில் வரையில் மரங்கள் யாவும் சீமையிலேயிருந்து வந்த ஜெண்டில் மேன் மாதிரி 'கப் சிப்' என்று வாயை மூடிக் கொண்டு நின்று கொண்டிருக்கும்.

குறுக்குத் துறையிலிருந்து கல் பாலத்தின் வழியாக, பாகவதர் கிராப் மாதிரி தலையை விரித்துப் போட்டுக் கொண்டு, ''எவரிணீ'' என்று பாடிக் கொண்டு வருகிற விஜயனின் குரல் கணீரென்று கேட்கும். உடம்பெல்லாம் புல்லரிக்கும்.

தூரத்தில் விஜயனைப் பார்த்த மாத்திரத்திலேயே மெய் உருகிப் போகும். வேஷ்டியும் பனியனும் தும்பைப் பூவாய்ச் சூரிய ஒளியில் 'டால்' அடிக்கும். கழுத்திலே மைனர் செயின் மின்னும். விபூதியும், புருவங்களின் கூடுதுறையின் ஒளிரும் அரகஜாவும் கிட்ட நெருங்க நெருங்க மணமாய் மணக்கும். அப்படியே காலடியில் ஓடிப் போய் விழுந்து 'இந்த விகவ ரூபத்துக்குள் என்னையும் ஐக்கியப்படுத்திக் கொண்டுவிடு, விஜயன்' என்று கதற வேண்டும் போலிருக்கும்.

ஆள் ஆஜானுபாகுவாக இருப்பான்; நல்ல அகலமான மார்பு; தகப்பனுரை விட உயரம். பால் மாதிரி தோல். கண் இரண்டும் பாரதியார் கண்மாதிரி சுடர் விடும். 'அடே போடா — யாருக்கு வேண்டும், இந்தக் கோயில் மடப்பள்ளி உத்தியோகம்? எனக்கு என் சங்கீதமும் நாடகமும்தாண்டா பெரிசு' என்று சொல்கிற மாதிரி ஜ்வலிக்கும்.

எப்பவாவது யானைக்கார சோமு அண்ணன் மூங்கில் குச்சி தேடித் தோப்புக்குள், அய்யனுர் கோயில் கிட்ட வருவார். ''சாமி, சாமி, இப்படி சங்கீதம், நாடகம்னு சதா அலையறீங்களே. அதெல்லாம் சோறு போடுமா? அப்பாரு சொல்லிச் சொல்லி அலுவராரே சாமி'' என்பார்.

''கிட்டப்பாவுக்குச் சோறு போடலியா? சுந்தராம்பாளுக்குச் சோறு போடலியா?



லோக நாயகனே வந்து பொற் காசு கொடுத்துக் கேட்ட இசை ஐயா, நம்ப இசை. என்னை மட்டும் பட்டினி போட்டுருமோ?'' என்று பதில் வரும். ''எப்பவுமே உங்க யானை மேலே தீர்த்தக் குடத்தைத் தூக்கி வைச்சுக்கிட்டு, மடப்பள்ளியிலே அக்காரவடிசலும், சித்ரான்னமும் கலந்துக்கிட்டு நான் கிடப்பேன்னு நினைச்சிங்களா? அதுக்கெல்லாம் பிறக்கலையண்ணே இந்த விஜயன் — ஒரு நாள் இந்த உலகத்தையே ஒரு கலக்குக் கலக்கிட்டு வந்து இதே ஊரிலே, இதே கோயில் மைதானத்திலே, ஆர்மோனிஸ்ட் பக்கத்திலே 'ஜம்' முன்னு நின்னு 'தேடி வந்தேனே — வள்ளி மானே'ன்னு நான் கணீரென்று பாடுகிற போது — அதைக் கேட்டு இந்த ஊர் முழுக்க சயா மயங்கிக் கிடக்கிறபோது — சொல்லுவீங்க!''

'நான் இப்பவே உன் குரலில், அழகில், கம்பீரத்தில் மயங்கிக் கிடக்கிறேனே — விஜி' என்று என் மனசு மருகும்.

''நீ ஊரெல்லாம் சுத்திட்டு வந்து வள்ளியைத் தேடறது இருக்கட்டும், சாமி — இப்ப கண்ணெதிரே நிற்கிற வள்ளியை மட்டும் என்னிக்கும் மறந்துடாமல் இருந்தா போதும். பாவம், குழந்தை உன் மேலே உசிரையே வைச்சிருக்குது'' என்பார் சோமு அண்ணன்.

என் கண்களில் நீர் நிறையும். திரும்பிப் பெருமையோடு என்னைப் பார்க்கிற விஜயன் கண்களில் அது பட்டுவிடும். ''ஆஹா, ஆஹா! இது என்ன? என் பட்டமகிஷியின் கமலக் கண்களிலே நீர்—நீர்—நீர்! — ஏன், ஏன், ஏன்?'' என்று ஆர்ப்பரித்து நாடக பாணியில் எழுவான். ''தம்பி எரிதழல் கொண்டு வா — எம் நங்கை நல்லாள் நயனங்களில் நீர் சுரக்கச் செய்த நீசனின் கையை எரித்திடுவோம்'' என்று முழங்குவான். கண்களைத் துடைக்க வருவான்.

'ஐய்ய — அழகுதான் போ' என்று நகர்ந்து சிரிப்பேன். உடனே பாணி மாறிவிடும். கிட்ட வந்து குழைந்து, ''கன்னியே சிரிப்பதற்கு — காலமெல்லாம் மகிழ்வதற்கு'' என்று முகவாயைப் பிடித்துக் கொண்டே பாடி, என்னைச் சுற்றிச்சுற்றி வந்து ஆடுவான்.

—ஐயோ, கிளிகளே, கொஞ்சம் சத்தம் போடாமல் இருங்களேன்; அதோ என் விஜயன் அப்படிப் பாடுகிறது இப்போகூட எனக்கு நன்றாகக் கேட்கிறதே; காதில் விழாமல் பண்ணுகிறீர்களே....

*　　　*　　　*

இந்தத் தோப்பும் இந்தக் கிலமான அய்யனார் கோவிலும்தான் விஜயனின் அந்தரங்க உலகம். இங்கேதான் ஊர்ப் பையன்களை எல்லாம் திரட்டி வந்து, பாடம் சொல்லிக் கொடுத்து, பேசச் சொல்லிக் கொடுத்து ஒத்திகை நடத்துவான். மண்டையிலே குட்டுவான். 'போங்கடா, பழைய சோத்து ராமன்களா! கட்டாக் கூட உங்களுக்கு நாடகக் கலை வராதுடா'' என்று விரட்டுவான்.

யாரும் வராதபோது, மண் குதிரை மறைவில், என் மடியில் தலை வைத்துப் படுத்துக் கொண்டு, இல்லாத மனக் கோட்டைகள் எல்லாம் கட்டினதும் இங்கேதான்.

'கண்ணே, மணியே' என்று என்னைக் கொஞ்சினதும் இங்கேதான். 'என் தங்கமாச்சே.. என் செல்லமாச்சே... என் பொன்னுக்குட்டியாச்சே... எங்கே.... உம்... உம்' என்று முகத்தை நீட்டிக் கொண்டு வந்ததும் இங்கேதான். 'மண் குதிரை யெல்லாம் பார்த்திண்டிருக்கு; நான் மாட்டேன்' என்று நான் மறுதளித்தும், என்னை விரட்டு விரட்டென்று குதிரைகளைச் சுற்றி விரட்டிப் பிடித்ததும்....

—விஜயன், விஜயன் — அதை யெல்லாம் மறந்து விட்டு எங்கேயோ போய் எப்படியோ இருக்க எப்படி முடிகிறது, உன்னால்...?

வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. ஒரு நாள்.

''மகாராணி, எனக்கு ஒரு யோசனை; ஐடியா! — டாப்கிளாஸ் ஐடியா'' என்று விரலைச் சொடுக்கிக் கொண்டு மடியிலிருந்து துள்ளி எழுந்து உட்கார்ந்து என் மூக்கைப் பிடித்துச் 'சரக்'கென்று இழுத்தான்.

''ஹாங்... ஹாங்... போச்சு, என் மூக்கு போச்சு'' என்று சிணுங்கினேன்.

''கேளு. இதை. இந்தத் தடிராமன்களுக்குப் புடவை கட்டிக்கொடுத்துப் பொம்மனாட்டியா மாத்தி மாரடிக்க நம்மாலே முடியாது. — நீ போட்டுக் கொண்டு விடு, எல்லா ஹீரோயின் வேஷங்களையும் இனிமேலே — என் நாடகங்




கலையையும் விட முடியவில்லை ;
காதலையும் விட முடியவில்லை !



களிலே. இரண்டு பேரும் இட்டப்பா — சுந்த ராம்பாள் மாதிரி இளம்பிப் போய் லோகத் தையே ஜெயிச்சுண்டு வந்துடுவோம் — என்ன சொல்லறே?'' என்றான்.

''ஐய்யய்யய்யோ! நானா? நடிக்கிறதா? எங்கப்பா வெட்டிப் போட்டுடுவார் — பதினு விரம் துண்டமா!... அதெல்லாம் நமக்குக் கட்டுப்படியாகாது, சாமி. வேறே ஆளைப் பாரு'' என்றேன்.

ரொம்ப ஸீரியஸா விழித்துப் பார்த்தான் என்னை. ''நிஜமாச் சொல்றேன். அப்புறம் வேறே ஆளைப்பார்த்துக்கொண்டு விடுவேன்.''

''பார்த்துக்கோயேன் — நாடகத்துக்குத் தானே?''

''மாட்டேன்னு நினைச்சியா? — பார்த் துண்டே இரு'' என்று எழுந்து போனான்.

மறுநாள் அவனை ஊரிலே காணவில்லை. மனசெல்லாம் வேதனை பிடுங்கித் தின்றது. தூக்கமில்லே — சாப்பாடு இல்லே.

ஒரு வாரம் கழித்துப் பட்சணக்காரச் சோன்யா அத்தை வந்து ரகசியமாக ''அடி பெண்ணே! தெரியுமாடீ சேதி? புலிமால் தெருவிலே, நாராயண அண்ணாவி வீட்டு மாடியிலே பெரிசா டேரா போட்டுக்கொண்டு ஆள் படையோடு வந்து இறங்கி யிருக்கான்டி உன் விஜயன் — யாரோ ஒரு மேனா மினுக்கி கூட'' என்கிறாள்.

'ஆங்' என்று பதறிக் கொண்டு ஓடுகிறேன். அண்ணாவி வீட்டு மாடியில் ஜன்னலில் அவன் முகம் தெரிந்தது. அதைப் பார்க்க விடாமல் என்னை இழுத்து வந்து, ''எங்கேடீ வந்தே?'' என்று அதட்டுகிறான் விஜயன்.

''வேறெதற்கு வருவேன்?— உன்னைப் பார்க் கத்தான்'' என்கிறேன்.

''பார்த்தாச்சோல்லியோ? இளம்பு. இனி மேல் நாடகம் முடிகிற வரையில் இங்கெல் லாம் என்னைத் தேடிக் கொண்டு வரக்கூடாது. ஆமாம்'' என்கிறான் அவன்.

''என்னாலே எப்படி உன்னைப் பார்க்காமல் இருக்க முடியும்?''

''எப்படியோ இரு — உன்னோடு சமைச்சுச் சாப்பிட்டுக் கொண்டு, பிள்ளை குட்டிகளைப் பெத்துக் கொண்டு, அம்மா — அப்பா விளை யாட்டு விளையாடிக் கொண்டிருக்க நான் பிறக்கவில்லே. எனக்கு வேறே லட்சியமிருக்கு. தெரிஞ்சுக்கோ.''

எனக்கு அழுகை வந்து விடுகிறது. ''என்ன சொன்னே? இத்தனை நாள் தோப்புக் கும், அய்யனார் கோயிலுக்கும், கண்ட கண்ட இடத்துக்கும் வரச் சொல்லி, மடி மடியாப் படுத்து, ஸ்வீட்டும் காரமுமாப் போடச் சொல்லி, என் நெஞ்சிலே ஆசையைச் சித் திரமா எழுதினயே — அப்போ எங்கே போயிருந்தது உன் இந்த ஞானோதயம்?''

''இரையாதேடீ! என்னமோ ஏதோன்னு எல்லாரும் பார்க்க ஆரம்பிச்சுட்டாடீ!''—

''பார்க்கட்டும்; பார்க்கும்படிதான் என் னைச் சந்தியிலே நிறுத்திவிட்டு நீ போயிடுவே போலிருக்கிறதே — நான் அப்புறம் அரை க்ஷணம்கூட உசிரோடு இருக்க மாட்டேன், தெரிந்துகொள்!''

''என் தங்கமல்லவா, என் ராஜாத்தி அல் லவா?'' என்று இறங்கி வருகிறான். ''உன் தலைமேல் ஆணை. நீதான் எப்பவும் என் பட்ட மகிஷி... ப்ளீஸ்... இப்போ சத்தம் போடா மல் வீட்டுக்குப் போ. எனக்கு நிறைய நாடக வேலை இருக்கு....''

''அப்போ அவ எதுக்கு வந்திருக்கா?— மூஞ்சி யெல்லாம் செவ செவன்னு செங் குரங்கு மாதிரி ஒருத்தி உள்ளே இருந்தாளே— அவ?''

''அவ என் கூட நாடகம் ஆட வந்திருக்கா. பெரிய நடிகை — பிறவி நடிகை. சனிக்கிழமை பாரேன் — எப்பிடி பிரமாதமா நடிக்கிறான்னு. ரைட்... இப்போ நீ வீட்டுக்குப் போடா, கண்ணு...''

அரை மனசாத் திரும்பி வருகிறேன். இளம் பும்போது மறுபடியும் ஏதேகமாகி விட்டதற்கு அறிகுறியாக என் கையைப் பிடித்து அந்த ரங்கமாக அழுத்தி அனுப்பினதை நினைத்துக் கொண்டே திரும்புகிறேன்.

...நாடக மெல்லாம் முடிந்ததும் அவள் போய்விடுவாள். உடனே விஜயனிடம் பேசி, அப்பாவை வந்து பார்த்து முகூர்த்தம் வைக் கச் சொல்லணும்....

சனிக்கிழமை — தேரடி மைதானத்தில் திறந்தவெளி அரங்கில் பிரமாதமாக நடக் கிறது நாடகம். அமர்க்களமாக நடிக்கிறார்கள் விஜயனும், அவளும். என்ன வெட்டு வெட்டு கிறான், என்ன போடு போடுகிறான் — அடி யம்மா, அவள் சரியான பெண்பிள்ளைதான்.

ஆனால் விஜயனைத் தொட்டுத் தொட்டு நடிப்பதுதான் பிடிக்க மாட்டேன் என்கிறது. 'சீ, எடுடி, கையை' என்று கத்தி அவள் கன்னத்தில் இரண்டு அறை விட வேண்டும் போலிருக்கிறது....

பொருமிக் கொண்டே உட்கார்ந்திருக்கி றேன். மைதானத்தில் கூட்டம் பேயாய் நெருக்குகிறது. ''நம்ப விஜயன் நடிக் கிறாண்டா — நம்ப விஜயன் பாடறாண்டா!''

பெருமிதமாகவும் இருக்கிறது — கர வொலிகள் அவன்மீது குவியும்போது.

திரும்பி வருகிறேன் — ஆனந்தக் கண்ணீ ருடன். பேரிடி காத்திருக்கிறது வீட்டில்.

அம்மா சொல்லிக் கொண்டிருக்கிறாள், அப்பாவிடம்: ''இனிமே இந்த நெருப்பை என்னாலே மடியிலே வைச்சுக் காப்பாத்த முடியாது. உடனே ஒரு பையனைப் பார்த்து அவன் கையிலே ஒப்படைச்சுட்டு மறு காரியம் பாருங்கோ — சொல்லிட்டேன்.''

''என்னடீ அவசர இப்போ? பார்த்துண்டு தானே இருக்கோம். எதற்கும் வேளையும் காலமும் வர வேண்டாமா?'' என்கிறார் அப்பா.

''பண்பொழி டீச்சர் வரன் ஒண்ணு வந் ததே — அது என்னடா ஆச்சு?'' என்று கேட் கிறாள் பாட்டி.

''அதையே முடிச்சிடலாமா அம்மா? ஜாதகம் பொருந்தி யிருக்கு என்கிறார் சாஸ் திரி. நிறையவும் கேட்கமாட்டா.''

''அதையே முடிச்சிடுங்கோன்னு'' என் கிறாள் அம்மா அவசரமாக.

''பின்னே என்னடா, நாளைக்கே கடுதாசி எழுதிப் போட்டுடுடா. குதிரா வளர்ந்துடுத் துடா'' என்கிறாள் பாட்டி.

பாதாதி கேசம் மின்னலடித்த மாதிரி பதறு கிறது எனக்கு. அம்மாவைத் தனியா இழுக்

துக்கொண்டு போய், ''அவசரப்படாதேம்மா. சித்தே பொறுத்துக்கோம்மா. என் மனசிலே ஒண்ணு இருக்கும்மா...'' என்று தட்டுத் தடுமாறுகிறேன்.

''ஆங்'' என்று ஆச்சரியமும் திகைப்புமாகக் குரல் கொடுக்கிறாள் அம்மா.

அவள் காலடியில் விழுந்து ''என்னை மன்னிச்சுடம்மா. நான் இருட்டு வழியிலே என்னிக்குமே போக மாட்டேனம்மா. சுவாமி எனக்கென்று ஒரு கைவிளக்கைக் காட்டியிருக்கார், அம்மா... சீக்கிரத்திலே அதை உனக்கும் காட்டறேம்மா...'' என்று விம்முகிறேன்.

''ஒரு இரண்டு நாளைக்குக் கடிதாசு எழுதாமல் அப்பாவை நிறுத்தி வை, அம்மா'' என்று கெஞ்சுகிறேன்.

அம்மா திகைப்பு மாறுமலே நிற்கிறாள்—கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு. திரும்பத் திரும்ப என்னையும் பூஜை மாடத்திலுள்ள சுவாமியையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு. முத்தாய் வியர்த்திருக்கிறது அவள் நெற்றியில்.

அவளை ஏறிட்டுப் பார்க்கத் துணிவில்லாமல், குனிந்த தலையுடன் உள்ளே போகிறேன். சமையலறைக்குப் போய், சுவரில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு விம்மி, விம்மி அழுகிறேன், இருளில்.

ஏன், எதற்கு என்று தெரியவில்லை.

திடீரென்று ஒரு கையின் ஆதரவு என் மீது படருகிறது; வருடுகிறது, ஆறுதலாக. வளையல் குலுங்குகிறது — அம்மாவின் வளையல்.

''அம்மா!'' என்று கேவிக் கொண்டு அவள் மடியில் சாய்ந்து விடுகிறேன்.

''அழாதே, பூரணி! சுவாமி உன் விருப்பத்தை நிறைவேற்றுவார்.''

பொழுது விடிகிறது. ராத்திரி பட்ட துன்பமெல்லாம் பனியாய் விலகி விட்டமாதிரி இருக்கிறது. குடத்தை எடுத்துக்கொண்டு அய்யனார் கோயிலை நோக்கி ஓடுகிறேன்.

விஜயனைப் பார்த்து, உடனே வந்து அப்பாவிடம் பேசச் சொல்ல வேண்டும்....

மைதானத்தைத் தாண்டி, நாகலிங்க மரத்தைத் தாண்டி, தோப்பைப் பாதி கடந்து அப்பால் செல்கையில்—

அய்யனார் கோயில் வாசலில் ஒரே கூட்டமாகக் கூடியிருப்பது தெரிகிறது. காரணமில்லாமல் வயிற்றைக் கலக்குகிறது.

''அயோக்கிய ராஸ்கல்—இப்ப என் எதிரே வரட்டும் — கிழித்து எறிந்து விடுகிறேன், கிழித்து'' என்று குதியாய்க் குதிக்கிறார் நடேச மாமா — விஜயனின் அப்பா.

''அவன் என்ன சாமி பண்ணுவான்? அந்த வேஷக்காரப் பெண்ணில்லே மயக்கி இழுத்துக்கிட்டுப் போயிட்டா. அவளையில்லே கண்டு பிடிச்சு ஜோட்டாலே அடிக்கணும்'' என்கிறார் சோமு அண்ணன்.

''நாடகம் முடிஞ்சதும், நீ அவனைப் போட்டு அப்படி அடிச்சிருக்கக் கூடாது, நடேசு! அதுதான் இரண்டு பேரும் அண்ணனை வீட்டுக்குக் கூடத் திரும்பாமல் ஓடி விட்டார்கள்'' என்கிறார் தர்மகர்த்தா.

''இங்கே வந்து ஒளிஞ்சு கொண்டிருப்பான்னு பார்த்தா இங்கேயும் காணலியே... அட சாமி! வயசுக் காலத்திலே இப்படிப் பண்ணிப்புட்டயே...''

காதில் மேலே ஒன்றுமே விழவில்லை. 'ஆங்' கென்று விக்கித்துப் போய் நிற்கிறேன்... தலை சுற்றுகிறது, பம்பரமாய்... படு வேகமாய். 'ஓடிப்போயிட்டானு? என் விஜயனு? அந்தப் பெண்ணோடேயா?...'

மளமளவென்று நகர முயன்று, முடியாமல் ஒரு மண் குதிரையின் மறைவில் - அவனை மடியில் போட்டுக் கொண்டு, பட்சணம் பட்சணமாய் ஊட்டின அதே இடத்தில் - 'ம்ம்மா' என்று கத்த முடியாமல் கத்திக் கொண்டு தடால் என்று விழுந்து விடுகிறேன்.

* * *

மடம்பூவின் மணம் 'கம்'மென்று வருகிறது. குறுக்குத்துறைக் கோயில் மடைப் பள்ளியில், அர்த்தஜாம நைவேத்தியத்துக்காக, நெய்யில் தீய்கிற தேன்குழலின் மணத்துடன் போட்டி விட்டுக் கொண்டு வருகிறது.

ஒலிகள் எல்லாம் ஒய்ந்து விட்டன. எங்கோ ஒன்றிரண்டு 'ரிக்கி—ரிக்கி'கள்தான் கேட்கின்றன.

சற்றைக்கெல்லாம் திருச்செந்தூர் போகிற கடைசி பாசஞ்சர், 'அப்பா, முடிஞ்சுது இன்றைய கடன்' என்கிற மாதிரி தடதடவென்று ஓசைப்படுத்திக் கொண்டு போகும்.

கோயில் சின்ன மேளம் கேட்கும், கல் நாயனத்தை ஊதிக் கொண்டு, சிவிகையில் சுவாமியையும் தேவியையும் ஏற்றிக்கொண்டு ஒற்றைக் கொட்டுடன் பிராகாரத்தில் வலம் வந்து கண்ணாடி அறைக்குள் அவர்களைத் தள்ளுவார்கள்., சயன சுலோகம் பாடி, கற்பூரம் காட்டிவிட்டுக் கதவைச் சாத்திக் கொண்டு திரும்புவார்கள்.

☐ போறே போக்கைப் பார்த்தால் காபரே நடனக்காரிகள் கூடப் பட்டமளிப்பு விழாப் பேச்சுக்களை நிகழ்த்துவார்கள் போலிருக்கிறது. - பிலிம் ஃபேர்

☐ முன்பெல்லாம் படத் தயாரிப்பாளர்கள் தங்கள் படத்துக்கு 'ஏ' சர்ட்டிபிகேட் (அடல்ட்ஸ் ஒன்லி) கிடைத்துவிடுமோ என்று பயப்படுவார்கள். இப்



பொழுது தங்கள் படத்துக்கு 'ஏ' சர்ட்டிபிகேட் கிடைக்காதா என்று ஏங்குகிறார்கள்.

-டெக்கான் ஹெரால்ட்

☐ படத்தின் முடிவு படத்தின் பெயராக இருந்தால் எப்படி இருக்கும்? 'தி எண்ட்' (The End) என்ற




ஒரு படத்தில் ரிச்சர்ட் பர்ட்டனும் எலிசபெத் டெய்லரும் நடிக்கிறார்கள்.

டெக்கான் ஹெரால்ட் - பாலி

● "நான் அரசு 'பாங்க்' ஒன்றிலிருந்து ஆறு சதவிகித வட்டிக்கு 2,400 ரூபாய் வாங்கி அதில் மூன்றில் ஒரு பங்கை எட்டு சதவிகித வட்டிக்கும், மீதியை ஒன்பது சதவிகித வட்டிக்கும் கடன் கொடுத்தேன். இரண்டு வருடங்கள் கழித்து எனக்கு எவ்வளவு லாபம் கிடைக்கும்?"

இது ஆந்திர மாணவர்களின் ஏழாவது வகுப்புக்கான கணக்கு! மாணவர்களை முளையிலேயே இப்படித் தீய எண்ணங்களுக்குப் பலியிடலாமா என்று ஆந்திர சட்டசபையில் ஸ்ரீராமலு என்ற உறுப்பினர் கேட்டார்.

ஆதாரம்: 'காரவான்'
தகவல்: சம்பத்குமாரி

ஆசியா-72!

● நடந்து முடிவடைந்த ஆசியா-72 கண்காட்சியில் 'ஹால் ஆப் நேஷன்ஸ்', 'ஹால் ஆப் இண்டஸ்ட்ரீஸ்' - இந்த இரண்டு பெவிலியன்களும் இன்னும் கட்டி முடிந்தபாடில்லை! -ஹிந்துஸ்தான் டைம்ஸ் - பாலி

கோபுரத்துக்கு மேலே நாலாம் பிறையின் மங்கல் பரவிக் கிடக்கிறது. வெளிர் நிறத்தில் ஒளிர்கிற ஒரு நட்சத்திரத்துக்கு நேர் கீழே 'டவுன்' ஸ்டேஷனில் விளக்கு வரிசை தெரிகிறது. — ஒரு ரயில் நின்று பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறது.

ஸ்டேஷனிலிருந்து ஊருக்கு வருகிற பாதை எதிர்க் கரைக்கு வந்து ஆற்றில் இறங்கி, கல்பாலத்தின் வழியாக இக்கரையில் ஏறி மீண்டும் பயணமாகும்.

அந்தப் பாதையையே பார்த்துக் கொண்டு கண்ணீருடன் நிற்கிறேன். 'விஜயன் — வந்து விடு விஜயன். உன் தப்பையெல்லாம் மன்னித்து விட்டேன் விஜயன்' என்று மருகிக் கொண்டு நிற்கிறேன். 'உன்னை ஒரே ஒரு தடவை பார்க்க, ஒரே ஒரு தடவை உன் குரலைக் கேட்கத் துடித்துக் கொண்டிருக்கிறேன், விஜயன்.'

திடீரென்று எதிர்க்கரையில் வெள்ளையாய் ஏதோ தெரிந்து தூக்கி வாரிப் போடுகிறது. அதோ அது ஆற்றில் இறங்குகிறது. கல்பாலத்தில் வருகிறது. இதோ கோயிலைக் கடந்து விட்டது. இக்கரையில் ஏறுகிறது— அடியம்மா, இதோ, இங்கேதான் இந்த அய்யனார் கோயிலைப் பார்த்துத்தான் வருகிறது...

"எவரினீ—"

புல்லரிக்கிறது, உயிரில். "விஜயன்—விஜயன்... நீயா? நிஜமாகவே நீயா வந்துவிட்டாய்?" ஐயோ குரலில் ஏன் இத்தனை சோகம்?

நெக்குருகி, நீராகக் கரைந்து, அவன் அருகில் வந்ததும், அவன் காலடியிலே விழுந்து விடத் தயாராகிறேன்.

ஆகாயத்தில் கொஞ்சநஞ்ச மிருந்த மேகங்களும் விலகி வெளிச்சம் பரவுகிறது. அய்யனார் கோயில் குதிரை யருகில் ஆனந்த பரவசமாய் நிற்கிறேன்.

அவனும் என்னைப் பார்த்துவிட்டு ஓடி வருகிறான். "பூரணி — பூரணி — என் பூரணி! என்னை மன்னிச்சுடு பூரணி; உன் அருமையைத் தெரிந்து கொண்டு விட்டேன் பூரணி!"

"விஜயன் — விஜி—" என்று பரவசமாகக் குழறுகிறேன். "என் கனவு பலிச்சுடுத்து விஜயன்; நான் காத்திருந்தது வீண் போகவில்லை விஜயன்; நீ ஒரு நாள் நிச்சயமாகத் திரும்பி வந்துவிடுவாய் என்று எனக்குத் தெரியும் விஜி; உனக்காக நான் தினம் தினம், இந்த ஒரு வருஷமா இங்கே வந்து காத்துக் கொண்டிருக்கிறேன், விஜயன்!"

எதிரே வந்து பழைய ஆகிருதியுடன், ஆஜானுபாகுவாக, பாகவதர் கிராப்புடன், மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க நிற்கிறான் விஜயன். பாய்ந்து சென்று அந்த அகல மார்பில் சாய்ந்து விம்மி விம்மி அழவேண்டும் போலிருக்கிறது. முடியாமல் தூர நின்றே கேவுகிறேன்.

"விஜயன்! நீ அப்படிப் போயிருக்கலாமா? அதனாலே நாம் இந்த ஜென்மா முழுக்கச் சேர முடியாமலே போயிடுத்தே விஜயன்" என்று கேவுகிறேன்.

"என்ன சொல்லறே பூரணி?" என்று பதறுகிறான் விஜயன். "உனக்கு வேறு இடத்தில் கல்யாணமாயிடுத்தா, பூரணி?—"

'இல்லை' என்கிற மாதிரி தலையை அசைக்கிறேன்.

"பின்னே என்ன தடை? வேறு ஏதாக இருந்தாலும் எனக்கு இலட்சியமில்லை. உடைத்து நொறுக்கி விட்டாவது உன்னை அடைந்தே தீருவேன். நீ இல்லாமல் என்னால் ஒரு நிமிஷம் கூட உயிர் வாழ முடியாது, பூரணி — உனக்குத் தெரியாதா?"

"தெரியும், விஜயன்!" என்று கேவுகிறேன்.

"இதோ இந்தத் திண்ணையிலேதானே முன்பு கிட்டக்கிட்ட உட்கார்ந்து பேசுவோம். இங்கேதானே உன் மடியில் தலை வைத்துக் கொண்டு படுத்துப் பாடுவேன்? மறுபடியும், அப்படிச் செய்ய ஆசையா யிருக்கு பூரணி" என்று திண்ணையில் உட்கார்ந்து கொள்கிறான் விஜயன்.

"வா, பூரணி — வந்து இப்படி என் அருகில் உட்கார்!"

எனக்கு அங்கே, அவனருகில் உட்கார்ந்து, அவனை என் மடியில் சாய்த்துக் கொள்ள வேண்டும் போலிருக்கிறது.

மெதுவாக அருகில் நெருங்கி வருகிறேன் ஆசையாக.

அரையடி தூரம்தான் இருக்கிறது, திண்ணைக்கு. 'சட்'டென்று நின்று விம்மி விம்மி அழுகிறேன். "விஜி! என்னால் முடியவில்லை, விஜி — உன் கிட்ட வந்து உட்கார முடியவில்லை விஜி—"

"ஏன் பூரணி?"

"எனக்குக் கால்களே இல்லையே, விஜயன்— நீ போன அன்றைக்கு ராத்திரி கிணற்றில் விழுந்து நான் செத்துப் போய்விட்ட போதே எனக்குக் கால்கள் போயிடுத்தே விஜயன்!"

கேவிக்கொண்டு நிற்கிறேன் — மாளாத் துயரத்துடன்.

"ஆங்" என்று பதறிக்கொண்டு எழுகிற விஜயனைக் காண இரக்கமாக இருக்கிறது. அழுகிறேன்.

# ஜாங்கோ ஜக்கு

கதை: குட்டி கிருஷ்ணன்

சித்திரம்: ராஜு

15

பி.க.பி.ம.வைக் காணோம். இரவோடு இரவாக வைரங்களுடன் அவன் நழுவி விட்டான் என்பது டாக் அடித்தது. யானை வாய்க்குள் போன சோளப் பொரிதான். திருப்பிக் கேட்கவா முடியும்? அல்லது கள்ளக் கடத்தலில் கொணர்ந்த வைரங்களைக் காணோம் என்று போலீஸில் புகார் பண்ணுவது தான் சாத்தியமா?



திருடனுக்குத் தேள் கொட்டியது போல் தவித்தார்கள் அப்பண்ணாவும் கப்பண்ணாவும்.







அப்போது ஜில்லியைத் தூக்கிக் கொண்டு பொன்மொழி வந்தாள்.










புரிஞ்சு போச்சு! எனக்கு எதிரா ஒரு பெரிய சதி நடப்பதை இந்தக் குதிரை அம்பலமாக்கிருக்கு! மஸ்தானிடம் வைரங்களை நான் கோட்டை விட்டுட்டதாகச் சொல்லிட்டுப் பிச்சுமணியுடன் வைரங்களைப் பங்கு போட்டுக் கொள்வது உன் திட்டம்!


குதிரை உதைத்து விட்டுக் குழியும் பறிச்சுதாம்.
பிச்சுமணி வைரங்களோடு நழுவியதுடன் நம்மிடையே விரோதத்தையும் வளர்த்து விட்டுச் சென்றிருக்கான். நாம் சண்டை போட்டுக்கிட்டா அவனை மறந்துடுவோம் என்கிற நினைப்பிலே!


உங்களிடையே சண்டை மூளக் கூடாதென்பதற்காகத் தான் ஜிம்மி அந்தக் குதிரையைத் தின்னப் பார்த்திருக்கு. அதைப் போய்த் திட்டுறீங்களே அப்பா!... பேயானாலும் பயனுண்டு; நாயானாலும் நலனுண்டு!
பொன் மொழி போதும்! போதும் பொன்மொழி!


திரைப்படம் எடுத்த மட்டும் போதும் என்று கம்பெனியைக் கலைத்து விட்டு எல்லாரும் சென்னை சேர்ந்தார்கள். ஓரிரு நாட்களுக்கு மேல் பொன் மொழியைப் பாராமல் ஜக்குவால் இருக்க முடியவில்லை. அவள் இல்லத்துக்குப் போக ஏதாவது காரணம் வேண்டுமே என்பதால் புத்தகக் கடைக்குச் சென்று....


அப்பண்ணை சாருக்கு அன்பளிப்பு! சித்தர் பாடல்கள்; ராமலிங்கர் அருட்பா; பட்டினத்தார் பாடல்கள்... காயமே இது பொய்யடா! காற்றடைத்த பையடா!... வைரங்களைப் பற்றி யோசனை வேண்டாம்; மனத்தை வைரமாக்கும் திட்டாப் போதும்! செல்வம் அநித்தியம்; உலகமே மாயை!


ஜக்கு! உன் பொன் மொழிகள் என் மகள் பொன் மொழியை நினைவூட்டுகின்றனவே! அவளை நான் மீண்டும் எப்போது பார்ப்பேன்?
ஐயோ! பொன் மொழிக்கு என்ன? எங்கே, அவள்?

தொடரும்



# ராஜாஜியின் ஜெயில் டைரி

**1922 ஜனவரி, 18உ**

புதன்கிழமை. நான் இடைவிடாமல் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறேன். ஆயினும் கடவுளின் தரிசனம் இன்னும் எனக்குக் கிடைக்கவில்லை. ஓடி அலையும் மனத்தை ஓடாமல் நிறுத்துவது கடினமாயிருக்கிறது. ஓடாமல் நிறுத்தினாலும் அது உண்மையான இலட்சியத்தை விட்டு விட்டு நண்பர்களைப் பற்றியும் நாட்டைப் பற்றியும் சிந்திக்கின்றது. ஆசைகளைத் துறந்து உள்ளம் தூய்மை அடைவதற்கு மாறாக ஆசைகளே புதிது புதிதாக உருவாகிக் கொண்டிருக்கின்றன. நான் பிரார்த்தனை செய்வதன் ஒரே நோக்கமெல்லாம் பரம்பொருளின் தரிசனம் அடைவது தான். அதை அடைந்து விட்டால் மற்றவை அனைத்தும் தாமாகவே சரியாகி விடும். பண்டைக்கால முனிவர்கள் கடவுளைக் காணக் கடுந்தவம் புரிந்தார்கள் என்று கூறுவதன் பொருள் இப்பொழுது தான் எனக்குப் புலனாகின்றது.

ஒத்துழையாமை என்பது அரசியல் இலட்சியம் ஒன்றை அடைவதற்காக ஏற்படுத்தப்பட்ட சாதனம் மட்டுமன்று. வாழ்க்கையை எவ்விதம் நடத்த வேண்டும் என்னும் வழியைக் காட்டுவதே அது. அநியாயத்துடன் ஒத்துழையாமலிருப்பதே அவசியம் செய்து தீர வேண்டிய கடமையாகும். ஆங்கிலேயரை நாட்டை விட்டு விரட்டுவதன்று நாம் ஒத்துழையாமையை மேற்கொண்டிருப்பதன் நோக்கம். நாம் அகப்பட்டுக் கொண்டிருக்கும் அநியாயமாகிய வலையினின்று விடுதலை பெற முயற்சி செய்வது நாம் நிறைவேற்ற வேண்டிய முக்கியமான கடமையாகும். தாற்காலிகமாக மேற்கொண்ட திட்டமன்று; அல்லது அரசியல் நோக்கத்துக்காக அமைக்கப்பட்ட திட்டமுமன்று. காங்கிரஸ் கூறும் கால எல்லைக்குள் விடுதலை தேட முடிந்தாலும் முடியாவிட்டாலும் ஜனங்கள் இந்த அநியாயமாகிய கேட்டினுடன் ஒத்துழைக்க மறுப்பது இடைவிடாது செய்ய வேண்டிய கடமையே யாகும். வேறு முறைகள் பலிக்கவில்லை என்பதற்காக வகுக்கப்பட்ட முறையன்று இது. எப்படிப் பலனை எதிர்பாராமல் உண்மையாகவும் ஒழுக்கமாகவும் நடக்க வேண்டியது எந்தக் காலத்தும் இன்றியமையாத அறங்களோ, அப்படியே இந்த ஒத்துழையாமை அறமும் எந்தக் காலத்தும் இன்றியமையாது வேண்டப்படுவதேயாகும். அன்னிய ஆட்சிக்கு அடிமையாகி அதை ஆதரித்து நிற்க மறுப்பது இயற்கையின் நியதியையும் உணர்ச்சியையும் ஆதாரமாகக் கொண்டதாகும். இவ்வுண்மையை மறந்ததால்தான் நாம் இதுவரை அடிமைத்தளை பூண்டிருப்பதை உணராமல் இந்தப் பயங்கரமான சேற்றில் உழன்று வருகின்றோம். இப்பொழுது இந்த வாழ்க்கை தர்மத்தை அறிந்து விட்டபடியால் இனி நாம் எந்நாளும் மறக்காமல் அனுஷ்டிக்க வேண்டியதாகும்.

சிறைக்கு வெளியில் ஏதோ நடைபெறுவதாகத் தெரிகிறது. சிறைத் தலைமை அதிகாரி என்னுடைய அறைக்கு வந்து என்னுடைய தேக சுகத்தைப் பற்றி விசாரித்தார். எனக்கு ரொட்டியுடன் வெண்ணெயும் தரச் சொல்வதாகச் சொன்னார். ''சுடச்சுட ரொட்டியைச் சாப்பிட்டால் அஜீரணம் உண்டாகும். அதனால் ஆறினபிறகே சாப்பிடுங்கள்'' என்று யோசனை கூறினார்.

வாணியம்பாடியில் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரை அடித்துக் கொன்று விட்டதாகவும் சிறையில் பிரதம காவலாளருடைய மகன் - சென்னை நகரில் போலீஸ் கான்ஸ்டேபிளாக இருப்பவர் - வேலையை ராஜிநாமாச் செய்து விட்டு ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து விட்டதாகவும் இரு கதைகள் கட்டி விட்டிருக்கிறார்கள். இங்குள்ள பிரதம காவலாளரை அவர் கீழ் வேலை பார்க்கும் காவலாளருக்குப் பிடிக்காது. அதனால் அவருடைய மகன் விஷயத்தைக் கேட்டதும் அவர்களுக்கு ஒரே மகிழ்ச்சியாக இருக்கிறது.

ஆஸ்பத்திரியில் ஆகாரம் பரிமாறும் கைதியான தேவன் என்பவர் யோக்கியர். அத்துடன் அன்பாகவும் ஒழுங்காகவும் நடந்து கொள்கிறார். குற்றவாளிகள் என்போரைப் பார்க்கப் பார்க்க அவர்களை விசாரித்துத் தண்டிக்கும் முறையை அடியோடு மாற்ற வேண்டும் என்ற எண்ணம் என்னுடைய மனத்தில் அதிகமாக வேரூன்றி வருகிறது.





# உழைப்பின் பொன்விழா
# சோவியத் பெருவிழா

### தொழில் வளம்

1. உஸ்பெக்கில் ஒரு பட்டு, பருத்தி நூல் நெசவு ஆலை. 2. ஜார்ஜியாவில் மாங்கனியச் சுரங்கத்தி லிருந்து வெட்டியெடுக்கப்பட்ட கனிப்பொருள் தொழிற்சாலைக்குப் பயணப்படுகிறது. 3. கஸாக் பகுதியில் தாமிரச் சுரங்கத்தில் இயந்திரக் கரம் இயங்குகிறது. 4. யுக்ரேன் மாநிலத்தில் நூற்பு ஆலை. 5. பால் பவுடர் தயாரிக்கும் நிறுவனம். ஒரு 'ஷிஃப்ட்' வேலை நடந்தால் ஐம்பது டன் பால் பவுடர். 6. அறுவடை இயந்திரங்கள் தயாராகும் தொழி லகத்தின் ஒரு தோற்றம்.





சோவியத் குடியரசு அமைந்து ஐம்பதாண்டுகள் ஆகின்றன. இதனை ருஷ்ய மக்களின் அயராத உழைப்புக்கும் பொன்விழா என்றே கருதலாம். சலியாத உழைப்பின் சாதனைகளை இங்கு புகைப் படங்களின் மூலம் பார்த்து அம்மக்களை வாழ்த்து வோம். 





## ருஷ்ய மக்கள்

பரந்து விரிந்த சோவியத் நாட்டில் பலதரப்பட்ட மக்களின் பல்ரக கலாசாரங்கள் செழிக் கின்றன.

1. புராதனமான ஆடை, பழங்காலத்திய வாத்தியம் ஆகி யவை தாத்தாவுக்கு. நவீன உப கரணங்களுக்கும் குறைவில்லே, பேத்திக்கு. 2. நீருக்கு அடியில் பிராணவாயுக் கலசங்களுடன் சென்று நீண்ட நேரம் நீந்தி ஆழ்கடலின் அதிசயங்களைக் காண்பது பலருக்குப் பிடித்த மான பொழுதுபோக்கு. சில சமயம் புதையல் கூட அகப்படும்! 3. 'பிக்நிக்' வந்த இடத்தில்







அப்போதுதான் பிடித்த மீனைக் கொண்டு சூப் தயா ராகி விட்டது. 4. ஜார்ஜியாவில் ஆப்பிள் மரம் இப்படிப் பழுத்துக் குலுங்கும்போது சிரிப்பில் உடல் குலுங்கக் கேட்பானேன்? 5. மோல்டாவியப் பகுதிக்கு உரித் தான தேசிய நடனம்.











## இலக்கியம் - ஓவியம்

உலகப் பிரசித்தி பெற்ற இலக்கியங்களைப் படைத்துத் தாய் நாட்டுக்குப் பெருமை தேடித் தந்தவர்கள் சிலரை இப்பக்கத்தில் காண்கிறோம்.

1. ஷோலோகோவ் - நோபல் பரிசு பெற்ற ஆசிரியர். 2. புஷ்கின். 3. கம்கால் என்ற பிரபல ஓவியருக்கு இந்தியக் காட்சிகள் தோற்றங்களில் அலாதி ஈடுபாடு. 'வழிப்போக்கர்கள்' என்ற இந்த ஓவியத்தினைத் தீட்டியவரை ஓவியத்தின் கீழேயே காணலாம். ஜவாஹர்லால் நேரு பரிசு பெற்றவர் இவர். 4. மாக்ஸிம் கார்க்கி. 5. கான்ஸ்டன்டைன் ஃபெடின். 6. இலக்கியங்களின் வளர்ச்சியுடன் போட்டி போட்டுக்கொண்டு நூலகங்கள் வளர்ந்துள்ளன. மாஸ்கோ, லெனின் நூலகம்.















## விஞ்ஞானம் - விவசாயம்

1. சந்திரனுக்குப் பூமியிலிருந்தவாறே அனுப்பப்பட்ட வாகனம், இங்கிருந்தபடியே இயக்கப்பட்டது. 2. பழுதுபட்ட மூத்திரக் காய்க்குப் பதில் மாற்று உறுப்பினை நன்கொடையாகப் பெற்று வைத்து நடக்கும் சஸ்திர சிகிச்சை. 3. தேயிலைத் துளிர்



அறுவடையை இயந்திரங்களே கவனித்துக் கொள்கின்றன. 4. நார்வா எனுமிடத்தில் உள்ள அனல் மின் நிலையத்தில் உற்பத்தியைக் கட்டுப்படுத்தும் அறை. 5. பருத்தியை ஆலைக்கு அனுப்ப ஏற்பாடாகிறது. 6. இந்த விஞ்ஞான ஆராய்ச்சிக் கப்பலின் பெயர் யூரி காகரின். ருஷ்ய விண்வெளிப் பயணிக்கு இப்படி ஒரு கௌரவம்.












### கல்வி - கலைகள்

1. ருஷ்யா என்றதுமே பாலே நடனம்தான் முதலில் நினைவுக்கு வரும். 2. மாஸ்கோவில் மட்டும் உள்ள புத்தகக் கடைகள், 1964 ஒரே ஒரு ஆண்டில் 110 மிலியன் புத்தகங்களை விற்றன! நாளுக்கு நாள் இந்த எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. 3. குழந்தைகளுக்கான இசைப் பள்ளியில் இளம் வயலின் வித்வான்கள். 4. பள்ளிக்கூடத்தில் குழந்தைகளுக்கு உள்ள விஞ்ஞான உபகரண வசதிகள் ஏராளம். 5. தாஷ்கெண்ட், லெனின் மியூஸியத்தின் வெளித் தோற்றம். 6. அர்மேனியாவில் பித்தளைத் தட்டில் சித்திர வேலைப்பாடு செய்யும் கலைஞர். □









# சத்திய வெள்ளம்

### நா. பார்த்தசாரதி

## முன் கதை

மல்லிகைப்பந்தல் பல்கலைக் கழகத்தில் பயிலும் மாணவ மணிகளில் இருவர் பாண்டியன், கண்ணுக் கினியாள். காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவு படும் இன்ப வெள்ளத்தைத் தேடி விரையும் இவர் களைச் சுற்றி ஒரு குழு. நல்லதையே நாடும் குணம் கொண்ட குழு. மாணவ சமுதாயம் நன்னெறியில் செல்ல வேண்டும் என்ற பெரு நோக்கத்தில் செயல் படுபவர்கள் பேராசிரியர் பூதலிங்கம், அண்ணாச்சி, மணவாளன் முதலியோர்.

மாணவர்களைப் பகடைக் காயாகப் பயன்படுத்திக் கொண்டு கட்சி அரசியலில் சித்து விளையாடுபவர் இராவணசாமி. அவரது அரசியல் சூழ்ச்சிகளுக்குக் கைப்பாவையாகும் கல்லூரித் தலைவர் தாயுமானவர்.

பொதுத் தேர்தலையே புறமுதுகு கொள்ளச் செய் யும் மாணவர் மன்றத் தேர்தல். அதையொட்டிப் பாண்டியன் கடத்தப்படுகிறான். இன்னும் பல துன் பங்கள் நேர்கின்றன. எல்லாவற்றுக்கும் மேலாகப் பத்மா என்னும் மாணவி மிருக இச்சைக்குப் பலி யாகும் கொடுமை! இப்படி சமூகத்தின் காலக் கண்ணாடியாகப் பாய்கிறது சத்திய வெள்ளம்!

## இருபத்தெட்டாவது அத்தியாயம்

**வா**ர்டனின் கடுமை கண்ணுக்கினியாளுக்குப் புதுமையாக இருந்தது. மாணவிகள் விடுதியான ஔவை மனை, ஆண்டாள் மனை, இரண்டிற்கும் பொதுவான பிரதம வார்டன் அம்மையார், அந்தக் கறுப்புக் கொடி ஆர்ப்பாட்டத்தில் அவள் கலந்து கொண்டதற்காகவும் தலைமை தாங்கி மாணவிகளை அழைத்துச் சென்றதற்காகவும், அவளைக் கோபமாகக் கண்டித்தாள். எப்போதும் தன்னிடம் ஓரளவு பிரியமாயிருக்கும் வார்டனின் கண்டிப்பு அன்று அதிகமாயிருந்ததுபோல் தோன்றியது அவளுக்கு.

''தடை உத்தரவு அமுலில் இருக்கிற போது நீ நூறு மாணவிகளுக்கு மேல் அழைத்துக் கொண்டு போய் மந்திரிக்குக் கறுப்புக் கொடி காட்டியிருக்கிறாய்! நீங்கள் எல்லாருமே பெண்கள் என்பதால் போலீஸ் தயக்கத்தோடு எதுவும் செய்யாமல் விட்டுவிட்டது. ஏதாவது அசம்பாவிதம் நடந்திருந்தால் பதில் சொல்ல வி. சி.க்கு முன்னால் நான் போய்க் கைகட்டி நிற்க நேர்ந்திருக்கும். உன்னால் இந்த ஹாஸ்டலின் பேரே கெட்டுப் போய் விடாமல் பார்த்துக் கொள்! ஐயாம் ஏ லிட்டில் அஃப்ரைட் ஆஃப் யூ! பீ கேர் ஃபுல் எனி ஹௌ....''

கண்ணுக்கினியாள் இதற்குப் பதிலே சொல்லவில்லை. பெண்கள் விடுதிகளிலிருந்து எந்த மாணவி வகுப்புக்களுக்குத் தவிர வேறு காரியங்களுக்காக வெளியே செல்வதானாலும், புறப்பட்டுச் செல்கிற நேரம், செல்லும் இடம், மறுபடியும் திரும்பும் நேரம் உட்பட எழுதி வைத்து விட்டுப் போக வேண்டிய 'அவுட் ரிஜிஸ்தர்' நோட்டுப் புத்தகம் அப்போது வார்டனின் மேஜை மேல் விரித்து வைக்கப்பட்டிருந்தது. பல்கலைக் கழக விதிமுறைகள் கண்டிப்பாக இருந்தாலும் பெரும்பாலான சமயங்களில் இந்த 'அவுட் ரிஜிஸ்தரை' யாருமே பொருட்படுத்துவதில்லை.

இன்று வார்டன் அதை விரித்து வைத்துக் கொண்டு அவளிடம், ''நீங்கள் நூறு பேருக்கு மேல் வெளியே போயிருக்கிறீர்கள்!' நீங்கள் போன நேரம், போகிற இடம், திரும்பின நேரம் எதைப் பற்றியும் இந்த ரிஜிஸ்தரில் எழுதவே இல்லை. 'எப்பிடி யாரைக் கேட்டுக் கொண்டு காம்பஸுக்கு வெளியிலே போய் அவங்க மந்திரிக்குக் கறுப்புக் கொடி காட்டினாங்க? விமன்ஸ் ஹாஸ்டல் அவுட் ரிஜிஸ்டரோட உடனே என்னை வந்து பாருங்க'ன்னு வி. சி. கூப்பிடறாரு.... இப்ப நான் என்ன செய்யட்டும்?'' என்றார்.

தன்னுடைய மௌனமும் பணிவும் வார்டனின் கோபத்தைத் தணிக்கும் என்று கண்ணுக்கினியாள் எதிர்பார்த்

தது வீண் போகவில்லை. தன்னையும் மாணவிகளையும் காப்பாற்றிக் கொள்ள வார்டனே அப்போது சாதுரியமாக ஒரு காரியம் செய்தாள். 'மாணவிகள் ஐந்து பேர் அடங்கிய குழுவாகவோ அதற்கும் அதிக எண்ணிக்கை அடங்கிய குழுவாகவோ ஷாப்பிங், திரைப்படம், சொற் பொழிவு ஆகியவற்றுக்காக விடுதியிலிருந்து வெளியே சென்று திரும்பலாம்' என்ற மற்றொரு விடுதி விதியின்படி அவர்கள் 'ஷாப்பிங்'குக்காக வெளியே சென்றதாக ரிஜிஸ்தரில் பதிவு செய்து கொண்டாள் வார்டன். வெளியே சென்றவர்களில் யார் யார் மந்திரிக்குக் கறுப்புக் கொடி காட்டினார்கள் என்பது பற்றித் தனக்குத் தெரியாது என்றும், தனக்குத் தெரிந்த விவரங்களின்படி பல்கலைக் கழக மாணவிகள் அல்லாத வேறு சில பெண்கள் கறுப்புக் கொடி பிடித்ததாகவும், அப்போது சில மாணவிகளும் அருகே நின்று வேடிக்கை பார்த்ததைத் தவிர வேறு குற்றம் எதுவும் செய்யவில்லை என்றும் பொய்யாக ஒரு விளக்கத்தைத் தயாரித்து எழுதி, ''உன்னையும், உன் தோழிகளையும் காப்பாற்றுவதற்காக நான் இப்படி எல்லாம் புளுகித் தொலைக்க வேண்டியிருக்கிறது.....! இந்தத் தடவை சரி. இனிமேல் இப்படி அடிக்கடி ஏதாவது நடந்தால் அப்புறம் நான் எதுவுமே உதவி செய்ய முடியாது'' என்று சொல்லியபடியே அவளிடம் ரிஜிஸ்தரையும் துணைவேந்தருக்கு எழுதப்பட்ட தன்னுடைய விளக்கப் பதிலையும் காண்பித்தாள் வார்டன் அம்மாள். அந்த அம்மாளின் கண்டிப்பும் அதை ஒட்டிய வாஞ்சையும் கண்ணுக்கினியாளின் மனத்தில் நன்றி சுரக்கச் செய்தன. அவள் வார்டனிடம் மனம் நெகிழ்ந்த வார்த்தைகளால் தன் நன்றியைத் தெரிவித்தாள். 'அவுட் ரிஜிஸ்தர்' விஷயத்தில் வார்டன் அப்படிப் புளுகி உதவி செய்திராவிட்டால் துணைவேந்தர் தன்னையும் வேறு சில மாணவிகளையும் அப்போதிருந்த ஆத்திரத்தில் பல்கலைக் கழகத்திலிருந்தே சஸ்பெண்டு செய்கிற அளவு போயிருப்பார் என்பதைக் கண்ணுக்கினியாளால் உணர முடிந்தது. கோபத்திலும் கண்டிப்பிலும் கூட இப்படி அழகான கோபங்களையும் அன்பான கண்டிப்புக்களையும் அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. எதையும் வெறுப்பதனால் சிலர் கோபப்படுகிறார்கள். எல்லாவற்றையும் நேசிப்பதனாலும் சிலர் கோபப்படுகிறார்கள். எல்லாவற்றையும் நேசிப்பதனால் கோபப்படுகிறவர்கள் வளைவான வாத்தியத்தில் நேரான இசையைக் கிளரச் செய்கிறவர்களைப் போன்று பக்குவமானவர்களாக இருப்பதையும் எல்லாவற்றையும் வெறுப்பதனால் கோபப்படுகிறவர்கள் நேரான வாத்தியத்திலும் அபசுவரமாக வாசிப்பவர்களைப் போல் பக்குவமற்றவர்களாக இருப்பதையும் அவள் பல முறை பல சந்தர்ப்பங்களில் கண்டிருக்கிறாள். துணைவேந்தர், பதிவாளர் போன்றவர்கள் வெறுப்புக்களால் கோபம் கொள்வதையும், பேராசிரியர் பூதலிங்கம், பெண்கள் விடுதி வார்டன் போன்றவர்கள் பிரியங்களால் கோபப்படுவதையும் அவள் தரம் பிரித்து உணர்ந்ததுண்டு. கையை ஓங்கி அறைய வருவது போல் ஆத்திரமாகத் தொடங்கிய வார்டன் அம்மாள் அரவணைத்துத் தழுவிக் கொண்டது போன்ற நேசத்துடன் அந்த விசாரணையை முடித்திருந்தாள்.

மல்லிகைப் பந்தலுக்கு வந்த மந்திரிக்கு மாணவிகள் கறுப்புக் கொடி காட்



டிய மறுதினம் காலைப் பத்திரிகைகளில் பல்கலைக் கழக மருத்துவக் கல்லூரி மாணவி 'மேரி தங்கத்தின் தற்கொலை' பற்றி விசாரிக்க நியமிக்கப்பட்டிருந்த நீதி விசாரணை முடிவு வெளியாகியிருந்தது. எதிர்பார்த்தது போலவே விசாரணை முடிவு கண் துடைப்பாக இருந்தது. மணவாளனும், பாண்டியனும் தயாரித்து அனுப்பியிருந்த மாணவர்களின் சாட்சியங்கள், தஸ்தாவேஜுகள், மேரி தங்கத்தின் கடிதம் எல்லாமே பயனற்றுப்போயிருந்தன. அமைச்சர் கரிய மாணிக்கத்தின் நாற்பத்தொன்பதாவது பிறந்த நாளன்று — நாற்பத்தொன்பது ஆப்பிள்களைக் கொண்டு போய்க் கொடுத்து மாலை போடுவது, அவரைப் புகழ் பாடுவதுபோன்ற காரியங்களால் நீதிபதியாக உயர்பதவி பெற்ற ஒருவரைத்தான் அந்த விசாரணைக்கு நியமித்திருந்தது அரசாங்கம். அதனால் தீர்ப்பும் பாரபட்சமாகவே இருந்தது. பதவியில் இருப்பவர்களைப் புகழ்ந்து துதி பாடுவதன் மூலமே நீதிபதிகளாக உயர்வு பெறும் மனிதர்களிடமிருந்து நீதியும் ஒழுங்காகக் கிடைக்க முடியாது என்று நிரூபிக்கப்பட்ட பல சந்தர்ப்பங்களை அந்த ஆட்சிக் காலத்தில் மாணவர்கள் கண்ணாரக் கண்டிருந்தார்கள். 'தூக்கத்தில் நடக்கும் வியாதியால் தவறிக் குளத்தில் விழுந்து மரணம் நேர்ந்தது' என்றே மேரி தங்கம் பற்றிய விசாரணையில், தீர்ப்பு வந்திருந்தது. தற்கொலை செய்து கொள்வதாக அவளே எழுதி வைத்திருந்த கடிதம் — அவள் எழுதியதுதான் என நிரூபிக்க முடியாமல் அவள் கையெழுத்தை ஒத்த எழுத்துக்களில் வேறு யாரோ எழுதியது போல் தோன்றுகிறது என்று அந்த வலுவான சாட்சியம் நிராகரிக்கப்பட்டிருந்தது. மந்திரிகளின் வீடு தேடிப் போய் அவர்களுக்கு மாலையிட்டு வணங்கக் கூடிய, நீதிபதிகளும் ஏதாவது வழக்குக்காக மந்திரிகள் நீதிமன்றம் வந்தாலும் பயந்து எழுந்து நிற்கக் கூடிய நீதிபதிகளும், நிறைந்துவிட்ட நீதிமன்றத்திலிருந்து நீதியும் முறையாகக் கிடைக்காது என்பதை அந்தச் சம்பவம் விளக்கிவிட்டது. சட்டங்கள் உருவாகும் இடங்களும் ஒழுங்கற்றுப் போய்ச் சட்டங்களைக் காத்து மக்களுக்கு அவற்றின் பயன்களை அளிக்கும் நீதிமன்றங்களும் ஒழுங்கற்றுப் போய்விட்ட சமூகத்தில் மக்கள் கொந்தளித்து எழுவது ஒன்றே நியாய மார்க்கமாக மீதம் இருக்க முடியும் என்பதை ஓவ்



வொருவரும் உணர்கிற காலமாக அது இருந்தது. இந்த விசாரணைக்காக அரசாங்கமே தனக்குச் சாதகமான தன்னுல் பதவி உயர்வு பெற்ற ஒரு நீதிபதியைத்தான் தேடி நியமித்திருந்தது.

அந்த நீதிபதி சட்ட மந்திரி வெளியூர் போகும்போதெல்லாம் ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரத்துக்குப் போய் எல்லாரையும் போல் கைகூப்பி நின்று அவரை வழியனுப்புகிற அளவு தரம் இறங்கி விட்டவர். சட்ட மந்திரி வீட்டுத் திருமணத்துக்கு இரண்டு பவுனில் இரண்டு தனித் தனி மோதிரங்கள் செய்து கொண்டு போய் மணமக்களுக்கு அவற்றைப் பரிசு தந்தவர். சட்ட மந்திரி கூப்பிட்டு வந்து பார்க்கச் சொன்னுல் இரகசியமாக வீடு தேடிப் போய் அவரைப் பார்க்கிறவர். இவை ஊரறிந்த விஷயங்களாகியிருந்தன. நீதிமன்றங்களிலிருந்து நீதி கிடைக்காத அல்லது கால தாமதமாகக் கிடைக்கிற காலங்களில் மக்கள் அவற்றை விரைவான வேறு மார்க்கங்களில் தேட முயலுவதற்கு நிர்ப்பந்திக்கப்பட்டு விடுவார்கள். அந்த நிர்ப்பந்தமே பிறகு ஒரு நியாயமாகி விடுவதும் உண்டு. 'எல்லா நீதி நியாயங்களும் பொய்த்துப் போகிற போது நீதி நியாயங்களை பொய் என்று பிரகடனப்படுத்திய ஓர் அநீதி மூலம்தான் நீதி நியாயங்களைத் தேட நேரிட்டுவிடும்' என்று தீவிரமான கோபம் கொண்ட மாணவர்கள் ஒருவருக்கொருவர் கொதிப்போடு பேசிக் கொண்டார்கள். அந்த விசாரணை முடிவை எதிர்த்து மல்லிகைப் பந்தல் பல்கலைக் கழக மாணவர்கள் ஒரு நாள் முழுவதும் கறுப்புச் சின்னமணிந்து வகுப்புக்களைப் புறக்கணித்தார்கள். பல்கலைக் கழகச் சின்னத்தைப் போல் கரிக்கட்டியால் சுவரில் வரைந்து அதில் 'வித் ட்ரூத் அண்ட் விஸ்டம்' என்ற கொள்கை வாசகம் இருக்க வேண்டிய இடத்தில் 'வித் கரப்ஷன் அண்ட் ஃப்ராட்' என்று ஆங்கிலத்தில் மாற்றி எழுதினுன் ஒரு தீவிரவாதியான கோபக்கார மாணவன்! 'நீதிக்கு நமது அநுதாபங்கள்! அது இன்றைய தினம் செத்து விட்டது' என்று துணைவேந்தர் அலுவலகத்தின் பிரதான சாலையில் வெள்ளை சாக்பீஸால் பெரிதாக எழுதி வைத்தான் மற்ரெருரு மாணவன். பல்கலைக் கழக உட்புறச் சாலைகளும், சுவர்களும் அன்று வாசகங்கள் மயமாக மாறின. நிலைமை மறுபடியும் சரியாக நாலைந்து நாட்கள் ஆயின.

இதை ஒட்டிப் பட்டமளிப்பு விழா நாள் மறுபடியும் சில வாரங்கள் தள்ளிப் போடப்பட்டன.

நீதி விசாரணை முடிவு பற்றிய பரபரப்புத் தணிந்ததும் மாணவர்கள் பல்கலைக் கழக ஆடிட்டோரியத்தில் நேரு விழாக் கொண்டாடினுர்கள். சோஷியாலஜி பேராசிரியர் வீரராகவன் தலைமையில் ஒரு விவாத அரங்கம் நடைபெற்றது. மாணவர் பேரவையின் சார்பில் மோகன்தாஸ் தொடக்க உரை நிகழ்த்தியபின் பாண்டியன் தலைமையில் ஆறு மாணவர்கள் 'நேருவின் சமதர்ம சமுதாயத்தை அமைக்கும் ஆசை அவர் காலத்திலேயே வெற்றி பெற்றது' என்றும் கண்ணுக்கினியாள் தலைமையில் ஆறு மாணவிகள் அது அவர் காலத்தில் வெற்றி பெறவில்லை என்றும் கட்சி பிரித்துக் கொண்டு விவாதித்தார்கள்.

''இந்தியா தனது வறுமையையும் ஏற்றத் தாழ்வுகளையும் ஒழிக்க விரும்பினுல் சமதர்ம வழியிலேதான் செல்ல வேண்டியிருக்கும். ஆனுல் அது அந்த இலட்சியத்தைத் தன் மேதைத் தன்மைக்குரிய முறையில் அமைத்துக் கொண்டு தன் சொந்த வழிகளையும் வகுத்துக் கொள்ளும். நமது பொருளாதாரத் திட்டம் மானிட நலனை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்'' என்று 1929ல் இந்திய தேசிய காங்கிரஸ் தலைமை உரையிலேயே நேரு கூறியிருப்பதைச் சுட்டிக் காட்டி விவாதித்தான் பாண்டியன். உடனே கண்ணுக்கினியாள் அதை எதிர்த்து விவாதித்தாள். ''நேரு எதைச் சுட்டிக்காட்டினுர் என்பதல்ல விவாதம். அதை அவர் காலத்தில் நிறைவேற்ற முடிந்ததா இல்லையா என்பதுதான் கேள்வி. அதை நண்பர் பாண்டியன் விளக்கவே இல்லை .....'' என்று அவள் பாண்டியனை மறுத்துப் பேசிக் கொண்டிருந்தபோது 'ஈவ் டீஸிங்'கில் ஆசையுள்ள யாரோ ஒரு குறும்புக்கார மாணவன் ஒரு சரம் பட்டாசைக் கொளுத்தி மேடையில் மைக்கைக் குறி வைத்து விசினுன். அது படபடவென்று வெடித்தபடி தலைமை வகித்த பேராசிரியரின் மேஜை மேல் போய் விழுந்தது. மேலும் அந்தப் பட்டாஸ் சரம் வெடிப்பதற்குள் மாணவர்களின் கை தட்டல் சிரிப்பொலிகளிடையே அதை மேஜை விரிப்புத் துணியால் அமுக்கி மூடி விரைந்து அணைத்து விட்டார் தலைமை வகித்த பேராசிரியர்.

''நாம் வார்த்தைகளால் விவாதிக்கவே இங்கு கூடியிருக்கிறோம். வெடிகளால் அல்ல'' என்று கண்ணுக்கினியாள் மேலே பேச்சைத் தொடர்ந்த போது மாணவிகள் கைதட்டி 'ஹியர் ஹியர்' என்று உற்சாகக் குரலெழுப்பினுர்கள். ''அடிப்படையிலேயே மாற்றம்

பெறுவது சமதர்மத்தில் அடங்கியுள்ள முக்கியமான கருத்து. அது உடனே முடியக்கூடியதன்று. அதற்குப் போதிய காலம் தேவை'' என்று நேருவே லோதியன் பிரபுவுக்கு எழுதிய கடித வாசகம் ஒன்றைக் கண்ணுக்கினியாள் சான்ருகக் காட்டி, ''இப்படி எழுதியிருப்பதன் மூலம் தம் காலத்துக்குள் அந்தச் சாதனை நிறைவாக முடியாது என நேருவே கருதியிருக்கிருர். 1936-ல் இப்படி அவர் எழுதினலும் அவர் ஆண்ட கால நிலைமையும் அதுவாகவே இருந்தது'' என்று விளக்கிப் பாண்டியனை மறுத்தாள். கைதட்டல் மாணவிகள் பக்கம் மீண்டும் பலமாயிருந்தது.

இரண்டு மணி நேரம் அந்த விவாதம் தொடர்ந்தது. முடிவில் பாண்டியனும், கண்ணுக்கினியாளும் தங்கள் தங்கள் கட்சி விவாதங்களைத் தொகுத்துரைத்தார்கள். தலைவர் இரு தரப்பு விவாதங்களையும் அலசி ஆராய்ந்து அரை மணி நேரம் பேசிய பின் ''நேரு விரும்பிய சமதர்ம இந்தியா அவர் காலத்திலேயே முழுமையாக உருவாகவில்லை'' என்று கண்ணுக்கினியாள் கட்சிக்கு வெற்றியாகத் தீர்ப்பளித்தார்.

அன்று பிற்பகலில் அண்ணுச்சி தம் கடை வாசலில் நேரு விழாவுக்காக ஒரு பொதுக்கூட்டமும் ஏற்பாடு செய்திருந்தார். அதற்கும் பாண்டியன் பேசப் போக வேண்டியிருந்தது. அண்ணுச்சி ஏற்பாடு செய்திருந்த அந்தக் கூட்டத்திலோ, கூட்டம் நடப்பதற்கு முன்போ மல்லை இராவணசாமியின் ஆட்கள் ஏதாவது கலகம் செய்வார்களோ என்ற ஒரு சந்தேகம் இருந்தது. அர்த்தால் ஊர்வலத்தன்று கோட்டம் குருசாமியின் கடை தாக்கப்பட்டது. இராவணசாமியின் வீட்டு முன் மாணவர்கள் மறியல் செய்தது, அதற்கும் முன்னுல் அவருக்குச் சொந்தமான லாரிகளை மடக்கிப் பல்கலைக் கழக எல்லைக்குள் நிறுத்திக் கொண்டது, இதனுல் எல்லாம் ஆத்திரம் அடைந்திருந்த அந்தக் கட்சியினர் பாண்டியனையும் அவனேடு முக்கியமாயிருந்த மாணவப் பிரமுகர்களையும், அவர்களுக்குப் பாதுகாவலாயிருக்கும் அண்ணுச்சியையும் முரடர்களைக் கொண்டு தாக்கிவிடத் துடி துடித்துக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது. இராவணசாமிக்குப் பாண்டியன் மேலும் அண்ணுச்சி மேலும் இருந்த கோபம் முற்றி வெறியாக வளர்ந்திருந்தது. அடிதடிகளில் இறங்கக்கூட அவர்கள் தயாராக இருந்தார்கள். அண்ணுச்சியே இது பற்றிப் பாண்டியனிடம் பலமுறை சொல்லி எச்சரித்திருந்தார். பாண்டியன் அவர் எச்சரித்தபோதெல்லாம் அந்த எச்சரிக்கையைக் கேட்டுக் கொண்டானே ஒழிய அப்படி எதுவும் தனக்கு அபாயம் ஏற்பட்டு விடமுடியும் என்று அஞ்சவில்லை.

பல்கலைக் கழக நேரு விழாப் பட்டி மன்றம் முடிந்து மெஸ்ஸுக்குப் போய்ப் பகல் உணவை முடித்துக் கொண்டு அறைக்கு வந்து ஒரு மணி நேரம் ஓய்வெடுத்துக் கொண்ட பின் மூன்று மணிக்கு அண்ணுச்சி கடைக்குப் புறப்பட்டான் பாண்டியன். வேறு சில மாணவர்களும் உடன் வந்தனர். அவன் புறப்படும்போது கண்ணுக்கினியாளின் ஃபோன் வந்தது. 'பெண்கள் விடுதியில் வெளியே போவது வருவதில் கட்டுப்பாடுகள் அதிகமாக இருப்பதால் தான் அப்போதே அண்ணுச்சி கடைக்கு வர முடியாமலிருப்பதாகவும் மாலை ஐந்து மணி முதல் ஏழு மணி வரை வெளியே



## சத்திய வெள்ளம்

**எதையும் வெறுப்பதனுல் சிலர் கோபப்படுகிருர்கள். எல்லாவற்றையும் நேசிப்பதனுலும் சிலர் கோபப்படுகிருர்கள். எல்லாவற்றையும் நேசிப்பதனுல் கோபப்படுகிறவர்கள் வளைவான வாத்தியத்தில் நேரான இசையைக் கிளரச் செய்கிறவர்களைப்போல் பக்குவமானவர்களாக இருக்கிருர்கள். ★**

வருவதற்கு மட்டும் சிரமப்பட்டு அனுமதி பெற்றிருப்பதாகவும்' கூறினுள் அவள்.

''நீ ஏன் வீணுகச் சிரமப்படணும்? நீ வரவேண்டாமே! நாங்கள் பார்த்துக் கொள்கிறேம்'' என்ருன் அவன். அவளுக்கு அவன் சொல்லியதைக் கேட்டுக் கோபமே வந்து விட்டது.

''நான் உங்கள் பேச்சைக் கேட்க வருவது உங்களுக்குப் பிடிக்கவில்லை என்ருல் பிடிக்கவில்லை என்று சொல்லிவிடுங்களேன். சிரமம் கிரமம் என்று இதெல்லாம் என்ன வார்த்தை யென்று பேசுகிறீர்கள்?''

''அதுதான் எனக்குப் பேசத் தெரியவில்லை என்பதைக் காலையில் நேரு விழாப் பட்டி மன்றத்தில் வெற்றி பெற்றதன் மூலமே நீ நிரூபித்து விட்டாயே?''

''பார்த்தீர்களா? பார்த்தீர்களா? நீங்கள் இப்படி யெல்லாம் சொல்லிக்



ஆச்சரிய வினோபா பாவே இப்பொழுது தம் தாடியை எடுத்து விட்டுச் சுத்தமான முகத்துடன் காணப்படுகிறார்.

- இந்தியன் எக்ஸ்பிரஸ்

- பாலி

காட்டுவீர்கள் என்று தெரிந்திருந்தால் நான் அந்த விவாதத்தில் கலந்து கொண்டு உங்களை எதிர்த்துப் பேசியே இருக்க மாட்டேன். நம்மில் யார் ஜெயித்தால் என்ன? நான் ஜெயித்தாலும் நீங்கள்தான் ஜெயிக்கிறீர்கள். நீங்கள் ஜெயித்தாலும் அதனால் நான்தான் ஜெயிக்கிறேன். நமக்குள் வெற்றி தோல்வி ஏது? நீங்கள் இப்படிப் பிரித்துப் பேசலாமா?'' என்று அவள் அவனைப் பதிலுக்குக் கேட்கவே அவன் மனம் இளகினான். அவளைச் சமாதானப்படுத்தவும் முயன்றான். மாலையில் நடைபெறுகிற நேரு விழாப் பொதுக்கூட்டத்துக்குக் கண்டிப்பாக அவளை வரச் சொன்னான். அவளும் சிறிது நேரம் சொற்பொழிவாற்றிவிட்டு அப்புறம் திரும்ப வேண்டிய நேரத்துக்குள் விடுதிக்குத் திரும்பி விடலாம் என்றும் கூறினான். அப்புறம் தான் அவள் மகிழ்ச்சியோடு அவனிடம் பேசி ஃபோனை வைத்தாள்.

அண்ணாச்சி கடைக்குப் புறப்படுவதற்கு முன் கதிரேசன் அன்று மருத்துவமனையிலிருந்து டிஸ்சார்ஜ் ஆகி வீட்டுக்குப் போயிருக்க வேண்டும் என்று நினைவு வந்தது. அவனைப் போய்ப் பார்த்துவிட்டு அப்புறம் அண்ணாச்சியின் கடைக்குப் போகலாம் என்று சொன்னார்கள் உடனிருந்த மாணவர்கள்.

பதினைந்து நிமிஷங்களுக்கு மேல் கதிரேசனோடு பேசிவிட்டு அவர்கள் அண்ணாச்சி கடைக்குச் செல்வதற்காக அதே பாதை வழியாகத் திரும்பிய போது இராவணசாமியின் கட்சி அலுவலக வாசலில் முன்பு நின்ற அந்தக் கூட்டத்தைக் காணவில்லை. ஆனால் இரண்டு தெருக்களைக் கடந்து அண்ணாச்சி கடைக்கு நேரே சாலை திரும்புகிற இடம் வந்ததும் இந்த மாணவர்களில் யாருமே எதிர்பாராத விதமாகக் கத்தி, கம்பு, சைக்கிள் செயின், அரிவாள்களோடு ஒரு கூட்டம் இவர்களை எதிர்த்துத் தாக்குவதற்குப் பாய்ந்தது. அந்த முரட்டுக் கூட்டத்தில் சற்று முன் இராவணசாமி கட்சி அலுவலக வாசலில் இவர்கள் பார்த்த ஆட்களும் இருப்பதை அடையாளம் காண முடிந்தது. தாக்க வந்த கூட்டத்தைக் கண்டதுமே இந்த மாணவர்கள் போட்ட கூப்பாட்டில் அண்ணாச்சி கடை முன்பு பொதுக் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தவர்களும் அங்கே கூடியிருந்த மற்ற மாணவர்களும் அண்ணாச்சியும் ஓடி வரவே தாக்க வந்தவர்கள் நழுவி மறைந்து விட்டார்கள். இல்லையானால் இரத்தக் கலகம் ஒன்றே அன்று அங்கே நடந்திருக்கும். அண்ணாச்சி பாண்டியனைக் கண்டித்து எச்சரித்தார். மாலை ஐந்தே கால் மணிக்குக் கண்ணுக்கினியாளும், சில மாணவிகளும் கூட்டத்துக்கு வந்தார்கள். பாண்டியன் அவளிடம் நடந்ததைச் சொல்லவில்லை. ஆறு மணிக்குக் கூட்டம் தொடங்கியதுமே கண்ணுக்கினியாள் முதலிய பெண்கள் முதலில் சொற்பொழிவு செய்து விட்டார்கள். அவர்கள் விடுதிக்குத் திரும்ப இருந்தபோது, கண்ணுக்கினியாளையும் பாண்டியனையும் மட்டும் தனியே கூப்பிட்டுக் கொண்டு போனார் அண்ணாச்சி. கடை முகப்புக்கு அழைத்துச் சென்று ''சாயங்காலம் இங்ஙனே கடைக்கு எதிரே என்ன நடந்திச்சு தெரியுமில்லே...? தம்பியை நீதான் எச்சரிக்கணும், தங்கச்சி'' என்று தொடங்கி இராவணசாமியின் கட்சி ஆட்கள் மாணவர்களைத் துரத்தித் தாக்க வந்ததை அவளிடம் விவரித்தார். அதைக் கேட்டு அவள் பதறினாள். 'நீங்கள் இப்படிச் செய்யலாமா?' என்று கேட்பது போல் பாண்டியனை அன்பு கலந்த கோபத்தோடு பார்த்தாள் அவள்.

''தங்கச்சியை நினைச்சாவது இனிமே நீ அபாயங்களைப் பற்றிக் கவலைப்பட்டு எச்சரிக்கையா யிருக்கணும் தம்பி! தங்கச்சி உன்மேலே உசிரையே வச்சிருக்கறப்ப அது பதறிப்போற மாதிரி நீ நடந்துக்கிடக் கூடாது... நம்மைப் பற்றிக் கவலைப்படறவங்க கவலைப்படுவது அதிகமாகிறதுக்கு நாமே காரணமா இருந்திட்டா எப்படி? நீ பாதுகாப்பு இல்லாமே தனியா எங்கேயும் சுற்றக் கூடாது. கொலை வெறியோட எதிரிங்க அலையறாங்க. உன்னைச் சுற்றிலும் உனக்கு எத்தினி பகைமை, விரோதம், குரோதம் எல்லாம் இருக்குன்னு உனக்கே தெரியாது தம்பீ! வேணும்னேதான் தங்கச்சியைப் பக்கத்திலே வைச்சுக்கிட்டு இதையெல்லாம் உங்கிட்டச் சொல்றேன். உன் வாழ்க்கையைப் பற்றிக் கவலைப்படற அதிகப் பொறுப்பு அதுங்கிட்டத்தானே இருக்க முடியும்?'' என்று அவனை அவளையும் அருகே வைத்துக் கொண்டே எச்சரித்தார் அண்ணாச்சி.

(தொடரும்)

# RAJAJI'S MAHABHARATA

*"Those that do not know the story of MAHABHARATA cannot be deemed to be children of Bharatavarsha. Not all could read the original MAHABHARATA in its entirity. I therefore wrote "Vyasar Virundhu" (a condensation of MAHABHARATA in Tamil which was serialised in Kalki). "Vyasar Virundhu" and its English rendering in book form are selling in lakhs. But my own feeling is that this is not enough. I pondered over how best to make people read this epic and asked the Kalki management to serialise "Vyasar Virundhu" once again week after week, which they did. Let all people read this great epic. Falsehood and deceit will get far away on reading our epics; the mind will turn to the path of righteousness. Righteousness alone is the path of deliverance."*

Thus wrote Rajaji in the Kalki some time ago. He later expressed a desire to carry his MAHABHARATA in English in Swarajya. By way of fulfilling his wishes Rajaji's MAHABHARATA will be serialised in Swarajya from the issue dated Jan. 13, 1973.

T. SADASIVAM
Publisher, SWARAJYA
Kalki Buildings, Chetput, Madras - 600031

**Please reserve your copy of Swarajya with your nearest newspaper stall or write to The Manager, SWARAJYA, Kalki Buildings, Madras - 600031**

**Annual subscription Rs. 18/- □ Half - yearly subscription Rs. 9/-**

கார்த்திகை மாதம். தினமும் மாலையில் வைக்கும் இரு அகல்களைக் கொண்டு வந்து தெருப் பக்கம் புரையில் வைத்தாள் கங்கை.

கங்கை எங்களுக்கு என்ன உறவோ? அவள் வேலைக்காரியல்ல. அது மட்டும் தெரிகிறது. சொந்தக்காரியின் உரிமையும் காணோம். எனக்கும் வயது முப்பத்து ஒன்பதாயிற்று. இதுவரை நான் யாரையும் இதைப் பற்றிக் கேட்டதில்லை. கங்கையையே கேட்டிருக்கலாம். ஆனால் என் சுபாவம் அப்படி. கேள்வி மேல் கேள்வி கேட்கத் தெரிவதில்லை எனக்கு.

என் தம்பிகளின் மனைவிமார் இருக்கிறார்களே, நளினியும், சுமித்திராவும்—எத்தனை கேள்விகள் கேட்கிறார்கள்? அடுத்தடுத்து. மேலே மேலே எப்படித்தான் தொடர்ந்து உதிக்கின்றனவோ தெரியாது.

நேற்று நான் எண்ணெய் தேய்த்துக் கொண்டு, தோட்டத்துப் பக்கம் ஒரு திட்டில் அமர்ந்திருந்தேன். குளியல் அறைக்கு மறுபுறம் இருந்தது அந்தச் சிமெண்டு இருக்கை. உள்ளே என் பெரிய தம்பி மகேசன் குளிக்கிறானாக்கும்.

**'கங்கைக்குக் கரையாக அமைந்தாளா அம்மா? அம்மாவினால் கட்டுண்டு அமைதி கண்டாளா, கங்கை?'—விசாரணைக்குத் தீர்வு காண முயல்கிறது கதை.**




# கங்கை

## அநுத்தமா

அவன் மனைவியின் குரல், குழாய்த் தண்ணீரின் 'சோ' என்ற இரைச்சலையும், வெந்நீர் அண்டாவில் செம்பு படுகிற ஓசையையும் தாண்டி எழும்பிக் கேட்கிறது.

''கங்கை என்ன உறவு உங்களுக்கு? உங்கள் அம்மாதான் எனக்கு மாமியார். நான் மரியாதை செலுத்தவேண்டும். இவள் யார்? வீட்டிலே அவளால் கலகம் தான் மிச்சம்!''

''கங்கையா கலகம் செய்கிறாள்? என்னால் நம்ப முடியவில்லையே? அவள் மடியில் படுத்துக் கதை கேட்ட நாள் முதலாக நானும் அவளை அறிவேன்'' என்றான் என் தம்பி.

''ஓகோ! அப்படியா? அப்படியானால் நான் சொல்வது பொய்யா? அவளுக்கு முழுக்க முழுக்க உங்கள் தம்பி மீதுதான் பிராணன். சுமித்திராதான் உசத்தி. அவர்கள் மீது காற்றும் படவிடுவதில்லை. சீக்கிரம் அவளை வீட்டைவிட்டு வெளியேற்றினால் தவிர நம் குடும்பம் கெட்டுவிடும். உங்கள் சுமித்ராவுக்குக் கீழே நான் அடிமையாகக் கிடக்க வேண்டியது தான்.''




''அம்மா இருக்கும்வரை வேறு யாரும் ஆதிக்கம் செலுத்த முடியாது. சரி, போ, நான் குளிக்கணும்'' என்றான் தம்பி. அவன் சிரிப்பது கேட்டது. கூடவே ஒரு செம்பு, 'ணங்'கென்று அலறுவதும் கேட்டது.

எனக்கும் சிரிப்புத்தான். ஆனால் தம்பி பேசினதும் எனக்குப் பெருமையாக இருந்தது.

என் அம்மா சர்வாதிகாரி. அதிகம் பேச மாட்டாள். ஆனால் தன் அகலக் கண்களை விரித்து ஒரு பேச்சு சொன்னால், யாருமே

எதிர்த்து நின்றதில்லை; மாறாக நடந்ததில்லை. பெரிய கண்கள், எடுப்பான நாசி, சிவப்பு மேனி, வாட்ட சாட்டமான தேகம். அம்மாவின் தோற்றமே கம்பீரமாக இருக்கும். அவள் அருகில் கங்கை நிற்பாள். கங்கைக்கும் அம்மா வயது இருக்கும். குள்ளம், ஒல்லி, மாநிறம்..... சிறிதே அசடு தட்டும் வற்றாத புன்னகை, மெதுவான பேச்சு — கங்கை உரக்கப் பேசியோ, பாத்திரங்களைப் 'பொத்' தென்று வைத்தோ நான் பார்த்ததே இல்லை. எப்பொழுதும் ஏதோ வேலை செய்த வண்ணம் இருப்பாள். வேலை ஒழிந்தால் கொல்லைப்புறத்தில் துளசி மாடத்துக்குப் பக்கத்தில் அமர்ந்து பெரிய புராணம் படிப்பாள். இல்லையேல் ஆழ்வார்கள் பாசுரங்களைப் பாடுவாள். நல்ல சாரீரம்.

அம்மா எங்கு போனாலும் நிழல் போலப் போவாள் கங்கை. ஒரு நாள் போனாலும் கூடவே செல்வாள். வீட்டு நிர்வாகம் எல்லாம் அம்மாவுடையதுதான். அவர்கள் இருவரும் தணிவான குரலில் பேசி முடிவு செய்து கொள்வார்கள். மற்றவர்களுக்கு அது விஷயம் ஒன்றுமே தெரியாது. ''கங்கை!'' என்று அம்மா கூப்பிட்டு முடிவதற்கு முன் ''அக்கா?'' என்று பதில் வரும். ஒருவரை ஒருவர், ''நீ'' என்று சகஜமாகக் கூப்பிட்டுப் பேசுவார்கள்.

நாங்கள் எல்லோரும் குழந்தைகளாக இருந்தபோது யாருக்காவது உடம்புக்கு வந்தால் கங்கைதான் கண் விழிப்பாள். ஆஸ்பத்திரியில் துணை இருக்க வேண்டுமானாலும் அவள்தான். இப்பொழுதும் என் தங்கைகள் பிரசவித்தால், கங்கைக்குத்தான் மூச்சுவிடாமல் வேலை இருக்கும். இப்படி இருப்பவள் தன்னுடைய அபிப்பிராயம் என்று ஏதும் சொல்லி என் காதில் விழுந்ததில்லை. எப்படிப் பட்ட நெருக்கடி வந்தாலும் அவள் அரற்றியதும் கிடையாது.

கங்கையைச் 'சித்தி' என்றோ, 'அக்கா' என்றோ அழைத்தவர்களும் கிடையாது. புதிதாக வந்த மருமக்கள்கூடக் 'கங்கை' என்று தானே அழைக்க வேண்டும் ?

நான் கல்யாணம் செய்துகொள்ளப் போவதில்லை என்றேனே? அப்போது வீடு அமளி துமளிப்பட்டது. அந்த அதிர்ச்சியில் அம்மா ஒரு வாரம் படுத்த படுக்கையாகக் கிடந்தாள். ஆனால், அப்பொழுதும் கங்கை தன் போக்கில் தோசைக்கு அரைத்துக் கொண்



டும், தொட்டில் ஆட்டிக் கொண்டும் கிடந்தாள். கங்கை அப்பாவுக்குத்தான் உறவாக இருக்க வேண்டும். ஆனால் அவள் ஒரு நாள் கூட அப்பா எதிரே நின்று பேசினதே இல்லை. இத்தனை நாட்கள் கழித்து இப்பொழுதுதான் இதைப் பற்றி யோசிக்கிறேன் நான்.

நான் என் குளியலை முடித்துக் கொண்டு வேஷ்டியை உலர்த்த மாடிக்குப் போனேன். அம்மா என்னைத் தேடி அங்கு வந்தாள். ''ராஜா, ஒரு வார்த்தை!'' என்றாள். வியப்போடு நான் என் தாயாரின் முகத்தை அண்ணாந்தேன்.

''ராஜா, இப்ப ஒரு சங்கடமடா'' என்றாள் அம்மா.

''என்ன, அம்மா?'' என்று நான் கேட்டேன்.

'' உன் தம்பிகள் இரண்டு பேரும் தனித் தனியே வந்து சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள். கங்கையை வீட்டைவிட்டு அனுப்பி விட வேண்டுமாம்.''

''ஏனாம்? அவள் யாரை என்ன செய்கிறாளாம் ?'' எனக்குக் கோபம் மூண்டது.

'' என்னவோ ? மாட்டுப் பெண்கள் இரண்டு பேரும் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு திரிகிறார்கள்.''

'' அப்பா என்ன சொன்னார் ?''

'' அப்பாவை நான் தொந்தரவு செய்யவில்லை...'' என்று பதிலளித்த என் தாயார், அப்பாவை ஏன் தொந்தரவு செய்யக் கூடாது என்பதற்குப் பதில் சொல்லவில்லை.

''என்னதான் சொல்லறே, அம்மா?''

'' நம் டவுன் வீடு காலியாகத்தானே இருக்கிறது? உனக்கும் ஆபீசுக்குக்கிட்டே இருக்கிறது. உன்னையும் கங்கையையும், நம் மஞ்சுளா பெண் லதா, கருணா பையன் மாது யாவரையும் அங்கே குடி வைக்கலாமா என்று பார்க்கிறேன். அவளுக்குப் போக இடமில்லை. தனியாக வாழவும் சமர்த்துப் போதாது. தைரியமில்லாத அபலையடா !'' என்றாள் அம்மா.

இதுதான் தருணம் என்று அம்மாவைப் பிடித்துக் கொண்டேன். ''அம்மா, கங்கை யாரு ? அவளுக்கென்று குடும்பமே இல்லையா ?'' என்று கேட்டேன்.

அம்மா, ஒரு நிமிஷம் தரையைப் பார்த்தாள். அப்புறம் ஒரு பெருமூச்சு விட்டு விட்டு, ''நம் குடும்பத்திலே அது ஒரு மாசு. முன்பின் விசாரியாமல் அவளை ஒருத்தனுக்குக் கட்டிக் கொடுத்தார்களாம். ஏற்கனவே கல்யாணமானவனாம் அவன். இவர்கள் தந்த சீரையெல்லாம் பெற்றுக் கொண்டு இவளைத் துரத்தி விட்டானாம். அவன் நினைவுக்காக மஞ்சளைப் பூசிக் கொண்டு, நமக்கு உழைத்துக் கொண்டு கிடக்கிறாள்'' என்றாள்.

''அப்படியானால்....'' நான் மேலும் கேட்க ஆரம்பித்ததை ஒரே அழுத்தலாகக் கையமர்த்திவிட்டு அம்மா எழுந்துவிட்டாள். ''நாளைக்கே போய் அந்த வீட்டைச் சுத்தம் பண்ணச் சொல்'' என்றாள்.

மறு நாளே அப்பாவும், அம்மாவுமாக வந்து, எங்களை நகரத்து வீட்டில் குடியேற்றி விட்டார்கள்.

இங்கே வந்தவுடன் கங்கையுடன் தனியாகப் பேசித் தெரிந்து கொள்ள நிறைய வாய்ப்பு இருந்தது. ஏனோ எனக்குத் துணிவில்லை. குழந்தைகள் இருவரும் அவள் கூடவே இருப்பார்கள். எனக்கும் வீட்டு நிர்வாகத்துக்குள் புகுந்து கொள்ளும் பழக்கமில்லாமலேயே போய்விட்டது.

ஒன்றரை மாதம் எங்கள் விடுதி வாழ்க்கை அமைதியாகப் போயிற்று. ஒரு நாள் நான் அலுவலகத்திலிருந்து வந்ததும், வழக்கம் போல் லதா டிபன் கொண்டு தரவில்லை. கங்கையே வந்து எனக்குக் காப்பி, பலகாரத்தைத் தந்துவிட்டு, வழக்கத்துக்கு விரோதமாக என் எதிரே நின்றாள். இந்த வீட்டுக்கு வந்த பிறகு, கங்கை, என் அப்பாவை நடத்துவது போலவே என்னையும் எட்ட நிறுத்தி மரியாதையாக நடத்தினாள். அவள் கதையைக் கேட்ட பிறகு, எனக்கும் பழையபடி வேடிக்கையாகப் பேச மனம் வரவில்லை.

'' என்ன, கங்கா ?'' என்று நான் அவளை நிமிர்ந்து நோக்கிக் கேட்டேன்.

அவளது பயந்த முகத்தில் ஓர் அசட்டுச் சிரிப்புத் தட்டியது. ஆனால் குரலில் வேதனை மிகுந்தது. '' ராஜா! அப்பாவுக்கு உடம்பு சரியில்லையாமே? நீ போய்ப் பார்த்துவிட்டு வருகிறாயா? குழந்தைகள் இரண்டு பேரையும் அனுப்பி வைத்தேன்'' என்றாள்.

'நீ ஏன் போகவில்லை?' என்று கேட்க என் நா அஞ்சியது. ஆனால் வெறுமனே ''உம்'' என்றேன்.

'' அம்மாவுக்குத் தைரியமே போறாது. நோயாளியைப் பார்த்து மருந்து தரணும்.''

''சரி, போகிறேன். நீ எப்படித் தனியாக இருப்பாயாம்?'' என்று பூடகமாகக் கேட்டேன். 'நானும் வருகிறேன்' என்று அவளே சொல்லுவாள் என்று எதிர்பார்த்தேன். நானாக அழைக்க உரிமையற்றவனைப் போல் என்னுள் ஒரு நினைப்பு. அவள் வருவதாகச் சொல்லவில்லை.

''அண்ணா, போய்க் கங்கையை அழைத்து வந்துவிடட்டுமா ?'' — கேட்டது தம்பி.

எனக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. கங்கையை இந்த வீட்டை விட்டு அனுப்பியவர்களே இவர்கள்தானே என்று ! ''கங்கை இங்கே எதற்கு?'' என்று கடிந்தேன்.

'' அண்ணா, நீ கோவிச்சுக்காதே. நான்தான் கங்கையை அங்கே அனுப்பினேன். நானே போய்த் திரும்பக் கூட்டிக் கொண்டு வருகிறேன்.''

''நீ யாரடா, அவளை அனுப்பவும், கூப்பிடவும்?'' என்று நேரிடையாகத் தீப்பொறி பறக்கப் பேசினேன்.

''இரு, அண்ணா, கொஞ்சம் பொறு. நம்ப வீட்டுக்காரச் சின்ன எஜமானிகள் இரண்டு பேரும், கங்கையினால்தான் வீட்டில் கலகம் என்று தீர்மானித்துவிட்டார்கள். இவர்கள் குறை சொல்வதையெல்லாம் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந்து, மற்றவர்கள் பக்கமாகப் பேசிச் சமரசம் செய்வாள் கங்கை. உடனே அவரவர்களும் அவளைத் தன் எதிரியாகப் பாவித்துவிட்டார்கள். நாம் எவ்வளவு சொன்னாலும் அவர்களுக்குப் புரி

யாது. கங்கை இங்கே இல்லாமல் இருந்தால் தான் விளங்கும் என்று நானும் மகேசும் பேசிக் கொண்டு இப்படிச் செய்தோம்.''

'' உங்கள் தாம்பத்தியச் சண்டைகளுக்குக் கங்கை பலியா ?''

''இல்லை, அண்ணா! அவள் ஒரு வடிகாலாக இருந்தாள். அவள் இல்லாமல் போனதும் இரண்டு மருமகளும் ஒருவரை ஒருவர் நேராகத் தாக்கிப் பேசி, போட்டி போட்டு, வேலைக்குச் சமையல்காரி ஒருத்தி இல்லாவிட்டால் வீடு அமைதியாக நடவாது என்கிற கதி வந்துவிட்டது.''

''நன்றாக இருக்கிறது உங்கள் பரீட்சை!''

''இப்ப இரண்டு பேருக்கும் கங்கையின் குணம் புரிஞ்சு போச்சு. அவள் திரும்பி வந்தால், அவர்கள் அவளைப் பிரதட்சிணம் செய்து, நமஸ்காரம் செய்யத் தயாராக நிற்கிறார்கள்.''

'' உங்கள் லீலைகள் இருக்கட்டும். கங்கையின் மனம் என்ன பாடுபடும் என்று யோசித்தாயா ?'' என்று கேட்டேன்.

''ஐயே, அது ஒரு ஜடம்! அதற்கு ஒருவித உணர்ச்சியும் கிடையாது. நான் போய்க் கூப்பிட்டவுடனே வந்துவிடும், பார். மாடு மாதிரி உழைக்கும், பார்'' என்றான் அவன்.

கங்கையை இனிமேல் இந்த வீட்டுக்குள்ளேயே விடக்கூடாது. இனி என் ஆயுள் உள்ள வரையில் அவளைக் காப்பதே என் வாழ்வின் லட்சியமாக இருக்க வேண்டும் என்ற ஒரு வேகம் என் உள்ளத்தில் பொங்கியது.

'' நான் வரேன், அண்ணா! நீ அப்பா பக்கத்திலே இரு. அம்மா பிரயோஜனமேயில்லை. நடுங்கித் தவிக்கிறாள். பழைய அம்மாவே இல்லை'' என்றான் அவன். என் பதிலுக்குக் காத்திராமல் விடுவிடென்று ஓடிவிட்டான்.

''அவளுக்குத் தனியாக வாழத் தைரியம் கிடையாதுடா '' என்று அம்மா கங்கையைப் பற்றிச் சொல்கிறாள். நெருக்கடியில் நின்று போராட அம்மாவுக்குத் தைரியம் போதாதென்று கங்கை கவலைப்படுகிறாள்! இவர்கள் இருவருக்குள்ளே யாருடைய குறையை யார் இட்டு நிரப்பினார்கள் ?

நான் என் தகப்பனார் அருகில் போய் அமர்ந்தேன். அவர் மிக்க பலவீனத்துடன் கண்ணைத் திறந்தார். ''ராஜா! கங்கை எங்கேடா ? அவளை நீ காப்பாற்றுவாயா ? அவளுக்கு நம் குடும்பம் செய்யாத கொடுமையே இல்லையடா ?'' என்றார். அவர் கடைக்கண் விளிம்பில் நீர் தேங்கிற்று.

''அவள் பூஜையில் இருக்க வேண்டிய கங்கைக் கலசமடா. நம் வீட்டுக்கு அவள் வரும்போது ஒரு வயதுக் குழந்தை. நமக்குத் தூரத்து உறவினளான அவளது விதவைத் தாயார் திடீரென்று இறந்து விட்டாள். நம் வீட்டில் வளர்ந்த குழந்தை...''

கங்கையின் பூர்வ கதையைக் கேட்க என் மனம் ஆவல் கொண்டது. ஆனால் அவர் காய்ச்சலை நினைத்துப் பேச்சை வெட்டினேன்.

கங்கை மீண்டும் வந்துவிட்டாள். எனக்கும் சங்கோசமில்லாமல் சமையற்கட்டுப் பக்கம் நடமாட முடிந்தது.

கங்கை வீடு திரும்பியதும், அம்மாவும் பழைய ராணியம்மாவாக மாறிவிட்டாள்.



அப்பாவுக்கும் உடல் குணமாகி விட்டது. கங்கையின் மீதிக் கதையையும் கேட்க நான் துடித்தேன். ஆனால் அப்பா என்னைக் கண்டு எட்டவே இருப்பது போல் எனக்கு ஒரு பிரமை. பலவீன நேரத்தில் எதையோ உளறிவிட்டோமே என்று நினைத்தாரோ?

பொங்கல் பண்டிகை நெருங்கிக் கொண்டிருந்தது. வீட்டில் ஒட்டடை அடிப்பதும், வெள்ளை அடிப்பதும் அமர்க்களப்பட்டன. அப்பாவுக்கு இந்த அலைச்சல் ஆகாது என்று அம்மா, நான், அப்பா, சமையற்கார அம்மா யாவரும் நகரத்து வீட்டுக்குப் போயிருந்தோம். நாளை போகிப் பண்டிகை என்று இருக்க, திரும்ப வீடு வந்து சேர்ந்தோம்.

''கங்கை! பொங்கல் பண்டிகையெல்லாம் முடிந்ததும் நாம் இரண்டு பேரும் பழையபடி அந்த வீட்டுக்கே போக வேண்டியதுதான் '' என்றேன், கண்டிப்பாக.

'சரி, ராஜா' என்று அமைதியாகப் பதில் சொல்வாள் என்று எதிர்பார்த்தேன். ஆனால், அவளோ, ''ஏன்?'' என்று என்னை மடக்கினதும் அதிர்ச்சியுற்றேன். உடனே ஆத்திரம் மூண்டது. ''உனக்குச் சூடு சொரணையே கிடையாதா? குடத்திலே அடைச்ச கங்கையாக மங்கிக் கொண்டு கிட'' என்று கூறிவிட்டு, மேல் துண்டை உதறிக் கொண்டு எழுந்தேன்.

'' குடத்திலே இடக்கிற கங்கையா ? ஐயோ, அது பூஜிக்கத் தகுந்ததாயிற்றே ?'' என்று சொல்லிவிட்டு முறுவலித்தாள் அவள்.

பொங்கல் அன்று காலை அம்மா என்னைக் கிழக்கு வெளுக்கும் முன்பே எழுப்பிவிட்டாள். ''மாசப் பிறப்படா. நானும் கங்காவும் காவேரியில் குளிக்கப் போகிறோம். துணை




யாக வாயேன்'' என்றாள். நான் அவர்களுடன் கிளம்பினேன்.

காவேரிக் கரையில் அம்மா முன்னதாக முடித்துக் கொண்டு கரையேறி, மாற்றுடை கூட உடுத்திக் கொண்டு விட்டாள். கங்கை இன்னமும் தன் புடவையோடுகூட அம்மா புடவையையும் அலசிக் கொண்டு தண்ணீரிலேயே வேலையாக இருந்தாள்.

''கங்கை!'' என்று அதட்டுப் போட்டாள் அம்மா.

'' அக்கா !'' என்றாள் கங்கை நிமிராமலே இயந்திரம்போல.

''அவள் நிலைமைக்கு ஜடமாக இருப்பது ஒரு நன்மைதான்.'' முணுமுணுத்தேன் நான்.

'' யாரடா, ஜடம் ? நீதான் முட்டாள்!'' உணர்ச்சியுடன் பேசினாள் அம்மா. ''அவளுக்கு நேர்ந்திருக்கும் மனக் கஷ்டமும் அதிர்ச்சியும் வேறு ஒருவரைப் பைத்தியமாக்கியிருக்கும். இவளைப் பக்குவப்படுத்திவிட்டது பூர்வ ஜன்ம வாசனை. கேள் கதையை. அவளைத் தன் சொந்தத் தங்கையாக நினைச்சார் உன் அப்பா. அவர் கல்லூரியில் படிக்கும் போது யாரோ ஒருவன் ஒரு நாள் தன் தங்கைக்கு ஓர் அழகான பட்டுப் புடவையும் வளையலும் வாங்கிப் போனானாம். தானும் அதே போல் ஒன்றை வாங்கி வந்தாராம், உன் அப்பா. இதை ஒட்டி வீட்டில் ஒரே குழப்பம். அநாதையான இந்தக் கங்கையையே மணந்துவிடுவாரோ என்று பயந்து அவசரப்பட்டுக் காரியத்தை முடித்துவிட்டார்கள் உன் தாத்தாவும் பாட்டியும். கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த உன் அப்பாவுக்குக் கல்யாணத் தகவல்கூட அனுப்பவில்லையாம்.'' அம்மா நிறுத்தினாள்.

கங்கை ஈரத் துணிச் சுமையோடு படியேற ஆரம்பித்து விட்டாள். அவளைப் பார்த்த படியே தணிவான குரலில் தனக்குள் பேசிக் கொள்வது போலவே அம்மா மீதியும் சொல்லி முடித்தாள். ''அன்று முதல் கங்கை அப்பாவுடன் சகஜமாகப் பேசுவதையே விட்டுவிட்டாளாம். யாரும் இந்த வியவகாரத்தைப் பற்றி வாய்விட்டுப் பேசாமலேயே இக்குடும்ப வாழ்க்கை நடந்து வருகிறது, பார். அதுதான் அதிசயம்'' என்று கூறி வியந்தாள் அம்மா.

என் தாயைக் கண்டு நான் வியந்தேன். இவ்விரு பெண்களுக்குள் என்ன என்ன சக்திகள் பதுங்கிக் கிடக்கின்றனவோ ?

'' என்ன அக்கா, பிள்ளையோடு என்ன சொல்றே ?'' என்று ஒரு குழந்தை போலக் கேட்டாள் கங்கை.

''சுமக்கிறதைப் பார்! ஈரத்தை அவிழ்த்து விட்டு நீயும் என்னைப் போல் உலர்ந்த புடவை உடுத்திக்கக் கூடாது?'' என்றாள் என் தாய்.

'' ஈரந்தான் உடம்போடு ஒட்டுகிறது. ஈரத்தோடு ஈரம் சுமையாகத் தெரிவதில்லை. உலர்ந்ததை உடுத்திவிட்டால், ஓர் ஈரத் துணிகூடப் பளுதான்'' என்றாள் கங்கை.

நான் நெட்டுயிர்த்துக் கொண்டேன். எந்த ஈரத்தைக் குறிப்பிடுகிறாள்? பாசத்தையா ? அவள் எங்களிடம் வைத்த அன்புதானே எதையும் சகித்துக் கொள்ள வலுவைத் தந்துவிட்டது அவளுக்கு !

நான் ஆற்றையே கவனித்தேன்.

''ஆற்றைப் பார்த்தாயா, அக்கா? நிரம்ப ஓடுகிறாள் நதி. ஆழமாக நதி ஓடும்போது எப்படி அமைதியாகத் தெரிகிறது! ஆனால், அவளுக்குள்ளே எத்தனை சுழல், எத்தனை கொந்தளிப்பு!'' என்றாள் கங்கை.

எனக்குத் தந்த பதிலா இது?

''ஆமாம், கங்கை. ஆழமாக அமைதியாக ஓடுகிற கங்கைதான் மற்றவர்களின் அழுக்கையும், பாவத்தையும், பிரேதங்களையும் தாங்கினால் கூடத் தன் பரிசுத்தம் கெடாமல், தன்னை ஸ்பரிசித்தவர்களையெல்லாம் சுத்தமாக்குகிறாள். அதுக்குத்தானே காசிக்குப் போகிறோம் ?'' என்றாள் என் அம்மா, என்னைக் கடைக்கண்ணால் பார்த்த படியே.

அம்மா எந்தக் கங்கையைக் குறிப்பிட்டாள் என்பது எனக்குப் புரிந்தது. ஆனால் நான், மேலுக்கு வேடிக்கையாக, ''கங்கை! நீ அந்தக் கங்கையைப் பார்த்திருக்கிறாயோ ?'' என்று கேட்டேன்.

'' அங்கே போனால்தான் கங்கையோ ? ஐப்பசி மாசத்திலே இங்கேயே வராளே ?'' என்று பாமரமாகப் பதிலளித்தாள் கங்கை.

நான் வாயடைத்துப் போனேன். இந்தக் கங்கையின நான் அளக்கவல்லவனா? நான் யார் அவளுக்கு அணை போட்டுக் காக்க ?

பொங்கல் அன்று எல்லோரும் வந்து, ''பால் பொங்கிற்றா ?'' என்று விசாரித்தார்கள்.

நான் மௌனமாகக் கங்கையின் காலிலும், என் தாயாரின் பாதங்களிலும் நெடுஞ்சாண் கிடையாக விழுந்தேன். இருவரையும் பிரித்தே பார்க்க முடியவில்லை என்னால். கங்கைக்குக் கரையாக அம்மா அமைந்தாளா, அம்மாவினால் கட்டுண்டு அமைதி கண்டாளா கங்கை? நான் விசாரணையில் இறங்கவில்லை.

என் நெஞ்சில் அமுதம் பொங்கிப் பொங்கி வழிந்தது.

என்ன! கரும்பு ஐந்து பைசாதானா?

ஆமாம் சார்! ஒரு சென்டிமீட்டர் 5 காசு! உங்களுக்கு எத்தனை மீட்டர் வேணும்?



இஞ்சிக் கொத்தும் மஞ்சள் கொத்தும் பிளாஸ்டிக்கிலே மலிவாகக் கிடைச்சுது. வாங்கிட்டு வந்தேன். பானைக்குக் கட்டு. இந்தா!"



" பொங்கலை விழுங்கினீங்களா, இல்லை; பொங்கல் பானையையே விழுங்கினீங்களா?








# நம்பிக்கை

## இந்திரா பார்த்தசாரதி

**கனகத்தை 1973 நளாயினி என்று தீர்மானித்தான் பாபு. எதற்காக....?**

**வா**சற் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறாரே, யார் அவர்? வண்டிக்காரனுக்குப் பணத்தைக் கொடுத்து விட்டுப் பெட்டி, படுக்கையுடன் வீட்டுக்குள் செல்ல முற்பட்ட பாபுவுக்கு இவர் யாரென்று புரியவில்லை. அவர் மிக உரிமையோடு, அமர்த்தலாகத் தூணின் மீது சாய்ந்த நிலையில் உட்கார்ந் திருந்தார். முழங்காலின் மீது கையைப் போட்டுக்கொண்டிருந்தார். குடுமி, சிவப்பு மேனி, வெள்ளை வேட்டி, துண்டு. அவனைப் பார்த்ததும் வரவேற்கும் பாணியில் தலையை அசைத்துப் புன்னகை செய்தார். தன்னைத் தன் வீட்டிலேயே வரவேற்கும் இவர் யார் என்று யோசித்தான் பாபு.

''வாடா, வா. என்ன உடம்பு இப்படி இளைச்சிருச்கு? அம்புது சாதமே போடறதில்லையா?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் அவன் அம்மா.

''வாசல்லே உட்கார்ந்திருக்கிறாரே, அவர் யாரும்மா?'' என்று கேட்டான் பாபு.

''உங்க டில்லிப் பிள்ளையா மாமி?...அப்படியே உங்களை உரிச்சு வைச்சிருக்கிறாரே?''

அவன் திரும்பிப் பார்த்தான். இந்தக் கேள்வியைக் கேட்ட பெண்மணிக்கு முப்பத்தைந்து வயதிருக்கலாம். அதிகாரம் செய்தே பழக்கப்பட்ட குரல் போலிருக்கிறது. தையல் போட்ட கைத்தறிப் புடவை.

''நாங்க உங்காத்திலே குடியிருக்கோம்... வாசல்லே உட்கார்ந்திருக்கிறவர் என்னோட அகத்துக்காரர்.'' அவள் சிரித்துக்கொண்டே பேசினாள். பற்கள் வெள்ளை வெளேரென்றிருந்தன.

''ஏன் மாமி, எங்களைக் குடிவச்சிருக்கிறதைப் பத்தி நீங்க அவருக்கு எழுதிலியா ? எழுதியிருக்கேன்னேளே? எங்கப்பாவும் டில்லியில்தான் இருக்கார்.... பாரதி நகரிலே ஸ்ரீநிவாச அய்யங்கார்ங்கிறவர் ஆத்திலே தளிகை பண்ணிப் போடறார். அவர் பேரு வரதாச்சாரி... இங்கே இவர் என்னடாவென்றால் தூணுக்குச் சிநேகிதமா, திண்ணையைத் தேச்சிண்டு உட்கார்ந்திருக்கார். சம்பாதிக்கத் துப்பில்லே, ஆனால் அதிகாரம் கொடி கட்டிப் பறக்கும்...''

''என்ன ஆச்சரியத்தோட அவளையே பார்த்துண்டிருக்கே, கனகம் அவள் ஆம்படையானுக்குக் கொடுக்கிற மரியாதையையா!'' என்றாள் அம்மா.

''சோறு போட வழியில்லேன்னு எதுக்காகக் கல்யாணம் பண்ணிக்கணும், சொல்லுங்கோ மாமி? ஊர்லே மூணு ஏக்கராவோ, நாலு ஏக்கராவோ நிலம் இருந்தது. அதையும் எவகிட்டேயோ அழுதாச்சு. இரண்டு கிளாஸ் படிச்சிருக்கியே, எதாவது ஒரு கடையிலே போய்க் கணக்கு எழுதுன்னா, போக மாட்டாராம் துரை... பெருங்காயம் இருந்த டப்பாவாச்சே, இப்போ பெருங்காயம் வாங்கறதுக்குக்கூட வழியில்லே...''

கனகம் பேசுவதெல்லாம் வாசலில் உட்கார்ந்திருந்த அவளுடைய கணவன் காதில் விழாமல் இருக்க முடியாது. அவர் கேட்க வேண்டுமென்பதற்காகவே அவள் பேசுவது போல் பாபுவுக்குப் பட்டது. இது தினசரி நிகழ்ச்சியாக இருக்க வேண்டும். இதனால்தான் அவர் இவளுடைய கூச்சலினால் எந்த விதத்திலும் பாதிக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

பாபு 'காமிரா' அறைக்குள் சென்றான்.

''ஒண்டிமா இருந்து என்ன செய்யறதுன்னு புரியலே... அதனாலே கூடத்து அறைக்கு இவாளைக் குடி வச்சேன். இவா வந்து ஒரு வருஷம் ஆகப் போறது. முதல் ரெண்டு மாசம் வாடகை கொடுத்தா...''

பாபு பெட்டியைத் திறந்து சோப்புப் பெட்டி, துவாலை ஆகியவற்றை எடுத்துக் கொண்டான்.

''வெந்நீர் போடட்டுமா?'' என்று கேட்டாள் அம்மா.

''வேணும். கிணத்தங்கரையிலே குளிக்கறேன். கிணத்துத் தண்ணியிலே குளிக்கணும்னுதானே வந்திருக்கேன்!''

''அப்போ, அம்மாவைப் பாக்க வல்லியா?''

பாபு பதில் சொல்லவில்லை. புன்னகை செய்தான். அதற்குள் கனகம் காப்பியை நீட்டினாள்.





பாபு ஒன்றும் புரியாமல் அம்மாவைப் பார்த்தான்.

''நீ ஏண்டி காப்பி போட்டுக் கொண்டு வந்தே? நான் உள்ளே டிக்காக்ஷன் போட்டிருக்கேன். வேண்டாம், உங்காத்துக்காரர் கிட்டே கொடு.''

''உங்காத்துக் காப்பியா இருந்தா என்ன, எங்காத்துக் காப்பியா இருந்தா என்ன, எல்லாம் நம்மாத்தானே, மாமி? இந்தாங்கோ, குடியுங்கோ.''

காப்பியை வேண்டாம் என்று நிர்த்தாட்சிண்யமாக மறுக்கப் பாபு விரும்பவில்லை. வாங்கிக் கொண்டான்.

''உங்கம்மா போட்டுத் தரக் காப்பி மாதிரி இருக்காது. இருந்தாலும்...''

''ஏண்டி அம்மாவை இழுக்கறே, அகத்துக்காரி போட்டுத் தர காப்பி மாதிரின்னு சொல்லு'' என்றாள் அம்மா.

அவன் குளித்துவிட்டுத் திரும்பியபோது, அம்மா அவன் அருகில் வந்து கீழ்க் குரலில்

சொன்னாள். ''அவகிட்டே ரொம்பப் பேசாதே...''

பாபுவுக்குப் புரியவில்லை. ''யார்கிட்டே?''

''கனகத்துக்கிட்டே.... கொஞ்சம் பேசினே கடன் கேட்க ஆரம்பிச்சுடுவா, ஜாக்கிரதை. வாடகை கொடுக்காமே வீட்டிலே இருக்கிறது போறும், பணம் வேறே தரவேணும்.''

''என்ன மாமி, அம்புலு உடம்பு தேவலே யாமா?''

பாபுவும் அவன் அம்மாவும் திடுக்கிட்டுத் திரும்பினர். கனகம் அறை வாசலில் நின்று கொண்டிருந்தாள்.

''ஹூம்... தேவலையாம்... ஆமாம், இனி இப்படி சொல்லாமே கொள்ளாமே திடுதிப்னு வராதே. இவனுக்குப் பிடிக்காது.''

''சரி, அடுப்பிலே வெந்நீர் வைச்சிருக்கேன்... இன்னிக்குச் சனிக்கிழமை, அவர் எண்ணெய் தேச்சுப்பர்... நீங்க குளிச்சுட்டு வந்துட்டேளே, எண்ணெய் தேய்ச்சுக்க லியா?''

''அவனா! ஆத்தை விட்டு ஹாஸ்டல்லே படிக்கப் போன நாளிலிருந்தே, எண்ணெய் தேய்ச்சுக்கிறதை விட்டுட்டான்.''

''கனகம்!'' என்று அவள் கணவர் கூப்பிடும் சத்தம் கேட்டது.

''பார்த்தேளோன்னோ, அதிகாரம் தூள் பறக்கிறது'' என்று சொல்லிக் கொண்டே கனகம் அகன்றாள்.

''இப்படி ஆம்படையானை வையறுளோன்னோ, கூடத்திலே போய்ப் பாரு, அந்த எண்ணெய் தேய்ச்சுக்கிற காட்சியை...''

பாபு பனியனைப் போட்டுக் கொண்டு, தலையை வாரிய பிறகு கூடத்துக்கு வந்தான்.

அவர் கூடத்து முற்றத்தில் எண்ணெய் தேய்த்துக் கொள்ளத் தயாராக நின்றுகொண்டிருந்தார். குடுமியை அவிழ்த்து இரண்டு விரல்களினால் நீவி விட்டார். அவருக்கு நாற்பது வயது இருக்கலாம். உடம்பு எஃகினால் செய்யப்பட்டதுபோல் அவ்வளவு உறுதியாக இருந்தது. செறிந்திருந்த அந்த மயிர்த் திரளில் ஒரு மயிர்கூட நரைத்திருப்பதாகத் தெரியவில்லை.

அவன் கூடத்துப் பெஞ்சியில் உட்கார்ந்ததும், அவர் அவனைப் பார்த்துப் புன்னகை செய்தாரே யொழியப் பேசவில்லை.

கனகம் எண்ணெயைக் கொண்டு வந்து வைத்தாள். அவர் அந்த எண்ணெய்க் கிண்ணத்தைச் சில விநாடிகள் உற்றுப் பார்த்துக் கொண்டே யிருந்தார். பிறகு இடுப்பு வேட்டியை உரிந்து ஒரு பாத்திரத்தில் போட்டார். பழனியாண்டவராகச் சிறிது நேரம் நின்றார். பூணூலைக் காதில் சுற்றிக் கொண்டார். எண்ணெயில் ஒரு சொட்டு எடுத்துப் புறங்கையில் வைத்துத் தேய்த்துப் பார்த்தார்.

''சுத்த எண்ணெய் எங்கே கிடைக்கிறது? எல்லாம் கலப்படம்...'' என்றார் பாபுவிடம். அவன் தலையசைத்து ஆமோதித்தான்.

எண்ணெயைக் கைநிறைய ஊற்றிக் கொண்டு நீண்ட தலைமுடியில் வைத்துத் தேய்த்துக் கொள்ள ஆரம்பித்தார். அவர் செய்கை ஒவ்வொன்றும் ஒரு தாள லயத்துக்குக் கட்டுப்படுவது போல் பாபுவுக்குத் தோன்றிற்று. கிண்ணத்திலிருந்த எண்ணெய் முழுவதும் தலைமயிருக்கே அர்ப்பணமாயிற்று.

''இன்னும் கொஞ்சம் எண்ணெய் கொண்டா...''

''எல்லாம் போறும். தளிகை பண்ண எண்ணெய் இல்லே. தேச்சுக்க ரெண்டு சொம்பு எண்ணெய் வேணுமா?''

''போறலேடி...கொஞ்சம் கொண்டாடி.'' அவர் குரல் இப்பொழுது கொஞ்சிற்று.

கனகம் எண்ணெய் கொண்டு வந்து கிண்ணத்தில் விட்டாள். அவர் நிதானமாக எண்ணெய் தேய்த்துக் கொண்டார்.

கனகம் ஒரு பாத்திரத்தில் வெந்நீரைக் கொண்டு வைத்தாள். அவர் ஆள் காட்டி விரலை அவ்வெந்நீருக்குள் இட்டுப் பதமாயிருக்கிறதா என்று பார்த்தார்.

''இந்தா இதை இன்னும் ஒரு அஞ்சு நிமிஷம் அடுப்பிலே வச்சுக் கொண்டா.''

''எல்லாம் போறும்... இனிமேல் வெறகு கிடையாது....''

''வெந்நீர் சுடலியோ?'' என்று அவன் கேட்டான்.

''சுடறது.... இன்னும் கொஞ்சம் பதமாக இருக்கணும்.''

எண்ணெய் தேய்த்துக் கொள்ளுதல் என்பதை அவர் ஒரு கலையாகப் பயின்றிருக்கிறார் என்று அவனுக்குத் தோன்றிற்று.

கனகம் வேறொரு பாத்திரத்தில் வெந்நீரைக் கொண்டு வந்து ஏற்கனவே வெந்நீர் இருந்த பாத்திரத்தில் கொட்டினாள்.

அவர் ஆள்காட்டி விரலைப் பாத்திரத்தில் இட்டார். முகத்தில் திருப்தி.

''ஹூம்..... இப்போ ஸ்நானம் செய்யலாம்........''

அவர் குளித்துவிட்டு, கொடியிலிருந்த வெள்ளை வேட்டியை விசிறி மடிப்பாக ஒன்று சேர்த்து அப்படியே உதறினார். பிறகு அதை விரித்தார். அதைக் கட்டிக் கொண்டு, வந்து மேல் துண்டு ஒன்றைக் கொடியிலிருந்து உருவித் தோளில் போட்டுக் கொண்டார்.

கனகம் திருமண் பெட்டியையும், ஒரு தம்ளரில் தண்ணீரையும் கொண்டு வைத்தாள். திருமண் காப்பு ஆன பிறகு 'அப்பாடி' என்று ஆசுவாசப்படுத்திக் கொண்டு அவர் எழுந்தார்.

கனகம் பலகையைக்கொண்டு போட்டாள்.

'' என்ன தளிகை?''

''ஏதோ தளிகை.... போட்டதைச் சாப்பிட வேண்டியதுதானே.....?''

அது 'ஏதோ' தளிகை அல்ல. ஒரு கறி, ஒரு கூட்டு, பச்சடி, அப்பளம். இந்தக் குடும்பம் வறுமையால் வாடுகிறது என்று யார் சொல்லுவார்கள்? அவன் பரிமாறுவதைப் பார்த்தபோது பாபுவுக்குத் தானும் அவரோடு சாப்பிட வேண்டும் போல் தோன்றிற்று. பணம் இல்லாமல் எப்படிக் குடித்தனம் நடத்த முடிகிறது இவர்களால்? —

''அம்மா.....''

பாபு வாசலை நோக்கினான். இடுப்பில் ஒரு பெரிய 'பெல்ட்' அணிந்த ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவருக்கு ஐம்பத்தைந்து வயதிருக்கலாம், காதில் சிவப்புக் கடுக்கன் போட்டுக் கொண்டிருந்தார்.

'' வாங்க சேர்வை, அப்படியே அந்த ஸ்டூல்லே உக்காருங்க, வந்துட்டேன்...... ஐயா சாப்பிடறார்.....'' என்றாள் கனகம்.



ஸ்ரீரங்கம் ஆண்கள் உயர்நிலைப் பள்ளி உதவி ஆசிரியர் (ஓய்வு பெற்ற) ஸ்ரீ V. வேங்கடராம அய்யர் அவர்கள் குமாரத்தி சௌ. **யோகலக்ஷ்மிக்கும்** திருச்சி, ஸ்ரீ G. நாகராஜ அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி **சுகவனேஸ்வர**னுக்கும் ஸ்ரீரங்கத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

# சொக்கவைக்கும் சௌந்தரியம் சோபிதமான பிரிண்டுகளில்

# கடாவ்

வாயில்கள்



**தி கடாவ் மகன்ஜீ ஸ்பின்னிங் அண்ட் வீவிங் கம்பெனி லிட்.**

தலைமை அலுவலகம்: லக்ஷ்மி பில்டிங், பல்லார்ட் எஸ்டேட், பம்பாய் 1
மில்: ஹெயின்ஸ் ரோடு, பைகுல்லா பம்பாய் 27
மொத்த விற்பனைக் கடை: மூல்ஜீ ஜேதா மார்க்கெட் பம்பாய் 2

KMS-21/PREM ASSOCIATES

''நான் உக்கார வல்லே...... எத்தனே நாளேக்கு என்னே அலேயவிடப் போறீங்க, சொல்லிடுங்க......''

''நீங்க அலேவானேன், பணம் வந்த உடனே நானே கொண்டு வந்து தரேன்னு சொன்னேனே..... மேலக் காவேரியிலேந்து நடந்து வந்திருக்கீங்களே, இந்தப் பிச்சைக் காசுக்காக......''

''பிச்சைக் காசை விட்டெறியத்தான் உங்களாலே முடியலியே.... மானம் மரியாதை இருந்தா எப்பவோ கொடுத்திருப்பீங்க.........'' சேர்வை இவ்வாறு சொல்லிக் கொண்டே ஸ்டூலில் உட்கார்ந்தார்.

கனகம் ஒரு தம்ளரில் ரஸம், ஒரு தட்டில் ஐந்தாறு அப்பளங்கள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டு போய்ச் சேர்வையிடம் நீட்டினாள்.

''என்ன இது?'' என்றார் சேர்வை.

''ரஸம் குடிச்சுப் பாருங்கோ.... எல்லாம் உங்க கடை சாமான்தான். எப்படிப் பண்ணியிருக்கேன், பார்த்துச் சொல்லுங்கோ....''

''எனக்கு வேணும்.... என் கணக்கை முடிங்க அது போதும்....''

''என்ன சேர்வை, இப்படிப் பேசறீங்க? கணக்கை முடிக்காமலா இருக்கப் போறேன்? அதுக்காக ஒரு நல்ல ரஸம் கிடைச்சுதுன்னு அதைக் குடிக்க மாட்டேன்னு சொன்னீங்கன்னு அது யாருக்கு நஷ்டம்....? நான் அடுத்த மாசம் உங்க கணக்கைத் தீர்க்கிற போது வருத்தப்படப் போறீங்க, 'கனகம் அன்னிக்கு நல்ல வாசனேயா ரஸம் கொடுத்தது. அதை நாம் சாப்பிடாம வந்துட்டோமே'ன்னு....''

''அடுத்த மாசமா? என்ன விளேயாடறீங்க ?''

''உங்ககிட்டே எனக்கு என்ன விளேயாட்டு சேர்வை. ஐயா அறுப்புக்கு ஊருக்குப் போகப் போறார். தை மாசம் பணம் நிச்சயம் வந்துடும், தந்துடறேனே.......''

''எந்த ஐயா அறுப்புக்குப் போகப் போறாரு ?''

''எந்த ஐயா போவார், எல்லாம் நம்ம வீட்டு ஐயாதான்......''

''வேடிக்கை பாக்கவா?''

''என்ன சேர்வை, கிண்டலா பேசறீங்களே? ஐயாவுக்கு நெலம் இருக்கிறது உங்களுக்குத் தெரியாதா? ஊம்.... குடிச்சுப் பாருங்க ரஸத்தை, விஷம் இல்லே......''

சேர்வை ரஸத்தை வாங்கிக் கொண்டார்.

''ஆமாம்..... டில்லியிலேயிருந்து பணம் வரப் போறது தரேன்னீங்களே, இப்போ ஐயா அறுப்புக்குப் போகப் போறாரு, அது இதுங்கிறீங்களே, நல்லா இருக்குதா?''

''டில்லியிலேருந்து அவர் வந்திருக்கார், கேட்டுப் பாருங்க.....'' அவள் பாபுவைச் சுட்டிக் காட்டினாள். ''பணம் வரும்னு நினேச்சேன்..... கிழவருக்கு, அதான் எங்கப்பாவுக்கு ஒரே காய்ச்சலாம், ஆஸ்பத்திரியிலே இருக்காராம், இப்போத்தான் இவர் சொன்னார். நாங்க வருத்தப்படப் போறோமோன்னு எங்கப்பா இதைப் பத்திக் கடிதாசே எழுதலே. மனசு வேதனேயா இருக்கு.....''

சேர்வை பாபுவைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்தார். கனகம் மிக அலட்சியமாகப் பொய் சொல்லிக் கொண்டே போனது, பாபுவை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. சேர்வை தன்னே இது வாஸ்தவமா என்று கேட்டால் என்ன பதில் சொல்வது? — எழுந்து, உள்ளே போய்விடலாமா என்று நினேத்தான். அருமையான நாடகக் காட்சி நடந்து கொண்டிருக்கும் போது இதை விட்டுப் போவதற்கு அவனுக்கு மனசு வரவில்லே.

சாப்பிட்டுக் கையை அலம்பிக் கொண்டு, சேர்வைக்கும் கனகத்துக்குமிடையே நடந்து கொண்டிருந்த பேச்சுக்கும், தமக்கும் எந்த வித சம்பந்தமும் இல்லாதது போல், வாசலே நோக்கிச் சென்றார் கனகத்தின் கணவர்.

''ஐயரே.....'' என்றார் சேர்வை.

துண்டால் வாயைத் துடைத்துக் கொண்டே கேட்டார் அவர்: ''என்ன?''

''பணம் எப்போ தரப் போறீங்க ?''

அவர் திடுக்கிட்டு நின்றார்.

''என்னேயா கேட்கிறீங்க?''

''பின்னே யாரைக் கேப்பாங்க? உங்களேத்தான். வர்றவங்க போறவங்ககிட்டே எல்லாம், கெஞ்சிக் கூத்தாடிக் கடன் வாங்கி இந்த அம்மா உங்களுக்குச் சமைச்சுப் போட்டுக்கிட்டிருக்காங்களே, அவங்களே ஏன் ஏமாத்திக்கிட்டுத் திரியறீங்கன்னு கேக்கறேன்.''

''நான் என்ன ஏமாத்தினேன் ?''

''ஊர்லே நிலமிருக்குதுன்னு எதுக்காகப் பொய் சொல்றீங்க? நிலத்தை எல்லாம் வித்துத் தொலேச்சு ஊரைவிட்டே ஓடி வந்திருக்கீங்கன்னு அம்மாகிட்ட சொல்லலியா?''

அவர் கனகத்தைப் பார்த்தார்.

''அப்படியா, நிலத்தை வித்துட்டாரா ?'' கனகம் நாடகத்தில் நடிக்காமலிருந்தது நாடக உலகுக்கு நஷ்டம் என்று பாபுவுக்குப் பட்டது. எவ்வளவு இயல்பாக, முதல் முறையாக இச்செய்தியைக் கேட்பது போல் அவள் கேட்கிறாள்?

''ஆமாங்க.... நீங்களானு, அவரு அறுப்புக்குப் போகப் போறாரு, பணம் கொண்டாறப் போறாருன்னு நினேச்சுக்கிட்டிருக்கீங்க.... இவருக்கு அந்த ஊர்லே ஒரு குழி நிலம்கூட இப்போ கிடையாது.... உங்க ஊர் மணியக்காரரு எனக்குச் சகலே..... அவர் நேத்தோ முந்தாநாளோ வந்திருந்தாரு.... அவர்தான் எல்லாம் சொன்னாரு....''

''நிலத்தை எதுக்காக வித்தேன்....? அதை நம்பிண்டுதானே நான் இருந்தேன்? இப்போ அதிலேயும் மண்ணேப் போட்டாச்சா ?.... நிலத்தை வித்து யாருக்குப் பணம் கொடுத்தேன், சொல்லுங்க? என்ன சேர்வை, ஊர்லே இவருக்குப் புதிய பெண் சிநேகம் ஏதாவது உண்டா சொல்லுங்க, உங்க சகலே ஏதானும் சொன்னாரா?''

சேர்வை அவளுடைய கணவரைப் பார்த்துக்கொண்டே சொன்னார்... ''புதிய சிநேகம் உண்டு, இல்லே, அதைப் பத்தி எனக்கென்ன கவலே? — அவருக்கு இப்போ நிலம் இல்லே, அதான் என் கவலே.... எப்படி என் பர்க்கியைத் தீர்க்கப் போறீங்க? இதான் இன்னும் பெரிய கவலே.....''

''நிலத்தை வித்துட்டு, பிரும்மஹத்தி பிடிச்ச மாதிரி, அதான் வாசல்லே இன்னேக்

ருக் காவலா உட்காந்திருக்கேளா? இப்போ எப்படிக் குடித்தனம் நடத்தறதுன்னு நினைச்சுண்டிருக்கேள்? உங்களுக்குப் பொண்ணைக் கொடுத்த பாவத்துக்காக அந்தக் கிழவர் உசிருக்கு மன்றாடிண்டு யார் யாருக்கோ பொங்கிக் கொட்டிப் பணம் அனுப்புவார்னு எதிர்பார்க்கிறீங்களே, உங்களுக்குச் சூடு, சொரணை இருக்கான்னு கேக்கறேன்? சேர்வை நல்லவர், வந்து சொன்னார்.... இல்லாட்டா நிலம் இருக்குன்னு நினைச்சுண்டு நான் மாசத்துக்கும் கடன் வாங்கிண்டே போனேன்னா, எப்படி அடைக்கிறதுன்னு நினைச்சுண்டிருக்கேள்? உங்களுக்கு வேலைக்குப் போனா என்ன கேடு?''

அவர் பேசாமல் நின்று கொண்டிருந்தார்.

''ஐயரே, அம்மா கத்திக்கிட்டே இருக்காங்க, நீ பாட்டுக்குக் கவலைப்படாமெ நிக்கறீங்க? அம்மா சொல்ற மாதிரி ஒரு வேலைக்குப் போனாத்தான் என்ன உங்களுக்கு?''

''நல்லா கேளுங்க சேர்வை, கேளுங்க.... நீங்க நல்லவர், நான் கஷ்டப்படறது உங்களுக்குப் புரியறது..... எல்லாரும் இப்படி இருப்பாங்களா, சொல்லுங்க? இவருக்கு நிலம் இருக்குன்னு நம்பி, எங்கப்பா — சும்மா கொடுக்கலே, — அஞ்சு ஆறு செலவழிச்சுத் தான் கொடுத்தார். அப்படிச் செலவழிச்சத் தோட பலன், அவர் இப்போ தில்லிப் பட்டணத்துக்கு ஓடி அடுப்பங்கரையிலே வெந்துண்டிருக்கார்...... இவர் சொகுசா வேளா வேளைக்குச் சாப்பிட்டுண்டு, திண்ணையிலே படுத்துண்டு தூங்கிண்டிருக்கார். இப்போ உங்க கடனை எப்படி அடைக்கப் போறேன்..''

பேசிக் கொண்டே இருந்தவள், தொண்டை அடைத்து, அழத் தொடங்கி விட்டாள். இந்த அழுகை நடிப்பாகப் பாபுவுக்குப் படவில்லை..... திடீரென்று பொங்கி எழுந்த உணர்ச்சியில் அவள் அழுவதாக அவனுக்குப் பட்டது.

''அம்மாம்மா.... என்ன இப்படி அழறீங்க? நீங்க எப்படியும் பாக்கியைக் கொடுத்துடுவீங்கன்னு எனக்குத் தெரியாதா ?.... நான் கடன் பாக்கியை மட்டும் கேக்க வரலே, உங்க புருசன் செஞ்சிருக்கிற அக்கிரமத்தையும் சொல்ல வந்தேன். நீங்கள் நிலம் நிலம்னு அதை நம்பிக்கிட்டிருக்கீங்க....ஐயா ஊர்லே வெளையாடி நிலத்தைத் தொலைச்சுட்டு வந்து நிக்கறாரு......''

''வெளையாடினது வாஸ்தவமா....? அட, பாவி..... வெளையாட்டு வேறயா உன் லட்சணத்துக்கு?''

அவள் சீறிக் கொண்டே கணவர் மீது பாய்ந்து அவரைப் பிராண்டத் தொடங்கினாள். இதுவும் நடிப்பல்ல என்று பாபுவுக்கு உறுதியாகத் தெரிந்தது.

பாபு எழுந்தான். அவன் அம்மா அவன் கையைப் பற்றி அவனை அமர்த்தினாள்.

''பேசாமெ இரு.... தினம் நடக்கிறது தான்'' என்றாள் கீழ்க் குரலில்.

சேர்வை கனகத்தின் கையைப் பற்றி இழுத்தார். ''என்னங்க, விடுங்க அவரை, போனாப் போறாரு.... இனிமே ஒழுங்கா இருப்பாரு..... என்னய்யா இருக்கேன்னு சொல்லேன், வாயிலே என்ன கொழுக்கட்டையா ?''

அவர் தலையசைத்தார். கனகம் ஹிஸ்டீரியா வந்தவள் போல் ஆடிக் கொண்டிருந்தாள்.

அவருடைய கணவர் வாசல் திண்ணைக்குப் போய்விட்டார்.

''என்ன இருந்தாலும் பாருங்க, உங்க புருசன், இப்படி அடிக்கப் போகலாமா? நான் ஏதானும் கணக்கு எழுதற வேலை எந்தக் கடையிலாவது இருந்திச்சன்னா சொல்றேன்..... போகாட்டி சொல்லுங்க, நானே வந்து கொடுக்க வேண்டியதைக் கொடுத்து அனுப்பறேன்!''

''....அது சரி, கொஞ்சம் துவரம் பருப்பும், எண்ணெயும் வேணும். வந்தா தருவீங்களா, சேர்வை?''

''என்னங்க, பாக்கி நிக்கறப்போ, கடன் கேக்கறீங்க?''

'' கொடுக்க இஷ்டமில்லேன்னா வேணாம். நான் இப்படி வெறுமே கேக்கறதும் தப்பு.... ரஸம் எப்படி இருந்தது ?''

''ரொம்ப நல்லா இருந்ததுங்க....இப்படி நல்லா சமைச்சுப் போடறதினாலேதான் உங்க ஐயாவுக்குத் திமிரு ஏறிக் கிடக்கு..... வேலைக்குப் போக மாட்டேங்கிறாரு..... சரி... வாங்க, பருப்பும் எண்ணெயும் தரேன்..... அடுத்த மாசம் எப்படியும் பணம் வந்துடணும்......''

'' என் தாலியை வித்தாவது தரேன், கவலைப்படாதீங்க....'' என்றாள் கனகம்.

''இதோ பாரும்மா, அப்படியெல்லாம் பேசாதீங்க. நல்லா இல்லே....''

சேர்வை போன பிறகு பாபு தன் அறைக்குள் சென்றான். அம்மாவும் அவன் பின்னால் போனாள். ''தினம் இப்படி நடக்கிறதுன்னியே, அப்படியா ?''

''ஆமாம்.... பால்காரன் பாக்கிக்கு வருவான், போற போது, கை மாத்தா அஞ்சு ரூபா கொடுத்துட்டுப் போவான்.... காய்கறி விக்கிறவளுக்கு மூணு மாசம் ஆச்சு பணம் கொடுக்கலே... ஆனால் அவள் தினம் சண்டை போட்டுட்டு, போற போது இவருக்குப் போட்டுக்கறதுக்கு வெத்தலை பாக்கு கொடுத்துட்டுப் போவாள்......''

''பணம் எங்கிருந்து கிடைக்கப் போறதுன்னு அவ எதிர்பார்க்கிறா?....'' என்றான் பாபு சில விநாடிகளுக்குப் பிறகு.

'' தெரியாது.''

இந்தக் குடும்பம் கிடக்கிறது. நம் நாட்டில் நாம் எல்லோருமே இப்படித்தான் வாழ்ந்து கொண்டிருக்கிறோமோ என்று நினைத்தான் பாபு. சமுதாய ரீதியாக நாம் இப்படி வாழும்போது, தனிப்பட்டவர்கள் ஏதேனும் ஒன்றை நம்பி வாழ முயல்வதில் தவறு என்ன இருக்கிறது? நம் நாட்டுக்கு ஏதாவது எதிர்காலம் இருந்தால், நிச்சயம் அது கனகத்துக்கும் உண்டு.

ஜன்னல் வழியே வெளியே பார்த்துக் கொண்டிருந்த அம்மா பாபுவிடம் சொன்னாள்: ''வாசல்லே பாரு.''

பாபு ஜன்னலருகே சென்று எட்டிப் பார்த்தான். கனகம் கணவருக்கு வெற்றிலை மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள். நளாயினி 1973ம் வருஷத்தில் இருந்திருந்தால் இப்படித்தான் இருந்திருப்பாள் என்று பாபுவுக்குத் தோன்றிற்று.

# பாட்டா மைக்ரலான் தரும் இரு மயக்கிகள்!

## இந்த 70களுக்கு புதியதோர் அற்புதப் பொருள்!

இப்பொழுது, மெய்யாகவே மனம்கவரும் இரண்டு மயக்கிகள் பாட்டா மைக்ரலான் பெண்கள் குடும்பத்தில் சேர்கின்றனர்.

மாலினி: சமத்காரமான இரண்டு டோன் டார்க்டான் நிறம். அழகான அமைப்பு. மேல்பாகத்து மலர் போன்ற துவாரங்களும் அதனை பெண்மணியாக்குகின்றன.

நளினி: மேல்பாகத்து நிமிர்ந்த நிலையின் அலங்கார நோக்குகள் அழகையும் மென்மையையும் அதிகமாக்குகின்றன. உள் பாத நெசவு நயம் பாதங்களை நன்கு பதிந்திருக்கச் செய்கின்றது. தெரிந்தெடுக்க மகிழ்ச்சிதரும் நிறங்கள்: பீஜ், சிவப்பு, மற்றும் ஊதா.

இவை மைக்ரலானில் செய்தவை. இந்த 70 களுக்கு புதிய அற்புதப் பொருள். மிக மென்மையுடன் பாதசுகமளிப்பவை. உங்கள் பாதங்களுக்குத் தனி போகப் பொருள். பாதமெத்தை கொண்ட இவை பாதங்களுக்கு மிக இதமளிக்கும்.



**Bata**

மாலினி 85
அளவுகள் 2-6
ரூ. 9.95

நளினி 84
அளவுகள் 2-6
ரூ. 9.95




## 9. பனங்கிழங்கு

பாண்டியனுடைய சபையிலே ஒரு நாள் ஒரு கேள்வி எழுகிறது.

நாரையின் அலகு நீளமானது. கூர்மையானது. அதில் அழகு இருக்கிறது — ஆனைக்குத் தும்பிக்கை வாய்த்தது போல்! இந்த நாரையின் நீளமான கூரிய அலகுக்கு உவமையாக எதைச் சொல்லலாம் என்று அரசன் தன் சபைப் புலவர்களைக் கேட்கிறான். எல்லாரும் சிந்தனை செய்கிறார்கள். நல்ல உவமையாக யாருக்கும் தோன்றவில்லை.

அரசவை கலைந்து, மன்னன் எழுந்தபோது எல்லாருடைய உள்ளமும் பலமான சிந்தனையில் ஆழ்கிறது.

நாட்கள் கழிகின்றன. ஒரு நாள் இரவு. நல்ல முழு நிலா. அந்த நிலாவிலே வானத்தில் அணி அணியாக நாரைகள் பறந்து செல்கின்றன.

அப்போது நகரத்தினுள் உளவு பார்ப்பதற்காக மாறுவேடத்தில் செல்கிற பாண்டிய மன்னன் அந்த நாரைக் கூட்டத்தைப் பார்த்து, அவற்றின் அலகுகளை நோக்கியவாறு வியப்பில் ஆழ்கிறான். தன்னுடைய அவையிலே உள்ள அத்தனை பெரும் புலவர்களிலும் இந்த நாரையின் மூக்குக்குப் பொருத்தமான உவமை சொல்லக்கூடிய ஒருவரைக்கூடக் காணோமே என்று சிந்தித்துக் கொண்டே சத்திரம் ஒன்றின் அருகிலே நடந்து செல்கிறான் மன்னன். அப்போது எங்கோ ஒரு மூலையில் இருந்து ஒரு தீனமான குரல் காற்றிலே வருகிறது.

நாராய்! நாராய்!
　　செங்கால் நாராய்
பழம்படு பனையின்
　　கிழங்கு பிளந்தன்ன
பவளக் கூர்வாய்
　　செங்கால் நாராய்

(பவளக் கூர்வாய் - பவளம் போன்று சிவந்த கூரிய அலகு.)

''பனங்கிழங்கை இரண்டு கூறாக வகுத்தது போல் தோற்றம் தருகிற சிவந்த கூர்வாயை உடைய நாரையே!'' என்று அந்த அருமையான உவமை வந்ததோ இல்லையோ, பாண்டியன் அப்படியே துள்ளுகிறான். உவமையின் பொருத்தமும் எழிலும் சேர்ந்து மெய்சிலிர்க்கிறது! ஆனால் அதே சமயம் அந்தப் பாடலைப் பாடுகிற குரலின் துயரம் நெஞ்சைத் தீய்க்கிறது. மறைவிலே நின்று கொண்டு பாண்டியன் தொடர்ந்து கேட்கிறான்' வயோதிகக் குரலில் பாடல் மேலே வருகிறது.

தொலை தூரத்தில் உள்ள தம் மனைவிக்குச் செய்தி சொல்லியனுப்புகிறார் சத்திமுத்தப் புலவர், நாரையினிடம்!

மீ.ப.சோமு



**நாராய்! நாராய்!**
**செங்கால் நாராய்! !**
**பழம்படு பனையின்**
**கிழங்கு பிளந்தென்ன**
**பவளக் கூர்வாய்ச்**
**செங்கால் நாராய்**
**நீயும் நின் மனைவியும்**
**தென்திசைக் குமரி**
**ஆடி வடதிசைக்கு**
**ஏகுவீர் ஆயின்**

ஏ, நாரையே! நீயும் உன் மனைவியும் தெற்கே கன்னியாகுமரியில் நீராடிவிட்டு வடக்கே போகிறீர்கள் போலும். அப்படி யானால்,

**எம்மூர்ச் சத்திமுத்த**
**வாவியுள் தங்கி**

(வாவி — தடாகம்.)

எங்களூர்ச் சத்திமுத்தக் குளத்தில் கொஞ்சம் இறங்கு! உனக்குத்தான் குளத்தில் இறங்குவது என்றால் மிகவும் பிடிக்குமே! அந்தக் குளத்தின் கரையில்,

**நனைசுவர்க் கூரை**

சத்திமுத்தக் குளத்தின் கரையிலே ஒரு சிறு கூரை. மண் குடிசை. மழையிலே நனைந்த வண்ணம் இருக்கும். ஒரே ஒழுக்கு! அந்தக் குடிசைக்குள்ளே,

**கனைகுரல் பல்லி**
**பாடுபார்த்து இருக்கும் எம்**
**மனைவியைக் கண்டு**

"கணவன் மதுரைக்குப் போனானே; இந்தப் பாழும் வறுமை தீருவதற்கு ஏதாவது வழியுடன் திரும்புவானா? பாண்டிய மன்னனை இந்தப் புலவன் பார்க்க முடிந்ததோ இல்லையோ!" என்று குறி பார்த்துப் பல்லி சொல்லை, கௌளி உத்தரவை நோக்கிக் கொண்டிருப்பாள் என் மனைவி. அவளைக் கண்டு,

**எங்கோன் மாறன்**
**வழுதி கூடலில்**

(எங்கோன் — எம் அரசன். மாறன், வழுதி— பாண்டியன். கூடல் — மதுரை.)

எங்கள் அரசனான பாண்டிய மன்னனுடைய மதுரையில் (இந்த இடத்தில் அங்கே மறைவிலே நின்று பாடலைக் கேட்டுக் கொண்டிருக்கும் பாண்டியனுடைய மன நிலையைக் கற்பனை செய்து பார்ப்போம்!]

**எங்கோன் மாறன்**
**வழுதி கூடலில்**
**ஆடை இன்றி**
**வாடையின் மெலிந்து**

உடம்பில் சரியானபடி ஆடை இல்லை. போர்வை கிடையாது. குளிர் வாடை உடலைச் சொடுக்கி எடுக்கிறது.

**கையது கொண்டு**
**மெய்யது பொத்தி**

கைதான் போர்வை. அதைக் கொண்டு மேனியைப் போர்த்திக் கொண்டு,

**காலது கொண்டு**
**மேலது தழீஇப்**

(தழீஇ— தழுவி.)

காலைக் குத்துற வைத்துக் குந்தி, உடம்பைத் தழுவி அணைத்துக் கொண்டு,

**பேழையுள் இருக்கும்**
**பாம்பென உயிர்க்கும்**

(பேழை—பெட்டி. உயிர்க்கும்—மூச்சுவிடுகிற.)

பெட்டிப் பாம்பு போலச் சுருட்டி மடக்கிக் கிடந்து பெருமூச்சுவிடுகிற,

**ஏழை யாளனைக்**
**கண்டனம் எனுமே.**

(ஏழையாளனை — ஏழையாகிய என்னை. கண்டனம் — கண்டோம். எனுமே — என்று சொல்லுங்கள். நீயும் உன் மனைவியுமாகச் சேர்ந்து அவளிடம் சொல்லுங்கள்.)

ஏழையாகிய என்னைப் பார்த்ததாகச் சொல்லுங்கள், என் மனைவியிடம்!

பாட்டு முடிந்தது. பாண்டியன் இத்தனை நாட்களாக எதிர்நோக்கிக் காத்திருந்த உவமை கிடைத்துவிட்டது என்று மட்டற்ற மகிழ்ச்சி யடைந்த நிலையிலே, பாடலின் பிந்திய அடிகள் அளவிலாத தாபத்தைத் தருகின்றன. வாழ்வின் வறுமையாகிய சோகத்தைக் கவிதை என்ற இறகு கொண்டு பாண்டியனுடைய நெஞ்சத்திலே தீட்டி விடுகிறது புலவருடைய தமிழ். குளிரினால் உடம்பு ஆடுவது புலவருக்கா? இல்லை. பாண்டிய மன்னனுக்கு இப்போது!

**நாராய் நாராய் செங்கால் நாராய்**
**பழம்படு பனையின் கிழங்கு பிளந்தென்ன**
**பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்**
**நீயுநின் மனைவியும் தென்திசைக் குமரி**
**ஆடி வடதிசைக் கேகுவீர் ஆயின்**
**எம்மூர்ச் சத்திமுத் தவாவியுள் தங்கி**
**நனைசுவர்க் கூரை கனைகுரற் பல்லி**
**பாடுபார்த் திருக்குமெம் மனைவியைக் கண்டு**
**எங்கோன் மாறன் வழுதி கூடலில்**
**ஆடை யின்றி வாடையின் மெலிந்து**
**கையது கொண்டு மெய்யது பொத்திக்**
**காலது கொண்டு மேலது தழீஇப்**
**பேழையுள் இருக்கும் பாம்பென உயிர்க்கும்**
**ஏழை யாளனைக் கண்டனம் எனுமே!**

பாடல் முடிந்ததோ இல்லையோ, பாண்டியன் அப்படியே சத்திரத்துக்குள் வேகமாக நுழைகிறான், உடம்பு பதறிக் கொண்டே!

புலவருடைய வறுமை அன்றோடு தீர்ந்தது. பொருளோடு புகழும், செல்வத்தோடு இனிய இல்லறமும் புலவரைச் சேருகின்றன.

சத்தி முத்தப் புலவரின் வறுமை மறைந்து விட்டது. புலவருமே மறைந்து விட்டார். ஆனால் பாடல் மறையாது நிற்கிறது. என்றுமே மறையாது நிற்கக் கூடிய கவிச் செல்வம் இது!




"உங்களுக்கும் பெண்ணைப் பிடிச்சிருக்குன்னு சொன்னு பதினைந்தாயிரம் ரூபாய் வரதட்சணையோட ஒரு காலண்டரும் இனாமாத் தர்றாராம்."

# காலண்டர்


"நீங்க நேத்து கொடுத்த காலண்டரைக் கழுதை தூக்கித் தின்னுடுச்சு சார்!"
"அப்போ இந்தாங்கோ. உங்களுக்கும் ஒண்ணு!"


"என்ன வீட்டுக்காரரே! என்ன பார்க்கிறீர்? ஓசிக் காலண்டர் வருமின்னு முன்னேற்பாடா சுவரிலே ஆணி அடிக்க வெச்சுக்கறேன். அவ்வளவுதான்!"


"நீதானேப்பா காலண்டரைக் கிழிக்கச் சொன்னே?"
1973

# வெண்ணிரவும் கரும் பகலும்



ஜெகசிற்பியன்

சிறப்புச் சிறுகதை

கூடத்து அறை நடுவே போடப்பட்டிருந்த நீளமான பெஞ்சின் கால் மாட்டு விளிம்பில் மடக்கிச் சாத்திய முழங்கைகளின் மேல் நெற்றியைப் புதைத்து முதுகு வளைய முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு வெறுந் தரையில் ஒரு காலை முன்னும் மறு காலைப் பின்னுமாக மடித்துப் போட்டு உட்கார்ந்திருக்கிறாள் சுமதி.

நீலப் பட்டுப் புடவை; கறுப்புச் சோளி; தழைய முடிந்த கூந்தலில் சரிந்து தொங்கும் மல்லிகைச் சரம்; செவிகளில் செவ்வொளி சிந்தும் புஷ்பராகத் தோடுகள்; கழுத்திலே தாம்புக் கயிறு செயின்; கைகளில் ஒரு ஜோடி வங்கி வளைகள்.

எவ்வளவு நேரமாய் அந்தப் பெஞ்சின் விளிம்பில் தலையைச் சாய்த்து முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாள்?

ஒன்று... இரண்டு... மூன்று...ஏழு பத்து ... மணி நேரம்?... இல்லை; ஒரு நாள் ஒரு மாதம்... ஒரு வருடம்...ஒரு யுகம்?...

அவளுக்கே அது தெரியவில்லை.

ரோஜா, மல்லிகை, சாமந்தி, ஊதுபத்தி — இவையெல்லாம் கூட்டுக் கலவையான ஒரு நெடி மணத்தை மட்டும் அவளால் நுகர்ந்து உணர முடிகிறது. செவியில் ஏதேதோ ஒலிகள் வந்து மோதுகின்றன. ஆனால் அவை அனைத்தும் எங்கோ தொலை தூரத்திலிருந்து எழும் கடல் அலைகளின் ஓசை போல் மிக மிக மெல்லவே கேட்கின்றன.

அந்த நெடி மணத்தால் இப்படி அவள் மயங்கிச் சாய்ந்திருக்கிறாளா? அல்லது அந்தக் கடலலைகளின் தாலாட்டு ஓசையில் கண்ணயர்ந்து கிடக்கிறாளா? இரண்டுமில்லை. பாதிப் பிரக்ஞையிலும், பாதி மயக்கத்திலும், பாதி விழிப்பிலும், பாதி உறக்கத்திலுமாக இருக்கிறாள். அதனால்—

தூக்கத்திலே சில கனவுகள்; விழிப்பிலே சில கற்பனைகள்; கனவிலே சில நனவுகள்; நனவிலே சில கனவுகள்; — இவையெல்லாமே சேர்ந்து, முன்னும் பின்னுமாக அறுந்து, இணைந்து, மேலும் கீழுமாகக் கலங்கிக் குழம்பிச் சுழன்று, சுழன்று, சுழன்று...

அன்று அவளுடைய பிறந்த நாள். நாலு வயசு முடிந்து ஐந்து ஆரம்பம்.

அவள் கனிஷ்ட புத்திரிதான் என்றாலும், ஜேஷ்ட புத்திரனாகப் பிறந்தது மூன்றும் மாதமே கண்ணை மூடி விட்டதால் ரொம்பவும் செல்லமாக வளர்க்கப்பட்டாள். அவளுக்குப் பின் தம்பி, தங்கை என்று எதுவும் தொடரவில்லை.

வீட்டில் ஒரே கோலாகலம். உறவினர்களும் நண்பர்களுமாக நிறையப்பேர் வந்து குழுமியிருந்தனர். அவளுடைய அப்பா ரங்கசாமி, மாநில அரசைச் சார்ந்த ஒரு வாரியத்தின் விளம்பர அதிகாரி. போன மாதம்தான் இந்தப் பதவி உயர்வு கிடைத்தது. அந்தச் சந்தோஷத்தையெல்லாம் தம் மகளின் பிறந்த நாளான இன்று கொண்டாடிவிடத் தீர்மானித்தவர் போல் ஏக தடபுடல் பண்ணிவிட்டிருந்தார்.

பத்து பவுண்டு எடையிலும், ஒன்றரை அடி உயரத்திலுமாக மாமல்லபுரத்துக் கல்தேர் வடிவிலே செய்யப்பட்ட பெரிய கேக் ஒன்று வட்டமேசையின் மேல் வைக்கப்பட்டிருந்தது. கேக்கைச் சுற்றி ஐந்து மெழுகுவத்திகள் எரிந்து கொண்டிருந்தன. சுமதிக்குப் புதுப் பட்டுக் கௌன் அணிவித்து, அவளுடையவும் தன்னுடையவுமான நகைகளையெல்லாம் பூட்டிச் சிங்காரித்துத் தூக்கிக் கொண்டு வந்து மேசையருகில் நிறுத்தினாள் அம்மா.

எரிந்து கொண்டிருந்த ஐந்து மெழுகுவத்திகளில் ஒன்றை விட்டு விட்டு மற்ற நான்கையும் ஊதி அணைக்கும்படி சொல்லிக் கொடுத்தார் அப்பா. அதன்படியே ரொம்பவும் சமர்த்தாகத் தன் அழகிய செப்பு வாயைக் குவித்து நான்கு வத்திகளையும் 'ப்பூ, ப்பூ' என்று ஊதி அணைத்தாள் குழந்தைப் பெண் சுமதி. பிறகு மேசைக் கத்தியை அவள் கையில் கொடுத்து அவரும் அதைப் பிடித்துக் கொண்டு கேக்கை வெட்டச் செய்தார். சுற்றியிருந்த அவ்வளவு பேரும் மகிழ்ச்சியுடன் கையொலி எழுப்பிக் குழந்தையை வாழ்த்தி ஆசி கூறினர். எல்லோருக்கும் கேக் விநியோகிக்கப்பட்டது. உடனே விருந்தும் ஆரம்பமாயிற்று.

ஒரு கேக் துண்டைக் கையில் வைத்தவாறு, தனக்குப் புதிதாக வாங்கித் தந்திருந்த மூன்று சக்கர சைக்கிள் வண்டியில் அமர்ந்து, அதை ஓட்டிக் கொண்டே தின்பதற்காக வாசலுக்கு

வந்தாள் சுமதி. எங்கிருந்தோ பறந்து வந்த காக்கை ஒன்று அவள் கையிலிருந்த கேக்கை 'லபக்'கெனப் பிடுங்கிப் போய்விட்டது.

உள்ளே விருந்தினரை உபசரித்துக் கொண்டிருந்த அம்மாவும் அப்பாவும் வேறு சிலரும் இதைப் பார்த்துப் பதறியவர்களாக வாசலுக்கு ஓடி வந்தனர். ஆனால் கேக்கைப் பறிகொடுத்து விட்டு நின்ற சுமதி எவ்விதப் பதற்றமோ, பயமோ, ஏக்கமோ, ஏமாற்றமோ இன்றி மிகச் சாதாரணமாகவும் அமைதியாகவும் — தொலைவில் பறந்து சென்றுகொண்டிருந்த — அந்தக் காக்கையைப் பார்த்துக்கொண்டிருந்தாள். தன் பெற்றோரிடம் தனக்கு வேறொரு கேக் துண்டு வேண்டும் என்றும் அவள் கேட்கவில்லை. அப்போதே அதை மறந்து விட்டவள் போல் அலட்சியமாகவும் சாவதானமாகவும் சைக்கிளில் ஏறி அமர்ந்து ரவுண்டு அடிப்பதில் கவனமானாள்.

அவளின் இந்தப் போக்கைக் கண்டு ஆச்சரியத்தால் பிரமித்து நின்ற பெரியவர்கள் தமக்குள் பலவிதமாகப் பேசிக் கொண்டனர்.

அன்றிரவு படுக்கப் போகும் நேரத்தில் ரங்கசாமி தம் மனைவியிடம் ''பாப்பம்மா! காலம்பற நம்ம சுமி பண்ணின காரியத்தைப் பற்றி நீ என்ன நினைக்கிறே?'' என்றார்.

''கேக் துண்டைக் காக்கா பறிச்சுக்கிட்டுப் போயிட்டதுக்காக அவள் ஒன்றும் அழுது அடம் பிடிக்காமல் அலட்சியமாய் இருந்துட்டாளே, அதைக் கேட்கிறீங்களா?''

''ஆமாம்.''

''நினைக்கிறதுக்கு அதிலே என்ன இருக்கு? குழந்தைக்கு அது வேடிக்கையா இருந்திருக்கும்.''

''நீ அந்தச் சமயம் அவளோட முகத்தைக் கவனிச்சயா?''

''பார்த்தேன்.''

''வேடிக்கை பார்க்கிறப்போலேயா அவள் பார்த்தாள்?''

''என்னங்க நீங்க, ஏதேதோ கேட்கிறீங்க?''

சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்தவராய் மௌனமாயிருந்த ரங்கசாமி தம் அருகில் கட்டிலிலே படுத்திருந்த சுமதியைத் திரும்பிப் பார்த்துவிட்டுத் தணிந்த குரலில், ''இந்தப் பெண் விஷயத்தில் நாம் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்கணும் பாப்பம்மா!'' என்றார்.

களுக்கென்ற சிரிப்பொலி. குழந்தைப் பெண் சுமதிதான் அப்படிச் சிரித்துவிட்டுப் புரண்டு படுத்தாள்.

''நேத்திக்கு நான் சொன்னது பற்றி மேற்கொண்டு யோசனை பண்ணினீங்களா?''

ஆபீசுக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த ராகவன் மெல்லத் திரும்பி அவளைப் பார்த்தான். அந்தப் பார்வையின் தோரணையிலிருந்தே அவனுடைய பதில் என்னவாயிருக்கும் என்பதைப் புரிந்து கொண்ட சுமதி ஓர் அழகுப் புன்னகை பூத்தவாறு, ''இன்னிக்கு அப்ளிகேஷன் அனுப்ப வேண்டிய கடைசி



**"இந்தப் பெண் விஷயத்தில் நாம் ஜாக்கிரதையாக இருக்கணும் !" கடைசியில்...**



நாள்; அதனால்தான் கேட்கிறேன்'' என்றாள் இனிய மென்குரலில்.

கோபமாக அவளை வெறித்து நோக்கிய ராகவன், ''சொல்ல வேண்டியதையெல்லாம் நேத்திக்கே சொல்லிட்டேன். இனிமேல் உன் இஷ்டம்'' என்று அடித்தொண்டையில் கூறிக் கொண்டே அங்கிருந்து விரைந்து போய் ஸ்கூட்டரில் ஏறிப் புறப்பட்டு விட்டான்.

தெருக் கோடியில் அவனுடைய ஸ்கூட்டர் சென்று மறையும் வரையில் சன்னல் வழியே பார்த்துக் கொண்டு நின்ற சுமதியின் முகம் பனிப் பாறையாக வெளிறியது. ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவள் போல் அடுத்த அறைக்குச் சென்று, அங்கு மேசையின்மேல் இருந்த ஒரு கவரை எடுத்துக் கொண்டு வந்து வேலைக்காரப் பெண்ணிடம் கொடுத்து, ''இதைத் தபால் பெட்டியில் போட்டுவிட்டு வா!'' என்று கட்டளையிட்டாள்.

அன்று மாலை ஆபீசிலிருந்து வீடு வந்து சேர்ந்த ராகவன் இவ்விஷயமாய்ச் சுமதியிடம் எதுவுமே கேட்கவில்லை. அதை அறவே மறந்துவிட்டவன் போல் கலகலப்பாகப் பேசினான். அவளும் அவ்வாறே நடந்து கொண்டாள். அன்றிரவு இருவரும் சேர்ந்து சினிமாவுக்கும் போய் வந்தார்கள். ஒரு பதினைந்து நாட்கள் இவ்விதமாகவே சுமுகமாக ஓடி மறைந்தன.

பதினாறாம் நாள்—

''அந்தக் கம்பெனியிலேயிருந்து இண்டர்வ்யூ கார்டு வந்திருக்கு! இன்னிக்குப் போகணும்; போகட்டுமா?''

ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்து அதில் ஏறி உட்கார்ந்த ராகவன் நிதானமாகத் திரும்பி அவளைச் சில விநாடி நேரம் கூர்ந்து பார்த்துவிட்டு, ''உன் இஷ்டம்!'' என்றவாறு விருட்டென்று கிளம்பிப் போய்விட்டான்.

சுமதியின் முகத்தில் எவ்விதச் சலனமும் ஏற்படவில்லை. அவள் அமைதியாகத் தன் அறைக்குப் போய் வேறு ஆடை புனைந்து கொண்டு தன் கல்விச் சான்றிதழ்கள் அடங்கிய ஒரு கவருடன் வெளியே கிளம்பினாள்.

மாலை ராகவன் வீடு திரும்பியதுமே முதல் கேள்வியாக, ''இன்னிக்கு அந்த இண்டர்வ்யூவுக்குப் போனயா?'' என்று கேட்டான்.

டிபன்-காப்பி கொண்டு வந்து அவனெதிரே வைத்துவிட்டு, ''போனேன்'' என்றாள் சுமதி.

''என்ன ஆச்சு?''

''எல்லாம் நல்லபடியா முடிஞ்சுது.''

''வேலை கிடைச்சுடுமா?''

''கிடைக்கலாம்.''

''நிச்சயமாய் உனக்குத்தான்கிடைக்கும்.''

''அதெப்படி அவ்வளவு உறுதியாய்ச் சொல்றீங்க?''

''அந்த ஆபீசில் புருஷோத்தமன்தானே மானேஜராயிருக்கிறான்?''

''ஆமாம்.''

''அவன்தானேஇண்டர்வ்யூ நடத்தினான்?''

''ம்ம்...''

''அதனால்தான் சொல்றேன்'' என்று கூறிப் பார்வையைத் தாழ்த்திக் கொண்டு விஷமப் புன்னகை பூத்தான் ராகவன்.

சிறுபொழுது மௌனமாக இருந்த சுமதி, ''அதனால் என்ன?'' என்று சாதாரணமாகக் கேட்டாள்.

இதற்குப் பதிலேதும் கூறாமல் காப்பியை எடுத்துப் பருகினான் ராகவன்.

''பகல் வேளைகளில் இந்த வீட்டில் நான் வெட்டுவெட்டுன்னு தனியாக் கிடக்கிறேன். ஒரு வருஷம் ரெண்டு வருஷமில்லே, மூணு வருஷங்களாய் இதே நிலை. எனக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கு. பக்கத்து வீட்டுக் குழந்தைப் பையனும் இப்போ இங்கே வருகிறதில்லே. அவனை ஸ்கூல்லே சேர்த்துட்டாங்க. தூக்கம், கதைப் புத்தகம், ரேடியோ—இதெல்லாம் சலிச்சுப் போச்சு. அதனால்தான் ஒரு பொழுதுபோக்கா யிருக்கட்டுமென்னு அந்த வேலைக்கு எழுதிப் போட்டேன். அது வெறும் பொழுதுபோக்கு மட்டுமில்லே; சம்பளம்னு மாசம் முந்நூறு ரூபாய் கிடைக்கும். நமக்கு இந்தப் பணம் அவசியமில்லேன்னாலும் அநாவசியம்னு சொல்ல முடியாது. பணம் சம்பாதிக்கிறது தப்பில்லே. காலம் எப்பவும் ஒரே மாதிரியாக இருந்துடாது. கஷ்டங்கள் முன்கூட்டியே சொல்லிக்கிட்டும் வருகிறதில்லே. இதையெல்லாம் உத்தேசித்துத்தான் என்னை என் அப்பா பி. எஸ்ஸி. வரை படிக்க வைச்சார். அந்த வேலையும் அப்படி ஒண்ணும் கஷ்டமானதில்லே; லெட்ஜர் கிளார்க் வேலைதான். ஏற்கெனவே அஞ்சாறு பெண்கள் அங்கே வேலை பார்த்துக்கிட்டு இருக்காங்க. இவ்வளவையும் நான் ஆரம்பத்திலேயே உங்ககிட்டே சொல்லியும் இதிலே நீங்க சிரத்தை காட்டாமல் இருக்கிறது எனக்கு ஆச்சரியமாய் இருக்கு. காரணமும் புரியலே.''

ராகவன் அவளைப் பார்த்துச் சிரித்தான்.

''அந்தப் புருஷோத்தமனுக்கு இன்னும் கல்யாணமாகலேங்கிறது உனக்குத் தெரியுமா சுமதி?''

''கேள்விப்பட்டேன்.''

''அதுதான் காரணம்!''

''அப்படீன்னு என்னை நீங்க நம்பலியா?''

''நம்பறேன்.''

''அந்தப் புருஷோத்தமனை?''

''அவனையும்தான்.''

''பின்னே?''

''என்னைத்தான் நான் நம்பலே!'' என்று சொல்லிக் கொண்டே எழுந்து தன் அறைக்குப் போய்விட்டான் ராகவன்.

ஒரு வாரத்துக்குப் பின் ஒரு நாள் மாலை. ராகவன் ஆபீசிலிருந்து வீட்டுக்கு வந்ததுமே மேசை மேல் நாலாகக் கிழித்துப் போட்டுக் கிடந்த ஒரு கடிதம் கிடக்கக் கண்டு எடுத்துப் பார்த்தான். சுமதி வேலை கோரி விண்ணப்பித்திருந்த அலுவலகத்தில் அவளுக்கு அந்த வேலை கொடுக்க உத்தரவாகியுள்ள தகவலும், அவள் அதை ஏற்கவேண்டிய தேதி விவரமும் தெரிவிக்கப்பட்டு வந்திருந்த கடிதமே அது!

''அம்மா! அம்மா!''

சமையலறையிலிருந்த பாப்பம்மா கை வேலையை அப்படியே போட்டுவிட்டு என்னமோ ஏதோ என்று பதறியவளாய்க் கூடத்து அறைக்கு ஓடி வந்தாள்.

யூனிபாரம் அணிந்த கோலத்தில் கையிலே புத்தகப் பெட்டியுடன் பள்ளிக்குச் செல்லத் தயாராயிருந்த சுமதி, ''ஏம்மா! எனக்கு ஒரு ஜாமெட்ரி பாக்ஸ் வேணும்னு நேத்திக்கே கேட்டேனில்லே? ஏன் இன்னும் வாங்கிக்

## வாய் நாற்றம் உங்களை
## விலகி நிற்கச்செய்கிறது




DC.G.49.TM

### கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம்
### வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்...
### நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.
அதன் வித்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையேதனி— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே,
வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள்**
**மற்றெந்த பற்பசையையும்விட,**
**கால்கேட் பற்பசையையே**
**வாங்குகிறார்கள்!**

கால்கேட் டூத் பிரஷ்
உபயோகியுங்கள்.
ஒவ்வொருவரின் தேவைக்கேற்றவாறு
அமைப்பு—15 ரகங்கள்.



# பாலங்கள், கட்டிடங்கள்
# சாலைகள், அணைகள்
# வலிவும் நல்ல வடிவமும் பெற






# செட்டிநாடு
# பிராண்ட் போர்ட்லண்டு
# சிமெண்ட்

தயாரிப்பாளர்கள் :

**செட்டிநாடு சிமெண்ட் கார்ப்பரேஷன் லிமிடெட்**

பதிவு அலுவலகம் : 6, அரண்மனைக்காரன் தெரு, சென்னை-1.
தந்தி: "BESTCEMENT". போன் : 25356




தொழிற்சாலை : குமாரராஜா முத்தையா நகர்,
புலியூர் (கரூர்), திருச்சி ஜில்லா. தந்தி: 'CEMENT'. போன் : 144

சேல்ஸ் டிப்போக்கள் : 3, 1வது மெயின் ரோடு, காந்திநகர்
பெங்களூர்-9, போன் : 71715

18-C, கயாஸ் லேன், கல்கத்தா-1. போன் : 22-4986

chari



கொடுக்கலே?'' என்று அதிகாரத் தோரணை யில் வினவினுள். இப்போது அவளுக்கு வயசு பதினொன்று. ஏழாம் வகுப்புப் படிக்கிருள்.

''இதுக்கா இவ்வளவு அவசரமாய்க் கூப் பிட்டே?'' என்று சற்றுக் கோபத்துடன் அதட்டிய பாப்பம்மா உடனே அவளைச் சமா தானப்படுத்தும் விதத்தில், ''நேத்திக்கு அப்பா கிட்டச் சொல்ல மறந்துட்டேன். இன்னிக்கு அவசியம் வாங்கி வரச் சொல் றேன். நீ சமர்த்தா பள்ளிக்கூடம் போயிட்டு வா!'' என்றுள் சிரித்துக்கொண்டே.

சுமதி தாயாரின் முகத்தைக் கூர்ந்துபார்த்து விட்டுப் பெரிதாகத் தலையாட்டியவாறு பள் ளிக்குப் புறப்பட்டாள்.

பாப்பம்மாவுக்கு மறதி அதிகம். தன் கணவரிடம் இவ்விஷயத்தைச் சொல்ல அன் றும் மறந்து போனுள். மூன்று நாட்களுக்கு மேல் ஆகியும் அவளுக்கு அது நினைவு வரவே இல்லை. சுமதியும் அதை மீண்டும் நினைவு படுத்திக் கேட்கவில்லை.

நாலாம் நாள். சமையலறையிலிருந்த விளக்கின் பல்ப் ஃபியூஸாகி விட்டது. கைவசம் வேறு பல்ப் இல்லை. புதிதாகத்தான் வாங்கிப் போட வேண்டும். ரங்கசாமி ஆபீசி லிருந்து இன்னும் வீட்டுக்கு வரவில்லை. வேலைக்காரியும் வேலைகளை முடித்துக்கொண்டு போய் விட்டாள். மாலைப் போது வேகமாக மறைந்து வந்தது. இன்னும் கொஞ்ச நேரத் தில் இருட்டிவிடும். விளக்கில்லாமல் சமையல் காரியங்களைச் செய்வது எப்படி?

சுமதி தன் அறையில் உட்கார்ந்து வீட்டுப் பாடமாகக் கொடுத்த கணக்குகளைப் போடுவ தில் கவனமாயிருந்தாள். பாப்பம்மா அவளைக் கொஞ்சலாகக் கூப்பிட்டு இரண்டு ரூபாய் கொடுத்துப் பக்கத்துத் தெருவிலிருந்த ஸ்டோருக்குப் போய் நாற்பது வாட்ஸ் பல்ப் ஒன்று வாங்கி வருமாறு சொன்னுள். சுமதியும் வெகு உற்சாகமாகப் பணத்தை வாங்கிக் கொண்டு கடைக்கு ஓடினுள்.

நேரம் நகர்ந்தது. அரை மணிக்கு மேலாகி யும் பல்ப் வந்து சேரவில்லை. கடைக்குப் போன குழந்தைப் பெண் இன்னும் வரக் காணுேமே என்று அங்கலாய்த்தவளாய்ச் சமையலறையிலிருந்து அவசரமாக வாசலுக்கு வந்தாள் பாப்பம்மாள். சுமதி ஏற்கனவே வந்து தன் பாடங்களைச் செய்து கொண் டிருந்ததைக் கண்டு வியப்புடன், ''பல்ப் வாங்கி வரச் சொன்னேனே, எங்கே சுமதி?'' என்று கேட்டாள்.

சுமதி அவளை நிமிர்ந்து பார்க்காமலே, ''ஜாமெட்ரி பாக்ஸ் வேணும்னு சொல்லி எத்தனை நாளாகுது? வாங்கிக் கொடுத் தாயா ? இப்ப எனக்கு அது தேவை; அதனுல் நீ பல்ப் வாங்கக் கொடுத்த ரூபாயில் நானே வாங்கிக்கிட்டேன். இந்தா, மீதிக் காசு எட்டணு'' என்று கொஞ்சமும் பயமோ குழைவோ இன்றிச் சர்வசாதாரணமாய்ச் சொல்லி, மேசை மேல் கிடந்த காசை சுட்டிக் காட்டிவிட்டுத் தன் பாடத்தில் கவனமானுள்.

அன்றிரவு சாப்பாட்டுக்குப்பின் தன் கணவ ரிடம் சுமதி செய்த அந்த நெஞ்சழுத்தமான காரியத்தைக் கூறிய பாப்பம்மா, ''இவள் விஷயத்திலே நாம் ரொம்ப ஜாக்கிரதையாக இருக்கணுங்க!'' என்றுள்.



கிரிக்கெட் வீரர் ஆஸ்பத்திரியில் அறைக்கு வெளியே தவிப்புடன் உட்கார்ந்திருந்தார்: உள்ளே அவர் மனைவிக்குப் பிரசவம். என்ன ஆகிறதோ என்று தவித்துக் கொண்டிருந்தவர் நர்ஸ் வெளியே வருவதைக் கண்டதும் பதறி ஓடி, ''என்ன? குழந்தை பிறந்து விட்டதா! என்ருர். நர்ஸ் கூறினுள்: ''எக்ஸ்டிராஸ் இரண்டு!'' - 'கர்காலன்'

பக்கத்து அறையிலிருந்து சுமதி மெல்லச் சிரிக்கும் ஒலி கேட்டது.

''**மா**னேஜர் புருஷோத்தமன் இருக் கிருரா ?''

''இருக்கிருர்; நீங்க ?''

''என் பெயர் சுமதி. அவரைப் பார்க்க ணும்.''

''ஒரு நிமிஷம் இருங்க. ஐயாகிட்ட சொல்லி அநுமதி வாங்கிக்கிட்டு வந்துட றேன்....''

ஆபீஸ் பையன் 'தள்ளு கதவை'த் தள்ளிக் கொண்டு அவசரமாக உள்ளே சென்று, அதே வேகத்தில் வெளியே வருகிருன். ''ஐயா வரச் சொல்ருர்.''

மானேஜர் அறைக்குள் சுமதி செல்கிருள். சுழல் நாற்காலியில் அமர்ந்திருக்கும் புருஷோத்தமன் அவளைப் பார்த்து முகம் வாடிப் பின் வறண்ட புன்னகை பூத்தவாறு, ''வா, சுமதி ! உட்கார்!'' என்கிருன் கர கரத்த குரலில்.

அவனுடைய மேசைக்கெதிரில் கிடக்கும் ஒரு நாற்காலியில் தலைகுனிந்தபடி அமர் கிருள் சுமதி. அவளையே சில விநாடிகள் கூர்ந்து பார்க்கிருன் புருஷோத்தமன்.

மலர் சூடாத கூந்தல்; பாழ்த்த நெற்றி; வளையணியாக் கரங்கள்; வெறுங் கழுத்து !

''கேள்விப்பட்டேன்; எனக்கு ரொம்ப அதிர்ச்சியாப் போச்சு!'' என்று அவலம் தோய்ந்த குரலில் கூறும் புருஷோத்தமன் சற்று நேர மௌனத்துக்குப்பின், ''என்ன உடம்புக்கு ? எப்படித் திடீர்னு இந்த முடிவு?....'' என்று இழுத்தாற்போல் கேட் கிருன்.

''ஜாண்டிஸ்! மூணு நாட்கள்தான். நாலாம் நாள்......''

''த்சொ, த்சொ !''

அந்த அறையில் நீண்ட நேரம் அமைதி நிலவுகிறது.

''இப்ப ஏதாச்சும் சொல்ல வேண்டி இருக்குதா?'' என்று கேட்டு அங்கு நிலவிய அமைதியைக் கலைக்கிருன் புருஷோத்தமன்.

''ஆமாம். நான் வீட்டிலே தனிமையில் அடைஞ்சு கிடக்கிறேன். எனக்கு அது ரொம்பக் கஷ்டமாயிருக்கு. வாழ்க்கையே பாரமாய்த் தோணுது. சில சமயம் ஒரே

யடியா மனம் சலிப்படைஞ்சு புத்தியும் ஒரு விதமாய்ப் பேதலிக்குது. அதிலிருந்து மீளணும். இல்லேன்னு ஏதாவது நடந்துவிடு மோன்னு எனக்கே பயமாயிருக்கு.....''

'' சரி ; அதற்காக ?''

''வேலே பார்க்கணும் என்கிற அவசியம் ஒன்னுமில்லே. ஆனால் என் மனச் சூன்யத்துக்கு ஒரு மாறுதலான சூழ்லேக் கொடுக்கிற துக்காக ஏதாச்சும் வேலேயில் அமரலாமான்னு நினேக்கிறேன்.''

''ம்ம்.......''

''உங்க ஆபீசில் முன்னே நான் வேலே கேட்டேன். கொடுத்தீங்க. அப்புறம் அதை ஏற்றுக் கொள்ளாமல் விட்டுட்டேன். அதே வேலேயை இப்ப கொடுக்க முடியுமான்னு கேட்டுவிட்டுப் போறதுக்குத்தான் வந்தேன்.''

மீண்டும் அந்த அறையில் அமைதி சூழ்கிறது. சில நிமிடங்களுக்குப் பின், ''யோசித்துச் சொல்றேன்; நாளே கழிச்சு மறு நாள் என்னேவந்து பார் !'' என்கிறான் புருஷோத்தமன்.

அவனே மெல்ல நிமிர்ந்து பார்த்துவிட்டு வெளியே வருகிறாள் சுமதி.

மூன்று ஆண்டுகளுக்குமுன் –

சுமதி பி.எஸ்ஸி.; பரீட்சை எழுதி முடித்த மறு மாதம், ராகவன் அவளேப் பெண் பார்த்துவிட்டுப் போன அடுத்த நாள்.

''ஏம்ப்பா ! என்னேக் கேட்காமல் என் கல்யாணத்தை நீங்களே எப்படி நிச்சயிக்க..''

திடுக்குற்றுப் போன ரங்கசாமி, ''என்ன, சுமி! நீ என்ன சொல்றே?'' என்று குழறிக் கேட்டார்.

பக்கத்தில் இருந்த பாப்பம்மாவையும் சுமதியின் இந்தக் கேள்வி பொறி கலங்க வைத்து விட்டது.

'' என்னிடம் என் கல்யாண விஷயமாய் எதுவுமே கேட்காமல் நீங்கபாட்டுக்கு ஒருத்தரை அழைச்சு வந்து என்னேக் காட்டி விட்டு மேலே செய்ய வேண்டிய காரியங்களுக்கும் வெகு வேகமாய்ப் பேச்சு வார்த்தை நடத்தி முடிச்சுட்டீங்களே, இதுக்கெல்லாம் என்ன அர்த்தம்னு கேட்கிறேன்!''

பதில் ஒன்றும் சொல்லத் தோன்றாமல் திக்கித் திணறிய ரங்கசாமி அசட்டுச் சிரிப்புடன், ''என்னம்மா இது, விளேயாட்டுத்தனமாய் ஏதேதோ பேசறே?.... இதிலெல்லாமா விளேயாடறது ?'' என்றார்.

''நான் விளேயாடலேப்பா ! நீங்கதான் விளேயாடறீங்க.''

'' அந்த ராகவன் அப்படி ஒன்னும் அன்னியமோ அசலோ இல்லேயே? நமக்கு ரொம்பக் காலமாய்ப் பழக்கமான ஒருவருடைய பிள்ளேதானே? உனக்கும் அவனேச் சின்ன வயசிலிருந்தே நல்லாத் தெரியும்.''

''தெரியும்தான்; தெரிஞ்சா ?''

'' அவனேப் பண்ணிக் கொள்ளப் பிடிக்கலேங்கிறியா ?''

''இப்போ இப்படிக் கேட்கிறீங்க, இதை முன்னமே என்கிட்ட ஏன் கேட்கலேன்னுதான் கேட்கிறேன்.''

''சரி; இப்பத்தான் சொல்லேன் ?''

''சொன்னால் இந்தச் சம்பந்தத்தை விட்டு விடுவீங்களா?''

''காரணத்தோடு சொன்னால் யோசிச்சுப் பதில் சொல்லலாம்.''

'' எனக்கு அந்தப் புருஷோத்தமனேப் பண்ணிக் கொள்ளணும்னு எண்ணம்.''

மூச்சுக்கூட விட முடியாமல் திகைத்து உட்கார்ந்திருந்த பாப்பம்மா, ''என்னது?'' என்றவாறு தட்டுத் தடுமாறி எழுந்தாள்.

''நீ சும்மா இரு!'' என்று தம் மனேவியை அடக்கிய ரங்கசாமி, ''இதை ஏன் நீ என் கிட்டே சொல்லலே சுமதி?'' என்றார் அமைதியாக.

''நீங்க கேட்கலே; நான் சொல்லலே.''

'' அவனுக்கும் இம்மாதிரி எண்ணம் உண்டா ?''

'' ஊம்.''

''எவ்வளவு காலமாய்?''

''நாலு வருஷங்களாக.''

வியப்பாலும் திகைப்பாலும் முகம் வெளிறிப் போன ரங்கசாமி தம் மனேவியைத் திரும்பிப் பார்க்க, அவள் தலேயைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

ராகவனின் தந்தை நீலமேகம் ரங்கசாமிக்கு நெடுநாட்களாகவே நெருங்கிய நண்பர். இருவரும் குடும்பப் பாசத்தோடு அந்நியோன்யமாய்ப் பழகி வருபவர்கள். நீலமேகத்துக்குச் சொந்தமான வீட்டில் வாடகைக்குக் குடியிருக்கும் ஒரு மத்தியதரக் குடும்பத்தைச் சார்ந்தவன் புருஷோத்தமன். ராகவனுக்கு அப்போது புருஷோத்தமனேவிடப் பெரிய உத்தியோகம்; சம்பளமும் அதிகம்.

சுமதியின் குணப் போக்குகளே நன்கு அறிந்தும் புரிந்தும் வைத்திருந்த ரங்கசாமிக்கு மேற்கொண்டு என்ன பேசுவது, என்ன செய்வது என்றே தோன்றவில்லே. அவள் ஒன்றைப் பிடித்து விட்டால் அப்புறம் இம்மியும் விட மாட்டாள்; ஒன்று வேண்டாம் என்றால் பிறகு அதைத் திரும்பியும் பார்க்கமாட்டாள்.

அவருக்கு ஒரே மிரட்சியாகிவிட்டது. அன்றிரவு சாப்பிடாமலே படுத்து விட்டார். மறு நாளும் காப்பி பருகியதோடு ஆபீசுக்குக் கிளம்பிப் போய் விட்டார்.

பாப்பம்மா தன் அறையை விட்டு வெளியில் வரவேயில்லே. கண்ணீரும் கம்பலேயுமாய் அவள் படுத்துக் கிடந்தாள். இதையெல்லாம் கண்டும் காணுதவள் போல் சாதாரணமாக நடமாடிக் கொண்டிருந்த சுமதி, அன்று மாலே நாலு மணி வாக்கில் திடீரெனத் தன் தாயின் எதிரே நின்று, ''அம்மா ! நீயும் அப்பாவும் கவலேப்பட வேணும். நான் அந்த ராகவனேயே பண்ணிக் கொள்கிறேன்'' என்றாள்.

அசந்தர்ப்பமாகத்தான் அந்தச் சந்திப்பு ஏற்படுகிறது. சுமதி எங்கோ போய்க் கொண்டிருக்கிறாள். அது முன்னிரவு நேரமா ? அப்படித்தான் தோன்றுகிறது. ஒருகால் பகல் நேரமாகவும் இருக்கலாம். அவளுக்குப் புரியவில்லே. நன்றாக அலங்காரம் பண்ணிக் கொண்டிருக்கிறாள். காரண காரியமில்லாமலே மனத்தில் உற்சாக மகிழ்ச்சி அலேபாய்கிறது. அத்துடன் ஒருவிதமான பய உணர்ச்சியும் நெஞ்சைச் சுரண்டுகிறது.

'' சுமதி !''

சாவதானமாக நின்று திரும்பிப் பார்க்கிறாள். புருஷோத்தமன்தான் அவள் அருகில்

வந்து நிற்கிறான். "அன்னிக்கு வேலை வேணும்னு வந்து கேட்டுவிட்டுப் போனே, அப்புறம் வரவே இல்லையே?"

"ஆமாம்."

"நீ வருவே, வருவேன்னு ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்தேன்."

"........."

"ஏன் வரலே?"

"மறந்து போச்சு!" என்று கூறிச் சிரிக்கிறாள் சுமதி.

ஆச்சரியத்துடன் அவளைப் பார்க்கிறான் புருஷோத்தமன். பிறகு, "அதுவும் நல்லது தான். ஏன்னா, நீ வந்திருந்தால் உனக்கு என் ஆபீசில் வேலை வேணும்னு சொல்லியிருப்பேன்" என்கிறான் புன்முறுவலுடன்.

"வேலை இப்ப காலி இல்லையா?"

"இல்லேன்னாலும் என்னால் புதிசாக ஒரு 'சீட்'டை ஏற்படுத்தித் தர முடியும்."

"பின்னே?"

சற்றுத் தயங்கும் புருஷோத்தமன், "உனக்கு ஆட்சேபம் இல்லேன்னா அதோ, அந்தப் பார்க்கில் உட்கார்ந்து பேசுவோம்" என்கிறான்.

இருவரும் பார்க்குக்குச் சென்று ஒரு பூச் செடியருகில் அமர்கின்றனர்.

நீண்ட நேர மௌனத்துக்குப்பின், "என்ன சொல்லப் போறீங்க?" என்று கேட்கிறாள் சுமதி.

"இன்னும் எவ்வளவு காலத்துக்கு நீ இப்படியே சும்மா இருப்பதாக உத்தேசம்?"

"சும்மா என்றால்?"

"ராகவன் காலமாகி ஒரு வருஷத்துக்கு மேல் இருக்கும் இல்லையா?"

"இருக்கும்."

"அதனால்தான் கேட்கிறேன்."

"எதனால்?"

"உனக்கு உன் எதிர்காலத்தைப் பற்றி ஏதேனும் உத்தேசம் உண்டா?"

"ஒண்ணுமில்லே."

"எனக்கு ஓர் எண்ணம் தோன்றியிருக்கு!"

"எண்ணம்தானே?"

"இல்லே. விருப்பம்."

"விருப்பம்தானே?"

"இல்லே. தீர்மானம்...."

"என்னவோ?"

"உன்னை என்னால் இன்னமும் மறக்க முடியலே."

"அதுக்கு நான் என்ன பண்ணட்டும்?"

"அப்படி மறக்க முடியாததாலேதான் நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளாமல் இருக்கிறேன்."

"சரி?....."

"இதுக்கு உன்னால் ஏதாச்சும் பரிகாரம் காண முடியுமா சுமதி?"

"எதனுச்சம்னு?"

"எதுவாயிருந்தாலும் நான் ஏற்றுக் கொள்ளத் தயார்."

இரண்டு பூக்களின் இதழ்களைக் கிள்ளிப் போட்டு, மூன்று இலைகளைக் கசக்கியெறிந்து தரையில் ஒரு பல்லாங்குழி அளவுக்குக் கால் பெரு விரலால் மண்ணைக் கிளறிவிட்டு—இவையெல்லாம் முடிந்தபின் — அவனை அமைதியாக ஏறிட்டு நோக்கி, "நாளைக்கு இதே நேரத்தில் இதே இடத்துக்கு வந்தீங்கன்னா என் முடிவைத் தெரிவிக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே எழுந்து திரும்பிப் பார்க்காமல் நடக்கிறாள் சுமதி.

ராகவனுக்கு அன்று சம்பள தினம். சுமதிக்கு ரொம்பவும் பிரியமான பட்சணங்களும் மல்லிகைப் பூவும் வாங்கிக் கொண்டு வந்தான். சுமதியும் வழக்கத்தைவிட அதிகக் குதூகலத்துடன் காணப்பட்டாள்.

வாங்கி வந்த பொட்டணங்களை அவளிடம் கொடுத்தபோது சற்றே ஆச்சரியத்துடன் ஏற இறங்கப் பார்த்த ராகவன், "இன்னிக்கு உன் கிட்ட என்னவோ ஒரு 'சேஞ்ச்' தெரியறதே?" என்றான்.

"ஆமாம். என்ன சேஞ்சுன்னு சொல்லுங்க, பார்க்கலாம்?" என்று கன்னல் ரசப் புன்முறுவலுடன் கண் சிமிட்டிக் கேட்டாள் சுமதி.

"ஓ!....லோ — ஹிப் ஸாரி!...."

"இது உங்களுக்குப் பிடிக்காதில்லே?"

"பிடிக்காதாவது!" என்று சொல்லிக் கொண்டே அவளது பொன் சொரியும் இடையை வளைக்கத் தாவினான் ராகவன்.

"இன்னிக்கு மட்டும்தான்" என்று நாணக் குழைவோடு சிரித்துக் கூறிய சுமதி அவனுடைய பிடியில் சிக்காமல் நெளிந்து நழுவிப்



**எதிர்பாராத உபசரிப்பு!**

சென்ற நவம்பர் மாதம் கானரா பாங்க் நிறுவனத்தினர் அதிகாரிகள் தேர்வுக்கென லயோலா கல்லூரியில் ஒரு பரீட்சை நடத்தினர். இடைவேளையில் தேர்வு எழுதிய அனைவருக்கும் இனிப்பு, காரம், காப்பி இலவசமாக வழங்கினர். தேர்வு எழுதிய பெண்களுக்குத் துணையாக வந்த பெற்றோர்கள், உறவினர்களுக்கும் இந்த உபசரிப்பு நடந்தது! இதில் விசேஷம் என்னவென்றால், இத்தேர்வுக்கென கட்டணம் ஏதும் வசூலிக்கப்படவில்லை!

—பா. ருக்மிணி

பின்னால் போய் அவனது முதுகில் சாய்ந்து கழுத்தைக் கட்டித் தொங்கலாடினாள்.

அன்றிரவு பத்து மணி வரையில் அவனை அவள் ஒரு வேலையும் செய்ய விடவில்லை. குறும்புப் பேச்சும், கும்மாளச் சிரிப்பும், பாட்டும், ஆட்டமுமாக அவனுக்குக் குதூகலப் போதை ஊட்டிக் கொண்டே யிருந்தாள்.

விளக்கை அணைத்துவிட்டுப் படுக்கச் செல்லும் நேரத்தில், ராகவன் ஏதோ கேட்க, சுமதி விளையாட்டுத்தனமாக என்னமோ இடக்காகப் பதில் சொல்ல, அவனுக்குக் குபீரெனக் கோபம் வந்துவிட்டது.

''உனக்கு மரியாதையே தெரிகிறதில்லை.''

''நான் என்ன சொல்லிவிட்டேன், மரியாதைக் குறைவாக ?''

''எதிர்த்துக் கேள்வி வேறே கேட்கறயா?''

''இல்லேங்க!..... வந்து....''

''சீ, வாயை மூடு!''

ரொம்பவும் விறைப்பாகக் கட்டிலில் விழுந்து படுத்துக் கொண்டான் ராகவன். சுமதிக்குக் கோபமே வரவில்லை. அவனை அவள் கொஞ்சலும் கெஞ்சலுமாக எப்படியெப்படியோ சமாதானப்படுத்த முயன்றாள்; ஆனால் அவனோ அவளைச் சட்டை பண்ணாமலே இருந்துவிட்டுப் பிறகு தூங்கியும் போனான். சுமதி தூங்கவில்லை. படுக்கையில் புழுவாக நெளிந்து கொண்டிருந்தாள்.

மறு நாள் காலை.

'' இன்னிக்கு நீங்க ஆபீசுக்குப் போகணுமா ?'' என்று நேற்றிரவு நடந்த அந்தக் குட்டிச் சண்டையை அடியோடு மறந்துவிட்டவள் போல் இளநகையுடன் கேட்டாள் சுமதி.

''அவசியம் போகணும். ஒரு முக்கியமான ஃபைலை டிஸ்போஸ் பண்ண வேண்டியிருக்கு.''

''அதை நாளைக்குப் பண்ணக் கூடாதா?... லீவு போட்டுவிடுங்க.''

''எதுக்கு அநாவசியமா லீவு?''

''எனக்கு உடம்பு சரியில்லை.''

''என்ன பண்ணுது?''

''தலையை வலிக்கிறது.''

''இவ்வளவுதானே?''

''என்னால் சமைக்க முடியாது.''

''ஹோட்டல்லே சாப்பிட்டுக்கறேன்.''

''வேணாம்; இன்னிக்கு நீங்க ஆபீசுக்குப் போகக் கூடாது!'' என்று கட்டளையிடுவது போல் கடுமையான குரலில் கூறிவிட்டுச் சரேலெனத் தன் அறைக்குப் போய்விட்டாள் சுமதி.

'இவளிடம் வீண் தகராறு எதற்கு?' என்று எண்ணியோ என்னவோ, ராகவன் ஆபீசுக்குப் போகாமல் இருந்துவிட்டான்.

தலைவலி என்று சொன்ன சுமதி, அப்புறம் மிக உற்சாகத்துடன் சமையல் காரியங்களைக் கவனிக்கலானாள்.

ராகவனுக்கு அவளின் இந்தப் போக்கு வேடிக்கையாகவும் வியப்பாகவும் இருந்தது. பின்னர் அதை முழுமையாகப் புரிந்துகொண்டான். புரிந்து கொண்டபின் அவளை அவன் இரவு வரும்வரை காத்திருக்க வைக்கவில்லை!.

கடல் அலைகளின் இரைச்சல் திடீரென அதிகமாகிச் சுமதியின் செவிப் பறையை அதிரடிக்கிறது. நெடி மணமும் மிகுதியாகி அவளது நாசியைத் துளைக்கிறது.

அந்த நீளமான பெஞ்சின் கால்மாட்டு விளிம்பில் தலையைச் சாய்த்து உட்கார்ந்திருந்த அவள் தோள்களை யாரோ இருவர் மெல்லப் பற்றி மேலே தூக்குகின்றனர். அவளும் துவண்டு சரிந்து எழுந்து நிற்கிறாள். ஆயின் கண்களைத் திறக்க முடியவில்லை. இமை ஓரங்களில் ஏதோ ஒன்று இழுத்துக் கொண்டு தொங்குவது போன்ற வேதனை உணர்ச்சி.

அவளைத் தூக்கியவர்கள் எங்கோ நடத்தி அழைத்துச் செல்கின்றனர். பிறகு ஓரிடத்தில் நிற்க வைக்கப்பட்டு நிற்கிறாள். தன் மீது குடம் குடமாய்க் குளிர்ந்த நீர் கொட்டப் படுவதை உணர்கிறாள். அணிந்திருந்த புடவை நனைந்து உடம்போடு உடம்பாய் ஒட்டிக் கொள்வதையும் உணர முடிகிறது. கூந்தல் அவிழ்ந்து பிரிந்து முதுகிலும் தோளிலுமாகப் புரள்கிறது. குளிரால் உடல் நடுங்குகிறது. அப்போதும் அவளால் கண்களைத் திறக்க முடியவில்லை.

அவர்கள் அவளைத் திரும்பவும் அணைத்துப் பிடித்து அழைத்து வருகின்றனர். அந்த நீளமான பெஞ்சை அவள் மும்முறை வலம் வருகிறாள். அவளை அறியாமலே அவளது கரங்கள் இணைந்து குவிகின்றன.

கடல் அலைகளின் ஓலம் காதைத் துளைக்கிறது...அவள் அந்த அறையின் மூலையில், சுவரிலே சாய்ந்து உட்கார்ந்திருக்கிறாள். நேரம் நகர்ந்து கொண்டே யிருக்கிறது.

அலைகளின் ஓலம் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்கிறது. நாசியை நெருடிய வாசனைக் கலவைகளும் சிறுகச் சிறுகக் காற்றில் கரைந்து மறைகிறது......

சுமதி மெல்லக் கண் திறக்கிறாள்.

அந்த அறையின் நடுவே வைக்கப்பட்டிருந்த குத்துவிளக்கில் ஒரே ஒரு திரி மட்டும் கொழுந்து அலைய எரிந்து கொண்டிருக்கிறது! எங்கோ தொலைதூரத்தில், சேமகல — சங்கொலிகள் மெல்லோசையாகக் கேட்கின்றன!

# ‘மனச்சாட்சியின் காவலர்’

பிரஹ்மஸ்ரீ சதாசிவம் அவர்களுக்கு,

ராஜாஜி விதேஹ முக்தியை அடைந்து ஸ்ரீவைகுந்தத்தை அடைந்து விட்டதைக் கேட்டு ஆராத் துயரத்தை அடைந்தேன். அரசியல் பொருளாதார உலகு தன் காவலனை இழந்து விட்டது. சிந்தனையாளர்கள் தங்கள் தலைவனை இழந்து விட்டார்கள். ஆஸ்திக உலகம் தன் கோட்டையைப் பறிகொடுத்து விட்டது. ஹிந்து மதமும், பண்பாடும் அவற்றின் வீரனை இழந்துவிட்டது. ராஜாஜி விட்ட பணியைத் தொடர்ந்து நடத்துவதே ஆறுதல்.

கோயம்புத்தூர் அக்நிஹோத்ரம்
28-12-72 ராமாநுஜதாத்தாசாரியார்

பூஜ்யர் ராஜாஜி தம் உலக யாத்திரையை முடித்துக் கொண்டு விட்டார். இம்மியளவு கூடப் பிசகாத நேர்மை, ஒழுக்கம், பண்பாடு, தீவிர தேசபக்தி இவற்றுடன், ஒப்புவமையே யில்லாத நுண்ணறிவுடன் கூடிய ராஜாஜியைப் போன்ற ஒரு பிறவி இன்னும் ஆயிரம் ஆண்டுகளானாலும் உண்டாவது அபூர்வம். காந்திஜி ராஜாஜியை, ''என் மனச்சாட்சியின் காவலர்'' என்று கூறியது நூற்றுக்கு நூறு உண்மை. உயிர் போகும் தறுவாயிலும் மகிழ்ச்சியுடனும், ஹாஸ்ய உணர்ச்சியுடன் விளங்கிய ராஜாஜி மாபெரும் தீரர்.

அத்வைத சித்தாந்தம் உண்மையெனில், ராஜாஜி அவர்களின் ஆத்ம சக்தி எங்கள் எல்லோருடைய உள்ளங்களிலும் பரவி, அவர்களுடைய அரும் பெரும் குணங்கள் அனைத்தும் எங்களில் உறைய வேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறோம்.

சேலம்—7 என். சுப்பிரமணியன்,
26—12—72 (பாரதி வித்யாலயா உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்கள், மாணவர்கள் சார்பில்.)

அன்றைய சிவ தனுசைத் தூக்கி நிறுத்திய சக்கரவர்த்தித் திருமகனையும், அன்றைய கோதாசாரியனின் கடிவாளம் பற்றிய கரங்களையும், அன்றைய அற்புத வியூகம் பிளந்த அருந்தீரன் அபிமன்யுவையும், அன்றைய அரசியல்மேதை சாணக்கியனையும் இப்பாரத ரத்தினத்தின் மூலம் கண்டு வந்தோம். இவ்வளவுக்கு ஆற்றல்களோடு, அறவாழிக்கு இட்டுச் செல்லும் அருந் தூதர் இன்று உளரா — இனியும் உண்டாக முடியுமா — சிந்திக்கவும் இயலாது.

கும்பகோணம்
26—12—72 துரோணன்

பாராண்ட மன்னர் அவர், நூறாண்டு வாழ்வார். அவர் இருக்க யாராண்டால் என்ன? என்றெண்ணி நாமிருந்தோம். இன்னும் ஆறாண்டுகள் முடிவதற்குள் தேராண்ட சாரதியை இறைவன் போராடிப் பெற்று விட்டான்.

காலச் சக்கரம் சூழற் சக்கரத்தில் சிக்க வேண்டாம் என்று ‘சக்கரவர்த்தித் திருமகனை’ப் படைத்துத் தந்த ஞானக் கரம் இன்று ஓய்ந்து விட்டது.

பாரதமே என்னே உன் துரதிர்ஷ்டம்!

புதுக்கோட்டை—2
26—12—72 அ. முகமது இஸ்மாயில்

ராஜாஜி செய்த காரியங்களுள் வரலாற்றில் என்றும் அழிக்க முடியாமல் நிலைத்திருந்து எதிர்கால மனித ஜாதிக்கு எடுத்துக்காட்டாக விளங்கப்போகும் உண்மைகள் பல. அவற்றில் முதன்மையானது, 1959ல் ஜனநாயகம் என்னும் கட்டிடத்துக்குத் தனி மனித உரிமை என்னும் கடைக்கால் மிக மிக அவசியம் எனக் கருதிச் சுதந்திரக் கட்சியை நிறுவியது ஆகும்.

வேலப்பாடி
26—12—72 வி. வி. சுந்தரேசன்

ராஜாஜி அவர்கள் பாரதமானார்; பாரதம் அவராயிற்று என்றால் அது மிகையாகாது. அப்பெருமகனாரின் சரித்திரம் முடிந்தது என்றாலும், அம்முனிவரின் சரித்திரம் என்றென்றும் இம்மண்ணுலகில் தனித்தும், நிலைத்தும் வாழும்.

அப்புண்ணிய மகான் இன்று நம்மிடை இல்லை. இதனை நம்மால் நம்பவும் முடியவில்லை. அவர் விட்டுச் சென்ற கொள்கைகள் வழி நின்று நடப்பதே நாம் அம்முனிவருக்குச் செய்யும் மரியாதையாகும்.

திருச்சிராப்பள்ளி — 2
27—12—72 புலவர் பி. ரா. நடராஜன்

தர்மபுரி ஜில்லாவில் ஹொசூருக்கருகிலுள்ள தொரப்பள்ளி கிராமத்தில் ராஜாஜியின் புனித இல்லத்துக்குத் தர்மபுரி ஜில்லா கலெக்டர் திரு ஆர். பத்மநாபனும் பிரமுகர்களும் ஊர்வலமாகச் சென்று மரியாதை செலுத்தினர். தொரப்பள்ளியிலுள்ள வேங்கடரமண ஸ்வாமி கோயிலையும் படத்தில் காணலாம்.



# சிறு பொறி பெருந் தீ: மறவாதீர் இப் பழமொழி!

ரீஃபில் ஸிலிண்டர் இணைக்கப்படும் போது, சிகரெட் பற்ற வைப்பதைக் கூடத் தவிர்த்தாக வேண்டும். பெருந் தீ விளையாதிருக்க, இணைப்பு நடைபெறும் போது எல்லா நெருப்புக்களையும் அணைத்துவிடவும்.

உங்கள் வீட்டிலே தீ விபத்து நேருவதைத் தடுக்க வேண்டுமானால், செய்ய வேண்டியவை, செய்யக் கூடாதவை என்னென்ன என்பதற்கான முக்கிய விதிகள் இதோ:

**செய்ய வேண்டியவை** ■ உபயோகத்திலில்லாத போது ஸிலிண்டர் வால்வையும், பர்னர் குமிழ்களையும் மூடிய நிலையில் வைத்துக்கொள்க. ■ ரீஃபில் ஸிலிண்டரை இணைத்திடும் போது எல்லா நெருப்புக்களும் அணைக்கப்பட வேண்டும். ■ ஸிலிண்டரை இணைத்தான பின், ரெகுலேட்டர் ஜாயிண்டுகளின் இணைப்புறுதியை சோப்பு நீரினால் பரிசோதிக்கவும். ■ ஸிலிண்டர் வால்வுகளைத் திறக்க, கைத்திருகு சக்கரத்தை இடச்சுற்றாக அரைவட்ட அளவுக்கு இலேசான அழுத்தமுடன் திருப்பினால் போதும் ■ மூட்டுவதற்கெனக் குமிழைத் திருப்புமுன்னமே, பற்றவைத்த தீக்குச்சியை பர்னரில் காட்டவும் ■ ரீஃபில் இணைக்கப்படும் ஒவ்வொரு தடவையும் வளைகுழாயின் நிலையைப் பரிசீலித்துத் துப்புரவாக வைத்துக்கொள்க.

**கூடாதவை** ■ ஸிலிண்டரை படுக்க வைக்கக்கூடாது. ■ ஸிலிண்டரை நீங்களாகவே கழற்றவோ, கோக்கவோ கூடாது, வீடு மாற்றும் போதோ, கழற்றிக் கோக்கும் வேலைகளை உங்கள் விநியோகஸ்தரிடம் விடுங்கள். ■ ஸிலிண்டர் வால்வுகள், பிரஷர் ரெகுலேட்டர், பர்னர், எதனையும் நீங்களாகவே சரியமைக்கவே கூடாது. ■ ரெகுலேட்டரிலிருந்தோ, பர்னரிலிருந்தோ வளை குழாயை இழுக்கக் கூடாது. மீறினால் விபத்து நேரிடக் கூடும். ■ சூடேறும் இடத்தின் அருகே வளை குழாயை வைக்கக்கூடாது.

*விதிமுறைக் குறிப்புக் கார்டை உங்கள் விநியோகஸ்தரிடமிருந்து பெற்றுக்கொண்டு, அதிலுள்ள விதிகளைக் கண்டிப்புடன் பின்பற்றவும்.*




**இண்டேன்—பாதுகாப்பிலே எந்த சமையல் எரிபொருளுக்கும் நிகர்**

விற்பனைக்கு விடுப்போர்:

**இண்டியன் ஆயில் கார்ப்பொரேஷன் லிமிடெட்**





TAM. *Dattaram ioc-/288*



# “ஆசீர்வாதம்”

நாடகமாக நடத்தப்பட்டு வந்த ''கோபுரம்'' ''ஆசீர்வாத''மாகத் திரையில் வெளியிடப்பட்டிருக்கிறது.

இப்படத்தின் புதுமையான அம்சம், சண்டைக் காட்சிகள் இல்லாதது!

ஜெய்சங்கர், ராஜாவாக அமைதியாய் நடித்திருக்கிறார். பணக்காரப் பெண்ணிடம் சிக்கிக்கொண்டு தவிக்கும்போதும், கடைசியில் உபாத்தியாயரின் காலில் விழுந்து மன்னிப்புக் கோரும்போதும் தம் பாகத்தைச் சிறப்பாகச் செய்திருக்கிறார்.

துடுக்கும், மிடுக்கும் கொண்டு, வெடுக்கென்று பேசி, யாரையும் அலட்சியப்படுத்தும் விஜயா கடைசியில் திருந்திக் கண்ணீர் வடிக்கும்போது லக்ஷ்மி பாராட்டைப் பெறுகிறார்.

இந்தப் படத்தில் கதாநாயகன், கதாநாயகி என்று இருவர் இருந்தாலும் உண்மையான கதாநாயகன் எஸ். வி. சுப்பையாதான். காட்சிக்குக் காட்சி அவர் நடிப்பு கோபுரமாக உயர்ந்து கொண்டே போகிறது; பேச்சில் ஓர் உறுதி, பார்வையில் ஒரு சாந்தம், நடையில் ஒரு நிமிர்வு — ஆகியவற்றை அவரிடம் காண முடிவது உண்மையிலேயே அதிசயம்தான். உணர்ச்சிப்பெருக்கில் கண்களை மூடிக் கொண்டு பரவச நிலையில் நிற்கும் போதுகூட அவர் நடிப்பு ரசிகப் பெருமக்களை நெகிழ்த்தி விடுகிறது.

எம். ஆர். ஆர். வாசு முத்துவாக வந்து படம் முழுவதும் அநாகரிகமாகக் கத்திக் கலாட்டா செய்கிறார். ''கோபுரம்'' நாடகத்தில் முத்துவாக நடித்த அமெச்சூர் நடிகர் நீலகண்டன் இந்தப் பாத்திரத்தைச் சிறப்பாகச் செய்தார்; அவருக்கே இப்பாகத்தைக் கொடுத்திருக்கலாம்.

ராஜாவின் நண்பன் வேணு ஒரு நல்ல பாத்திரம். நாடகத்தில் அதை ஏற்றுச் சிறப்பித்தவர் 'டைப்பிஸ்ட்'கோபு. படத்தில் 'சோ' வருகிறார். நன்றாகவே நடிக்கிறார். ஆனாலும் கோபுவின் நடிப்பில் இருந்த நெகிழ்ச்சியும், தன்னலம் கருதாத தன்மையும், உருக்கமும் இவரிடம் காண முடியவில்லை. டைப்பிஸ்ட்' கோபுவையே வேணுவாக நடிக்கச் செய்திருக்கலாம்.

நல்ல நடிகர்களின் வரிசையில் வி. எஸ்: ராகவனுக்கு இடம் தந்தாக வேண்டும்' பாராட்டுக்குரிய மிக இயல்பான நடிப்பு.

எழுத்தாளர் 'பிலஹரி'யின் மூலக் கதை 'வியட்நாம் வீடு' சுந்தரத்தின் சுவையான வசனத்தோடு வெளிவந்திருக்கிறது.

தேவகி பிக்சர்ஸின் தயாரிப்பான ''ஆசீர்வாத''த்தை ஆர். தேவராஜன் திறமையாக டைரக்ட் செய்திருக்கிறார்.

பெரிய தனவந்தரான விஜயாவின் தகப்பனாருக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றுவதற்காக விஜயாவின் அகங்கார ஆர்ப்பாட்டத்தைப் பொறுத்துக் கொண்டிருந்த ராஜா அவனை வாழ வைத்த தெய்வமான உபாத்தியாயரைப் போய்ச் சந்தித்துத் தன் இக்கட்டான நிலையை அவரிடம் சொல்லாதது 'சஸ்பென்ஸா'கக் கொள்ள முடியவில்லை. தன்னைக் காண வீடு தேடி வந்த உபாத்தியாயரை அவமதித்து அனுப்பிவிட்டுப் பிறகு மூர்க்கத்தனமாக மனைவியை அறைந்திருக்க வேண்டாம். அவர் எதிரிலேயே மனைவியிடம் தன் நிலையை விளக்கிப் படத்தை விறுவிறுப்பாக முடித்து 'டெம்போ' கெடாமல் காப்பாற்றியிருக்கலாம். அப்படிச் செய்திருந்தால், தமிழ்ப் பட உலகில் ஒரு புரட்சி ஏற்பட்டிருக்குமே!

— காந்தன்

# இலவசம்

ஒரு ஜார்

விக்கோவின் **டெர்மரிக்**




விக்கோவின் **வஜ்ரடந்தி**

(எகானமி சைஸ்) வாங்கினால் டெர்மரிக் வானிஷிங் க்ரீம் ஒரு ஜார் இலவசமாகப் பெறுவீர்கள்.




## உண்மையிலேயே இது ஒரு மகத்தான சலுகை

**விக்கோ வஜ்ரடந்தி**
ஆயுர்வேத பற்பசை

இந்த ஆயுர்வேத பற்பசை மதிப்புமிகுந்த மூலிகைகளினால் தயாரானது. இதைத் தொடர்ந்து, உபயோகித்து வந்தால் பல் சொத்தை, பற்களில் சீழ்ரத்தம் வடிதல் நாற்றம் ஈறு வீக்கம் ஆகியவை மறையும்.

**விக்கோ டெர்மரிக்**
வானிஷிங் க்ரீம்
சந்தண நறு மணமுள்ளது.

உங்கள் நிறத்திற்கு மேலும் அழகூட்டுகிறது. சருமத்தை மென்மையாகவும் பளபளப் பாகவும் வைத்திருக்க உதவுகிறது. ஷேவிங் செய்துகொண்டபின் உபயோகிக்க அருமையானது. வெட்டு. காயங்களைக் குணப்படுத்தும்.

முந்துங்கள்!
இன்றே வாங்குங்கள்

ஸ்டாக்குகள் தீரும்வரையெ இந்தச்சலுகை

**விக்கோ லாபொரெட்டரீஸ்**
பம்பாய்-14

இலங்கை, மலேயா, சிங்கப்பூர் ஆகிய இடங்களுக்கு ஏஜண்டுள் தேவை

மெஸர்ஸ் மெர்கலின் & சன்ஸ், 107-A. ஆற்காட் ரோடு, சென்னை-24
மெஸர்ஸ் M. N. A. அப்துல் மஜீத், 61/62, பந்தர் தெரு, சென்னை-1
மெஸர்ஸ் A. கோபால் நாயர் & சன்ஸ், 57, பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை-5
மெஸர்ஸ் ஸ்ரீ வாசவி பார்மா, 465, பெரிய தெரு, கோயமுத்தூர்
மெஸர்ஸ் ராஜேந்திரா ஸ்டோர்ஸ், 48, கான்ஸாமேட்டுத் தெரு, மதுரை-1

''நீ பேசறது கொஞ்சம்கூட நல்லா இல்லே. அவர் செய்யறதை நல்லா தெரிஞ்சுக்கிட்டு, அதை அங்கீகரிச்சுக்கிட்டுக் கண்டும் காணாம இருக்கணும்னு ஒரு அட்ஜஸ்மெண்ட் பத்திப் பேசறியே! அது உனக்கே அசிங்கமாத் தெரியலே? நாலு காசு சம்பாதிச்சாலும் கௌரவமா மத்தவங்க மதிக்கிற மாதிரி இருந்தாத்தான் நல்லது.''

''நல்லபடியாச் செஞ்சுக்கிட்டிருந்த வேலையைத் தொலைச்சுக்கிட்டார். அது அவரோட போறாத காலம். நல்ல வேலையா ஒண்ணு தேடிக்கலாம். சின்னக் கொளந்தையா !''

''சினிமாவிலே சேர்த்துவிடறாராம் சினிமாவிலே. இவரோட படிப்புக்கு, இவரோட நிலைக்கு இதெல்லாம் சரிதானா?... எனக்கு எவ்வளவு அவமானமா இருந்துச்சு தெரியுமா? அந்தப் பொண்ணு இவரை நடு ரோட்டிலே மறிச்சுக் கேட்குது. இவரு 'திருதிரு'ன்னு விழிக்கிறாரு. 'நீ யாரும்மா? இவரு உன்னையும் சினிமா, நாடகத்திலே சேர்த்து விடறேன்னு சொன்னாரா' அப்படின்னு என்னைக் கேக்கறா. என்னங்க இதெல்லாம் நடு வீதியிலே? 'இந்தப் பொண்ணு யாரு, இவ சொல்றதெல்லாம் நிஜம்தானா?' அப்படின்னு கேக்கறேன். இவரு என்னோட கையைத் தரதரன்னு பிடிச்சு இழுத்துக்கிட்டு நடக்கறாரு. நான்தான் உண்மையைத் தெரிஞ்சுக்கணும்னு அவர் பிடியை உதறிக்கிட்டு, அந்தப் பொண்ணுகிட்டே வந்து, விலாசத்தைக் கொடுத்து.'அங்கே வா, எல்லாம் விவரமாகக் கேட்டுக்கலாம். ஒரு ஆண்பிள்ளையை இப்படி நடு ரோட்டிலே மறிச்சுக் கேக்கறது நாகரிகமில்லே'ன்னேன்.... அவதான் வந்தாளே! நீயும்தான் அவ சொன்னதைக் கேட்டியே... இவர் வெளியிலே என்ன செஞ்சுக்கிட்டு இருக்கார்னு தெரிஞ்சுக்கிட்டில்ல? அந்தப் பொண்ணோட பேரு என்ன சொன்னா? சுகுமாரியா? அவகிட்டே இவரு ஐந்நூறு ரூபாய் வரையிலே வாங்கி ஏமாத்தியிருக்காரு. இதைப் போல இன்னும் ரெண்டு மூணு பொண்ணும், நாலஞ்சு வாலிபர்களும் இதிலே உண்டாம்.

'' 'அந்தப் பொண்ணை வீட்டுக்கு ஏன் வரவழைச்சேன்'னு சண்டை பிடிக்கறார். இவருடைய லட்சணம் புரிஞ்சு போச்சேன்னு. அவரு வெளியிலே என்ன வேணுமானாலும் செய்வாராம். யாரும் எதுவும் கேட்கவும் கூடாதாம். கேட்டால் வீட்டை விட்டுப் போயிடுவாராம். எப்படிப் பேச்சு பார்த்தியா? இவரு வீட்டை விட்டுப் போனால் என்ன செய்வாருன்னு எனக்குத் தெரியாதா?''

ஜெயாவிடம் நித்யா ஆத்திரம் தீரக்கத்தித் தீர்த்தாள். அவளுடைய அழுகையை ஆத்திரம் மேலாதிக்கம் செய்து கொண்டிருந்தது.

இரண்டு நாட்கள் எவ்விதச் சலசலப்புமின்றிச் சென்றபோது மூன்றாம் நாள் இரண்டு வாலிபர்கள் சரவணனைத் தேடிக் கொண்டு வந்தார்கள்.

அந்தப் பெண்ணின் கதையைப் போலவே இதுவும் இருக்கவே, இதற்கொரு முடிவு கட்டும் பொருட்டு நித்யா அவர்களிடம் கொஞ்சம் கடிந்த மாதிரியே பேசிவிட்டாள்.

''இனிமேல் இம்மாதிரியெல்லாம் கேட்டுக் கொண்டு இங்கே வராதீர்கள். இவருக்குச் சினிமா லைன்லே யாரையும் அதிகமாப் பழக்கம் கிடையாது. இதுக்கெல்லாம் அவரை நம்பி ஏமாறாதீங்க. பணம் கொடுத்துவிட்டு அப்புறமாத் திட்டாதீங்க. இங்கே வந்து கேக்காதீங்க. என்னுடைய கடமையா நெனச்சு இதை உங்ககிட்டே சொல்றேன்.''

பின்னால் சரவணன் விஷயமறிந்து கத்தினான்: ''வர்றவங்ககிட்டேயெல்லாம் என்னைப் பத்தி அவதூறு சொல்ல நீ யாரு? என்னோட பேரை நீயே கெடுத்துப்புடுவ போல இருக்கே! சினிமா லைன்லே யாரையுமே எனக்குப் பழக்கமில்லேன்னு சொன்னியாமே!''

''ஆமாம். சொன்னேன்.''

''நீ எப்படிச் சொல்லலாம்?''

''உண்மையைத்தானே சொன்னேன்? உங்களுக்கு யார் யாரைத் தெரியும்? உங்க சொல்லுக்கு வெளியே என்ன மதிப்புங்கறதெல்லாம் எனக்கும் கொஞ்சம் தெரியுமே. ஏதோ ரெண்டு எக்ஸ்ட்ரா நடிகர்களைத் தெரியும். படமெடுத்துப் படுதோல்வி கண்டு பெட்டிக்கடை வைச்சிருக்கிற முன்னாள் புரொடியூஸர் ஒருத்தரைத் தெரியும். அவரும் இனிமே படமெடுக்கிறதைப் பற்றிக் கனவிலேகூட நினைக்கறவர் இல்லே. போதுமா ?''

சரவணன் உறுமினான்.

சிவப்பிரகாசம் மகளைச் சாந்தப்படுத்த முயன்றார்.

''இல்லே அப்பா! இவருடைய இம்மாதிரி செய்கைகளை நான் அநுமதிக்க மாட்டேன்.''

''நீ என்னடி அநுமதிக்கிறது? நீ என்ன எனக்கு எஜமானியா?''

''நான் உங்க மனைவி.''

''நான்ஸென்ஸ்''—

சரவணன் வெளியே போய்விட்டான்.

அவனுக்கு எங்கேயும் வேலை கிடைக்காது. எங்கேயாவது, யார் கிழேயாவது வேலை செய்யணும்கிற விருப்பமும் அக்கறையும் இருந்தால் அவன் தன்னை முழுதும் மாற்றிக்கொள்ள வேண்டும். பிறரைப் போல, ஒரு சராசரி மனிதனைப் போலவாவது பழகவும், பேசவும் கத்துக்கணும். அவனுடைய 'டெம்பர்மென்டு'க்கு எங்கேயும் ஒத்துக்கிறதில்லே. எங்கே போனாலும் சண்டை. மேலதிகாரி, மானேஜர் சூப்ரண்டண்ட் என்று இல்லை. எடுத்த எடுப்பிலே அவன் எல்லாரையும் தூக்கி எறிஞ்சு பேசி விடுவான்.

அவர் முதலாளியின் உறவினர். ஜெர்மனி, ஜப்பான், அமெரிக்கா என்று வெளிநாடுகளுக்கெல்லாம் போய் நிர்வாகப் பொறுப்புக்கள் பற்றியும், புதிய புதிய உத்திகளையும் கற்றுக் கொண்டு வந்திருக்கிறவர். அவரிடம் போய்ச் சண்டை போட்டுக் கொண்டு அவரைக் கேவலப்படுத்தற மாதிரி பேசறான். எவன்தான் இதைப் பொறுத்துக் கொள்வான்? இருக்கிறதோ புரோபேஷன் பீரியட் — 'உன்னுடைய வேலையிலே எங்களுக்குத் திருப்தி இல்லே' என்று ஆறாவது மாசத்திலே வீட்டுக்கு அனுப்பிட்டாங்க....

''அதில் ஒன்றும் இல்லே.''

சரவணன் நகைப் பெட்டியைத் திறந்து பார்ப்பதைக் கூடத்துக்கு வந்த நித்யா கவனித்துவிட்டு, அவன் எதைத் தேடுகிறான் என்

பதை யூகித்தவளாகப் பதில் சொல்லிவிட்டு மீண்டும் உள்ளே போய்விட்டாள்.

தன் சினத்தின் வீச்சை அலட்சியப்படுத்துவது போல் உள்ளே போய்விட்டவளைக் கூடத்தில் நின்றவண்ணம் கடுமையுடன் விளித்தான்.

அவள் வெளியே வராமல் உள்ளே இருந்தபடியே ''என்ன வேணும்? எதுக்காக இந்தக் காட்டுக் கத்தல்?'' என்றாள்.

''மரியாதையாகச் சொல்லு. அவை எங்கே?''

அவளும் சரவணனின் சினத்தை எதிர்பார்த்தவள் போல, பதற்றப்படாமல் கூடத்துக்கு வந்தவள் நிலைவாயிற்படியில் வந்து சாய்ந்து கொண்டு நின்றாள்.

''அவை எங்கே என்று சொல்ல மரியாதை தேவையில்லை. சினிமாவில் சேர்த்துவிடுகிறேன் என்று வாங்கிய தொகை, நாடகம் நடத்தப் போகிறதாக வாங்கிய தொகை, லாண்டரிப் பாக்கி, பேப்பர்க்காரன், இரண்டு மாதக் குடும்பச் செலவு... போதுமா?''

பீரோ கதவை வேகமாகச் சாத்தினான்.

''மெதுவா சாத்துங்க. அந்தக் கப்போர்டைப் பார்க்கறதுக்கு நாளைக்கு ஆள் வருகிறது. நாம ரெண்டு பேரும் முழுசா மிஞ்சுவோம்...போறும்... பார்த்துக்கலாம்...''

நித்யா சிரித்துக் கொண்டே உள்ளே வேகமாகப் போய்விட்டாள்.

* * *

''என்ன இதெல்லாம்?''

கண்ணாடியை ஜன்னல் கட்டையில் சாய்த்து வைத்துக் கொண்டு தலைவாரிக் கொண்டு நின்றவளிடம் அப்பொழுது தபால்காரர் கொடுத்துவிட்டுப் போன கவரைப் பிரித்துப் பார்த்துவிட்டுக் கேட்டான்.

''என்ன அது? படியுங்களேன்... அஜந்தா ஏஜன்ஸியிலிருந்துதானே! இண்டர்வியூவுக்கு வந்திருக்கா? என்னிக்கு? அதைத்தான் எதிர்பார்த்துக்கிட்டு இருக்கேன். படிச்சுப் புட்டு வீட்டிலே சும்மா இருப்பானேன்? டைப்பிலே நல்ல ஸ்பீடு உண்டு.''

''யாரைக் கேட்டுக்கிட்டு இதெல்லாம் செய்யறே?''

''யாரைக் கேட்டுக்கிட்டும் செய்யலே. நானாத்தான் ஒரு முடிவுக்கு வந்திருக்கேன்.''

''அது எனக்குப் பிடிக்கலே.''

''எனக்குப் பிடிக்குது.''

''எனக்குப் பிடிக்கலேன்னா அதை நீ செய்யக்கூடாது.''

''அவங்க அவங்க விருப்பத்துக்குக் குறுக்கே யாரானும் வந்தா, எப்படிப் பிடிக்காதோ, அதேபோலத்தான் எனக்கும்.''

''நீ பேசறது நல்லா இல்லே. ஆமாம், சொல்லிட்டேன்.''

''நீங்க என்னோட பதிலை நேரிடையா உங்களுக்குள்ளே எடுத்துக்கிட்டீங்க போல் இருக்கு.''

''நீ அந்த வேலைக்குப் போகக் கூடாது.''

''காரணம்?''

''காரணம் சொல்லத் தேவையில்லை.''

''தயவுசெஞ்சு உங்க வார்த்தையை மீறி நடக்கும்படியா வைச்சுக்காதீங்க. கௌரவமா ஏதாவது அறிவுரை சொல்லுங்க. ஆகவேண்டியதைப் பற்றிச் சொல்லுங்க. இண்டர்வியூவிலே என்ன கேட்பாங்கறதைச் சொல்லிக் கொடுங்க. எப்படிப் பேசணும், எப்படி நடந்துக்கணும்கிறதைப் பத்திச் சொல்லுங்க. எனக்குப் பயன்படற மாதிரி இருக்கும்.''

''நீ முடிவு பண்ணிட்டியா?''

''ரொம்ப நாளாச்சு நான் முடிவு பண்ணி. இந்த அஜந்தா ஏஜென்ஸிஸ் இண்டர்வியூ விஷயம்கூட எனக்கு முன்னமே தெரியும். உங்க நண்பர் கவிவரதனது ஏற்பாடும், சிபாரிசும்தான் இது. ரெண்டு மாதங்களுக்கு முன்னாலேயே சொல்லி வைத்திருந்தேன், ஒரு நல்ல சான்ஸ் வந்தாச் சொல்லுங்கன்னு. இதை அவர் ஏற்பாடு பண்ணியிருக்கார்.''

''அஜந்தா ஏஜென்ஸிக்காரன் சுத்த பிராட்.''

''ஒரு பிராடுக்கு மற்றொரு பிராடைக் கண்டால் பிடிக்காதுதான்.''

''போறுமே ஜோக். சகிக்கலே.''

''தனிப்பட்ட முறையிலே உங்களுக்கும் அவருக்கும் ஏதாவது இருந்தா அதெல்லாம் வேண்டாம். கம்பெனியைப் பொறுத்தவரையிலே மாதமானா ஒழுங்காச் சம்பளம் வந்தால் சரி. இதைப்பொறுத்தவரையிலே உங்களுக்கு அபிப்பிராய பேதம் எதுவும் இருக்காதுன்னு நினைக்கிறேன்.''

''என்னோட அபிப்பிராயம் பற்றித்தான் உனக்கு அக்கறையில்லையே!''

''நீங்க தர்பார் நடத்தின இடம்தானே அது? நீங்களே சொல்லியிருக்கீங்களே! நல்ல கம்பெனி. வேலை நடந்தாலும், நடக்காவிட்டாலும் மாதமானா சம்பளம் 'டாண்'னு மூணாம் தேதி கொடுக்கிறான்' அப்படீன்னு?''

''நீ யார் என்பது அவர்களுக்குத் தெரியுமா?''

''கவிவரதன் எல்லாத்தையும் சொல்லித்தான் இதைச் சொல்லியிருக்கிறார்.''

''ஆல்ரைட்! பெஸ்ட் ஆஃப் லக். விஷ் யூ ஸக்ஸஸ்.''

''தாங்க்யூ, ஸார்.''

வெளியில் செல்ல இருந்தவளை எதிரே வந்து தடுத்தும் தடுக்காமலும் நின்று சிரித்த வண்ணம் அவன் சட்டைப் பையில் உள்ள மணிபர்ஸை வெளியே எடுத்து, ''இந்த நூறு ரூபாய் வேறு ஒரு செலவுக்காகக் கடன் வாங்கி வைத்திருக்கிறேன், சார். என்னைக் கேட்காமல் அதை எடுத்துக்கிட்டுப் போனால் எப்படி? வந்து கேட்கிறவங்களுக்கு நான் என்ன பதில் சொல்லட்டும்?'' — அந்தத் தொகையை மட்டும் எடுத்துக் கொண்டு, பர்ஸை அவன் பையில் வைத்துவிட்டு, அப்பால் நகர்ந்த போது, அவளது கையைப் பிடித்துச் சினத்துடன் இழுத்தான்.

''எனக்கு அந்தப் பணம் வேணும்.''

''ஸாரி, இதைத் தருவதற்கில்லை. வீட்டின் நிலைமையை நன்றாகப் புரிஞ்சுக்கிட்டு எதையும் செய்யுங்க.''

அவனது முரட்டுப் பிடியை உருவிக் கொண்டு உள்ளே போய்விட்டாள்.

* * *

வாதநாராயண மரங்கள் சிவப்புப் பூக்களை உதிரவிட்டு, தரையை சிவப்புக் கம்பளம் விரித்த மாதிரி செய்திருந்தது. காற்றில் சதா

ஆடும் மரங்கள், சாயங் கால வேளையில் கிளைகளில் வந்து அமரும் பட்சிகளின் ஒலி. ஜெயாவின் முன்னால் அமர்ந்திருந்த நித்யா வெகு நேரம் மௌனமாகவே இருந்தாள்.

மைதானத்தில் விளையாடிக் கொண்டிருந்த மாணவர்கள் கூட்டம் கூட்டமாகக் கலைந்து போய்க் கொண்டிருந்தனர்.

''அவரோட அப்பா அம்மா ரொம்ப சாது. மானஸ்தர்கள் ஜெயா. பயந்த சுபாவம். இவரோட விஷயங்களில் தலையிடவே பயப்பட்டுக்கிட்டு இருக்காங்க. என் மேலே அவங்களுக்கு அன்பு உண்டு. மதிப்பும் உண்டு. இவரோட குணத்துக்காக அவங்களைக் கோவிச்சுக்கிறதிலே அர்த்தமேயில்லே. '' இவரோட குடும்பத்திலே இவர் ஒரு தனி ரகம் அப்படின்னு அவங்க அடிக்கடி சொல்லுவாங்க.''

''என்னாலேயும் இவரைப் புரிஞ்சுக்க முடியலே.''

''எப்படி வேலையெல்லாம்? உனக்குப் பிடித்தமாக இருக்கா?'' கவிவரதன் கேட்டுக்கொண்டே ஜெயாவின் அருகில் வந்து அமர்ந்தான்.

''வேலை பிடித்திருக்கிறது. சூழ்நிலையும் பிடித்திருக்கிறது.''

''ரொம்ப சந்தோஷம். அஜந்தா ஏஜென்ஜ்ஸ் மானேஜர் மனோன் மணியைப் போன வாரம் பார்த்தேன். உங்க வேலைகளில் அவருக்கும் பரம திருப்தி. அவர் ரொம்ப நல்ல மனிதர். அவரிடம் சண்டை போட்டுக் கொண்டு வெளியேறிவிட்டான் சரவணன். சொஸைட்டியிலே வாங்கி யிருந்த கடனைத் திருப்பித் தரமாட்டேன் என்று கடைசியிலே தகராறு செஞ்சு ஜாயிண்ட் கையெழுத்துப் போட்ட ஓர் ஏழைக் குமாஸ்தாவை மாட்ட வைக்கிறதுக்கு இருந்தான். இவனைக் கோர்ட் வரையிலே இழுத்து விடாமே விடறதில்லேன்னு அவர் சபதம் போட்டார். அரியர்ஸ் போனஸ் தொகை ஒன்று தீர்ப்பாச்சு. ஐந்நூறு ரூபாய். மானேஜர் மனோன்மணிகிட்டே நல்லா மாட்டிக்கிட்டான். தலைகீழா நின்னு பார்த்தான். ஒண்ணும் நடக்கல்லே. இதே அஜந்தா ஏஜன்ஸீஸ் மானேஜர் மனோன்மணியை ஆரம்பத்தில் எப்படியெல்லாம் ஏமாத்தி நம்ப வைச்சிருக்கான் தெரியுமா? பேசறதெல்லாம் உண்மை என்று நம்பினார். இவன் மேலே அவ்வளவு மதிப்பு. 'எனக்கு அவரைத் தெரியும், இவரைத் தெரியும், நிதி அமைச்சரோட மாப்பிள்ளை என்னோட சிநேகிதர், நானும் அவனும் காஷ்மீர் போவோம்.!' — இப்படி அளந்துக்கிட்டே யிருப்பானும்.



திடீர்னு வருவான். ஒரு வாரம் லீவு வேணும். டெல்லி போறேம்பானும். புரொட்யூஸர் ஆனந்தனுக்கு ஒரு தொழிற்சாலை ஆரம்பிக்க லைசென்ஸ் வரக் காலதாமதம் ஆவுதாம். போய் அந்தப் பேப்பரை என்னோட மந்திரி நண்பர் கிட்டே சொல்லி 'மூவ்' பண்ண வைச்சுட்டு வரணும்பான்.. சும்மா ஃபைலைச் சுத்திக்கிட்டு இருப்பான். ரெண்டு நாட்கள் ஆபீசுக்கே வரமாட்டான். மூன்றாம் நாள் 'திடீரென்று என் நண்பனுக்கு ஒரு கார் வாங்க வேண்டியிருந்ததால் பம்பாய் வந்துவிட்டேன். எனக்கு நான்கு நாட்கள் லீவு தரும்படி வேண்டிக் கொள்கிறேன்' என்று ஒரு கடிதம் வரும். கடிதத்தில் தேதி, பம்பாயில் ஒரு விலாசம் எல்லாம் இருக்கும். தபால் முத்திரையைப் பார்த்தால் அது 'வடபழனி' என்று இருக்கும். நானே சலிச்சுப் போய்த்தான் 'இதெல்லாம் என்னத்துக்குடா பண்ணறே? போலித்தனமான மதிப்புகளைச் சம்பாதிக்கிறதிலே என்ன இருக்கு'ன்னு கேட்டேன். 'நாலு பேர் நம்மை மதிக்கணும்னு இப்படித்தான் பண்ண வேண்டியிருக்கு. இல்லேன்னா யாரும் மதிக்க மாட்டான் என்கிறான், சுத்த இடியட்.''

மூவரும் எழுந்தனர்.

நன்றாக இருட்டி விட்டது.

கவிவரதனும் ஜெயாவும் தூரத்தில் ஜோடியாகச் சிரித்துப் பேசிக் கொண்டு போனார்கள். தெரு விளக்கினடியில் அவர்கள் செல்லும்போதும் அவர்களின் நெருக்கம் நன்றாகத் தெரியும். அவர்களுடைய தாம்பத்தியம் அவளுக்கு ஒரு பெருமை தரும் ஆதர்சமாகத் தோன்றும். ஜெயாவுக்கு ஒரு ரேடியோக் கம்பெனியில் 'அசெம்பிளி செக்ஷ'னில் உத்தியோகம். கவிவரதன் டிரக் ஸ்டாகிஸ்ட், கோடவுன் கீப்பர். நட்புக்கு நட்பு. உறவுக்கு உறவு. ஏற்றத் தாழ்வுகளை, கோப தாபங்களை, உணர்ச்சி வெளியீடுகளை அநுசரணையுடன் ஏற்று உடன் வந்து துணை நிற்கிறவர்கள்.

''நான் எவ்வளவு சீரியஸா விஷயத்தை விவரிச்சுக்கிட்டு வரேன். நீ சிரிக்கிறயே... என்ன அர்த்தம்? உனக்கு என் மேலே நம்பிக்கை இல்லேன்னு தானே சொல்லாமே சொல்ல வரே?''

நித்யா மௌனமாகச் சரவணன் முகத்தைப் பார்த்தாள். 'எவ்வளவு அழகான, கவர்ச்சியான முகம். அசப்பிலே பார்த்தால் பளிச்சென்று ஓர் அப்பாவித்தனமும் தெரிகிற மாதிரி இருக்கிறது. இவருக்கு இப்படி விபரீத எண்ணம் உதிக்கிறதே!'

''நீங்க சொல்லிக்கிட்டு வரது புரியாமல் இல்லே. நல்லாப் புரியுது. உங்க பெண்டாட்டி அப்படி யொண்ணும் மக்கு இல்லை. ஆனால் உங்களுடைய அதிர்ஷ்டமோ அல்லது என்னோட துரதிர்ஷ்டமோ நீங்க போட்டுக்கிட்டு

வியக்கவைக்கும் உங்கள் அழகை
வேளிப்படுத்திக் காட்டும் ஜரிகைப் புடவைகள். இப்போழுது
ஹேண்ட்லூம் ஹவுஸில் வந்து குவிந்துள்ளன.

உங்கள் அழகை
சிறப்பாக எடுத்துக்காட்ட
காஞ்சிபுரம், பெனாரஸ், ராஜஸ்தான்
புடவைகள்.



ஹேண்ட்லூம் ஹவுஸ்

9, ரத்தன் பஜார், சென்னை 600003

FDS-HH-1830 THA

10% விசேஷ தள்ளுபடி உண்டு

வர்ற ஒவ்வொரு திட்டமும் நீங்க செஞ்சுக்கிட்டு வர்ற காரியமும் என்னைக் கவரவே மாட்டேங்குது. என்னோட ஆத்திரத்தைத்தான் கௌப்புது. நீங்க என்ன நினைக்கிறீங்கன்னு, உலகத்திலே நீங்க மட்டும்தான் மகா புத்திசாலி, மத்தவங்க எல்லாம் முழு முட்டாள், ஒண்ணுமே தெரியாதவங்கன்னு. என்ன செய்ய? உங்களை நல்லாத் தெரிஞ்சவங்க நீங்க போடற திட்டங்களை உடனே புரிஞ்சுக்கிடுவாங்க. பொதுவா என்னையே எடுத்துக்குங்க.''

''உன்னுடைய வெட்டிப் பேச்சுக்களையெல்லாம் கேட்கிறதுக்கு நான் தயாராயில்லே. நீ முடிவா என்ன சொல்றே?''

''என்னுடைய அபிப்பிராயத்தை முடிவாச் சொல்லிடவா? இது எனக்குப் பிடிக்கல்லே. நான் சம்மதம் தரவும் மாட்டேன். இந்த மோசடித் தொழிலுக்கு எல்லாம் நான் உங்க கூட ஒத்துழைக்க முடியாது. மூட்டை மூட்டையாய் மரத் தூளை வாங்கறது, அதை ஆந்திராவுக்கு அனுப்பறது, அவங்க அந்த மரத் தூளைச் சீயக்காய்ப் பொடியுடன் கலந்து கலப்படம் செய்வாங்க. அந்தச் சீயக்காய்த் தூளுக்கு நீங்க மார்க்கெட் பிடிச்சுக் கொடுக்க வேண்டியது. மரத் தூளுக்குத் தனிக் கமிஷன், சீயக்காய்த் தூளுக்குத் தனிக் கமிஷன்—மாட்டிக்கிட்டால் போலீஸுக்குத் தனிக் கமிஷன்.... பிரமாதமான ஐடியா... மரத் தூள் பிடிக்க முன் பணம் வேணும். மர மண்டிகளுக்கு முன் பணம் கொடுக்கணும். சாக்குப் பைங்க வாங்கணும்...... இதைத் தொடர்ந்து நடக்கிற வேலைகளுக்குப் பணம் தேவை.... அப்படித்தானே?''

''ஆமாம்.''

''பணத்துக்கு எங்கே போவீங்க?''

''உன்னோட மாமன் இருக்காரே, லிகோ ஏஜெண்ட். அவர்கிட்டே வாங்கிக் கொடு. நீ சொன்னால் தரேங்கறாரு. நீதான் என்னை எல்லார் மனசிலேயும் ஒரு நம்பிக்கை இல்லாதவனாகச் செஞ்சு வைச்சிருக்கியே. என்னை எவனும் நம்ப மாட்டேங்கறான்.''

''என்னாலே முடியாதுங்க. நான் யார்கிட்டேயும் வந்து உங்களுக்குப் பணம் தரச் சொல்ல மாட்டேன். ஆறு மாசமா உத்தியோகத்துக்குப் போறேன். உங்களுடைய முன் திருவிளையாடல்களிலிருந்தே நான் பாதி படிகள்தான் ஏறியிருக்கிறேன். தெரியுமில்லே? உங்க மானமும் முக்கியம். நீங்க ஆயிரம் தான் தப்புப் பண்ணினாலும் வெளியிலே ஒருத்தரும் உங்களை ஒண்ணும் சொல்லக் கூடாது. அன்னிக்குச் சினிமாவுக்குப் போற போது வழியிலே மறிச்சு ஒருத்தி கேட்டாளே, அதைப் போல நடக்கக் கூடாதுன்னு நான் பிரார்த்தனை செஞ்சுக்கிட்டு வரேன்.''

''இதைப் போல் ஒரு ஆயிரம் இல்லே, எத்தனை ஆயிரம் வேண்டுமானாலும் என்னால் சம்பாதிக்க முடியும். நான் உன் தயவிலே வாழணும்னு தலையெழுத்தா என்ன?''

கண்களில் நீர் வழியப் பதற்றத்துடன் கணவனின் வாயைப் பொத்தினாள் நித்யா.

''யாருக்கு யார் தயவா இருந்தா என்னங்க? கணவன் மனைவிக்குள்ளே இந்த வித்தியாசம் எதுக்கு? அதுக்காக நானோ நீங்களோ வெட்கப்படணும்கிறதே இல்லேங்க. தாம்பத்யம்கிறதே அந்நியோந்நிய ரகசியத்திலே பிணைக்கப்பட்டதுதாங்க. நீங்க ஏதோ தலையெழுத்துன்னீங்களே, அதுகூட நம்ம ரெண்டு பேரோட தலையெழுத்து நம்மோடேதான் இருக்கும். இனிமேல் அப்படிப் பேசாதீங்க. நான் உங்களுக்காகச் சம்பாதிக்கிறதிலே வெட்கப்படலே, இறுமாப்பு அடையலே. தற்பெருமை கொள்ளலே. உயர்வு மனப்பான்மை பாவிக்கல்லே. வீணான வார்த்தையெல்லாம் சொல்லாதீங்க.''

சரவணன் போய்விட்டான்.

''சரவணன் பத்து நாட்களாத் தொந்தரவு கொடுத்துக்கிட்டு இருக்கானம்மா. ஏதோ பிஸினசுக்குப் பணம் தேவையாம். வட்டி எத்தனை வேணும்னாலும் தரேன்கிறான்...''

மாமா சதாநந்தம் நித்யாவின் முகத்தைப் பார்த்தார். அவள் முகம் வேதனையுடன் காணப்பட்டது.

''மாமா! அவருக்கு நீங்க பணம் ஏதும் தரவேண்டாம். அவராலே அதைத் திருப்பித் தர முடியாது. பொறுப்பில்லாமல் பேசறாரு.



கடன் கூட இல்லே. அவர் கேட்கிற தொகையை நீங்க சும்மா இனாமாகத் தருவதாக இருந்தாக்கூட வேண்டாம். பணத்துக்குப் பதிலா ஏதாவது நல்ல புத்திமதி சொல்லி அனுப்புங்க.''

''நீ என்னம்மா இப்படிச் சொல்லிட்டே?''

''நான் சொல்லாமே வேறு யார் சொல்லுவாங்க? நீங்க தைரியமா நான் சொன்னதாகவே கூடச் சொல்லி விடலாம். நித்யாவுக்கு இஷ்டமில்லையாம். நான் தர இயலாதுன்னு சொல்லிடுங்க. என்கிட்டேதானே, வந்து சண்டை போடுவாரு. நான் சமாளிச்சுக்கிறேன்.''

''என்னைத் தர்மசங்கடத்திலே மாட்டி வைச்சுட்டியே?'' என்றார் சதாநந்தம்.

''அவருக்கு நீங்க பணத்தைக் கொடுத்து, எனக்குச் சங்கடத்தை உண்டாக்கிடாதீங்க. நிச்சயமாச் சொல்றேன், அப்படிக் கொடுத்தால் அது உங்களுக்குத் திரும்பக் கிடைக்காது....''

''உன் கழுத்தை நெரித்து இப்பவே கொலை செஞ்சுட்டுப் போயிடுவேன். அயோக்கியக் கழுதை. என்னைப் பத்தித் தவறான எண்ணங்கள் வெளியே உண்டாக நீதான்



காரணம்'' என்று கத்தினான் அங்கே வந்த சரவணன்.

சதாநந்தம் நழுவினார்.

''உங்க படிப்புக்கும் உங்ககிட்ட இருக்கிற மற்ற திறமைக்கும் ஒரு நல்ல உத்தியோகமா தேடிக்குங்க. அஜந்தா ஏஜென்ஸீஸ் மானேஜர் உங்க திறமையை எவ்வளவு நல்லாப் புரிஞ்சு வைச்சுக்கிட்டு இருக்கார் தெரியுமா? போன வாரம் ரொம்பச் சிக்கலான விஷயம் வந்துச்சு. இதைப் போல முன்பு நடந்ததிலே நீங்க அதை எப்படி டீல் பண்ணினீங்க, எப்படி டிராஃப்ட் போட்டீங்கன்னு தேடிப் பிடித்துப் பழைய பைல்களையெல்லாம் கொண்டு வந்து, அப்படியே அந்த வழியிலேயே இதையும் டிஸ்போஸ் பண்ணினாரு. எனக்கு எவ்வளவு பெருமையா யிருந்தது தெரியுமா? இப்பவும்கூட ரொம்ப காம்ப்ளிகேஷனு இருந்தா பழைய பைல்களைப் புரட்டி உங்க டிராப்டைத்தான் கொண்டு வந்து போடறாரு. இவ்வளவு திறமையை வைச்சுக்கிட்டு இப்படி உதவாக்கரைக் காரியங்களையெல்லாம் செய்ய நினைக்கிறீங்களே.''

''எதா இருந்தா என்ன. திறமையை வைச்சுக்கிட்டுத்தான் பிழைக்கணும். நாலு நல்லதும் இருக்கும் கெட்டதும் இருக்கும். அதையெல்லாம் 'லைட்'டா எடுத்துக்கிட்டுப் போகணும். நான் செய்யறது உனக்குப் பிடிக்கலைன்னு சும்மா வாயை மூடிக்கிட்டு உன் வேலையைப் பாரு. என்னுடைய காரியங்களில் குறுக்கிடாதே. அநாவசியமா ஒரு கெட்ட பெயரை உண்டாக்காதே. அது உனக்கு நல்லதில்லே.''

''மிரட்டறீங்களா? நீங்க 'அவுட் ஆஃப் தி வே'யிலே போறப்ப, நான் அதைப் பார்த்துக்கிட்டுச் சும்மா இருக்க முடியாது. நல்லதுக்கு நான் உங்க கூட நிப்பேன். ஒத்துழைப்பேன்; உற்சாகப்படுத்துவேன். மற்றதற்கு 'ரிவோல்ட்' பண்ணிக்கிட்டுத்தான் இருப்பேன். உங்களைக் கண்காணிச்சுக்கிட்டுத்தான் இருப்பேன்.''

''நான் உங்கிட்ட அதிகமா விளக்கம் கேட்டுக்கிட்டு நிற்கத் தயாரா இல்லே. பார்க்கலாம். இது எதிலே கொண்டு போய் விடுதுன்னு....''

சரவணன் வெளியேறி விட்டான்.

அவன் பேசியதை எதையும் அவளால் ஏற்க முடியவில்லை. கணவன் செய்யும் எல்லாக் காரியங்களையும் எதிர்க்க வேண்டியிருக்கிறதே என்று வேதனையுறும்போது, தான் எதிர்க்க வேண்டும் என்பதற்காகவே சரவணன் காரியங்களை மேற்கொள்ளுகிறானோ என்று சந்தேகித்தாள்.

வாழ்நாள் முழுதுமே இப்படியே வெறும் போராட்டமாகவே போய்விடுமோ!

* * *

**ஊ**மைப் படம் போல் வாழ்க்கையின் சம்பவங்கள் மெதுவாகவும் வேகமாகவும் நடந்து கொண்டிருப்பது போல இருந்தது, நித்யாவுக்கு. ஒரு மாத காலமாகச் சரவணன் அவளுடன் சரிவரப் பேசவில்லை. அவனது தேவைகள், அவனுடைய எதிர்பார்ப்புக்கள், அவனது முணுமுணுப்புக்கள், இவைகளை அவளாக அநுமானித்து, அவனைத் திருப்திப் படுத்திக் கொண்டிருந்தாள்.

மனப் பக்குவமற்ற அவனது வீண் பிடிவாதங்களினால் மனம் சோர்ந்த நிலையில் அவளும் கொஞ்சம் சலித்துப் போய்க் காணப் பட்டாள்.

கவிவரதன் அன்று அந்த விளம்பரத்துடன் அவளை ரொம்பவும் தயக்கத்துடன் காண வந்தான். கூடவே ஜெயாவும் வந்திருந்தாள்.



நான் விரும்பி உபயோகிப்பது

நம்பகமான

# ஐடெக்ஸ்

அழகு சாதனங்கள்

*ஜெய கௌசல்யா*




CP.AL.5

MFRS :. ARAVIND LABORATORIES,
MADRAS.33

தலைவலி • :.ப்ளூ • பல்வலி
• உடல்வலி முதலியவற்றை
உடனடியாகக் குணப்படுத்த

# ஸலோ:.பென்

வலி நிவாரண மாத்திரை

அமிர்தாஞ்சன் லிமிடெட் தயாரிப்பு

ஏனெனில் ஸலோஃபென் மாத்திரைகள் டாக்டர்கள் சிபாரிசு செய்யும் மருத்துவ முறைப்படித் தயாரிக்கப்பட்டவை.

ஸலோஃபென்
இருக்குமிடத்தில்
வலி இருக்காது!




FDSAS-1808 TM

# அரசியல் கற்பனையில்
# கிரிக்கெட் வர்ணனை





★ முதல்வர்: ஆட்டம் மிக மிக ரசமாக இருக்கிறது. கடற்காற்று சில்லென்று அடிக்கிறது. எதையும் தாங்கும் இதயம் கொண்ட பேரறிஞர் அண்ணா துயில் கொள்ளும் மெரினா கடற்கரையில் இந்த 'டெஸ்ட்' நடப்பது, ஆட்டக்காரர்களுக்குக் கடமை, கண்ணியம், கட்டுப்பாடு எவ்வளவு அவசியம் என்பதை விளக்குகிறது.

★ ராஜாஜி: நமது 'காப்டன்' வாடேகர் கீதை வழியில் நடப்பவர். கீதையில் கண்ணன் ''பலனை எதிர்பாராமல் கருமத்தைச் செய்'' என்றான். அதேபோல் வாடேகரும் எதிர்க் கட்சித் தரப்பினர் எவ்வளவு ரன்களைக் குவித்தாலும் அயராமல் தம் கடமையைச் செய்கிறார்.





★ மதுரை முத்து: இதோ 'அர்னால்டு' ஓடி வருகிறார். பந்தை எறிந்துவிட்டார். ஆ....! 'பாட்ஸ்மேன்' ஓங்கி அடித்த பந்து அதோ நம் முதல்வர் இருக்கும் பக்கம் சென்று விழுகிறது. ஏ, பரங்கியனே! உங்கள் பருப்பு எங்கள் வீரர்களிடம் வேகாது! அடிக்கு அடி, உதைக்கு உதை!

★ ஈ. வே. ரா.: இந்த ஆட்டம் என்னதான் சிறப்பா இருந்தாலும் எனக்கு ஒரே ஒரு வருத்தம். இதிலே பாருங்க... ஒரு பச்சைத் தமிழன் கூட இந்தியக் கட்சியில் இல்லே, வெங்காயம்!





★ ம. பொ. சி.: 'அபீத் அலி' பந்து எறிகிறதைப் பார்த்ததும் எனக்குச் சிலப்பதிகாரத்தில் கண்ணகி சிலம்பு எறிகிற காட்சிதான் நினைவு வருகிறது!

★ நெடுஞ்செழியன்: கலைஞர், முதல்வர், உலக மகா கவிஞர் வர்ணித்த பின் நான் என்னத்தை வர்ணிக்க? ஒன்றே ஒன்று சொல்வேன். இன்று வாடேகரும், கவாஸ்கரும் ஆடிய ஆட்டத்தைப் பார்த்தபோது, அவர்களுக்கும் முதல்வர் சம்மதம் பெற்று மெரினா கடற்கரையில் ஏன் சிலைகள் வைக்கக் கூடாது என்று தோன்றுகிறது!

- சம்பத்குமாரி

விளம்பரம் வந்திருந்த பக்கத்தைப் பிரித்து அவளிடம் சிரித்துக் கொண்டே நீட்டினான்.

'புது முகங்கள் தேவை

புதிதாக ஆரம்பிக்கவிருக்கும் தமிழ், தெலுங்கு, மலையாளம், ஹிந்தி ஆகிய நான்கு மொழிப் படம் ஒன்றுக்கு முற்றிலும் புதிய முகங்கள் தேவை. நுழைவுக் கட்டணமாக ரூபாய் பத்து முன் பணம் அனுப்பி, நாங்கள் அனுப்பும் பாரத்தைப் பூர்த்தி செய்து ரூபாய் பத்து அனுப்பிய மணியார்டர் ரசீதையும் உடன் வைத்து அனுப்ப வேண்டியது. மணியார்டர் ரசீது இணைக்கப்படாத பாரங்கள் பரிசீலனைக்கு ஏற்கப்பட மாட்டா.'

விளம்பரம், அதில் உள்ள ஏமாற்றும் தன்மையுள்ள வாசகங்கள் இவைகளைப் படித்ததுமே நித்யா புரிந்து கொண்டு விட்டாள்.

''மூன்று பேர் சேர்ந்து கொண்டு இதை ஆரம்பித்திருக்கிறார்கள். இதில் சரவணனும் ஒருவன். சரவணனைப் பார்த்துக் கேட்டேன். அவன் சரியாப் பதில் ஒன்றும் சொல்லவில்லை. இவர்களின் கூட்டில் கங்காதரன் என்ற ஓர் ஆசாமி. நம்பர் ஒன் ப்ராட். சீட்டுக் கம்பெனி நடத்திப் பல ஆயிரங்களை ஏப்பம் விட்டுட்டு ஜெயிலுக்குப் போனவன். இன்னொருத்தன் மாஜி புரொட்யூஸர். நம்ம சரவணன். எப்படி கம்பெனி?''

சில கணங்கள் எவ்வித யோசனையும் தோன்றாமல் அமர்ந்திருந்தாள் நித்யா.

சமீப காலமாகவே திடீரென்று வீட்டுக்கு டாக்ஸியில் வருவதும், வந்த டாக்ஸியை வாசலிலேயே நிற்க வைத்து, பிறகு அவசரம் அவசரமாக அதிலேயே புறப்பட்டுப் போவதும் உடையில் சில நூதன மாறுதலுடன் காட்சி தருவதும், மீசை, கிருதாவை இறக்கமாக அகலமாக வளர்த்துக் கொண்டு அதிக நேரங்கள் கண்ணாடி முன் நிற்பதும் நித்யாவுக்கு வேடிக்கையாகவே இருந்தன. இளைத்துக் கிடந்த மணிபர்ஸ் இப்போது எல்லாம் உடல் பருத்துக் காணப்பட்டது. அதிலிருந்து ரொம்பவும் அலட்சியமாக ரூபாய் நோட்டுக்களை எடுப்பதும், டாக்ஸி டிரைவரிடம் மீதிச் சில்லறைகளை வாங்காமல் அனுப்புவதும் இவை அவளைப் பொறுத்தவரையில் வேடிக்கைகளே.

## முதல் 'ஹலோ!'

டெலிபோனைக் கண்டுபிடித்தவர் யார் தெரியுமா? உடனே சொல்லிவிடுவீர்கள்: 'அலெக்ஸாண்டர் கிரஹாம் பெல்' என்று!

எப்போது கண்டுபிடித்தார் தெரியுமா? - சிறிது யோசித்துச் சொல்வீர்கள்: '1876ம் வருடம்'

டெலிபோனில் முதன் முதலாக கிரஹாம் பெல் யாரோடு பேசினார்?



தம் வீட்டின் வேறொரு மாடியிலிருந்த தாமஸ் வாட்ஸனுடன் பேசினார்.

"என்ன பேசினார்?"

"மிஸ்டர் வாட்ஸன்! கம் ஹியர்.... ஐ வாண்ட் யூ!"

இதைக் கேட்டதும் வாட்ஸன் விழுந்தடித்துக் கொண்டு பெல்லிடம் ஓடிவந்தார்.

"ஸார்! நீங்கள் பேசினதெல்லாம் தெளிவாகக் கேட்டது!" என்று ஆச்சரியக் குறியாக நின்றார் அவர்.

தகவல்: 'ஏவி'

ஆதாரம்: அமெரிக்கன் ரிப்போர்டர்

அவனது செயல்கள் ஒரு முரட்டுக் குழந்தையை நினைவூட்டிக் கொண்டிருந்தன. அர்த்தமற்ற சிடுசிடுப்புக்கள், நித்யா அருகில் வரும்போது அதைக் கவனிக்காதவன் போல அப்பால் நகர்வது ஆகியவை.

''சாப்பிட வரீங்களா?''

''நோ.''

''ஏன்?''

''சாப்பிட்டாச்சு.''

''எங்கே?''

''ஆபீஸிலேயே.''

''ஆபீஸ்?''

தனக்கும் ஓர் ஆபீஸ் வந்து விட்டது என்பதை நித்யாவுக்கு உணர்த்தத் துடிக்கும் அகம்பாவம்.

ஜெயா சொல்வது போல் நான் விஷயத்தை அணுகுகிற விதத்திலேயும் அவரது உணர்வுகளை மதிக்காமல் நடந்து கொண்டதிலேயும் ஏதாவது குறை இருக்குமோ? அப்படியானு ஒரு புதிய கோணத்தில் இதை அணுகிப் பார்த்தால் என்ன?''

''ஏதோ புதுசா படக் கம்பெனி ஒன்று பேப்பர்லே அடிபடுதே, புது முகங்கள் தேவைன்னு.''

சரவணன் வியப்புடன் தன் மனைவியைப் பார்த்தான்.

''ஆமாம்! நாங்க ஒரு மூணு பேர் சேர்ந்து ஆரம்பிச்சிருக்கோம். 'நியூ வேவ்' டைப்பிலே ஒரு புரட்சிப் படத்தை எடுக்கத் திட்டமிட்டிருக்கோம்... 'ஃபுல் ஆஃப் செக்ஸ்'. அது தான் இப்ப நியூ வேவ்.''

''அதெல்லாம் எனக்கென்ன தெரியும்?''

''ஜரூரத், தஸ்தக், தோராஹா எல்லாம் என்னத்துக்கு ஆச்சு? இதோட நிக்க முடியாது.''

''ஏன், அதுக்கெல்லாம் கால் இல்லையா?''

''ஆண் பெண் உறவு பற்றி ஒரு நியூ அப்ரோச். ஃபுல் ஆஃப் பெட்ரூம் ஷாட்ஸ்தான்.''

''நிச்சயமா ஜனாதிபதி பரிசு கிடைக்குங்க. ஆமாம், கதை?''

''இனிமேல்தான் எழுதற ஆளைத் தேடணும். தேடிக்கிட்டு இருக்கோம்.''

''மூலதனம்?''

''வந்து குவியற மணியார்டர்களைக் கண்டால் நீ அசந்து போயிடுவே. போட்டோங்க வந்து குவியுது பாரு!...''

''பத்துப் பத்து ரூபாயாகத்தானே வரும்? அது எந்த மூலைக்கு?''

அபூர்வமாக அந்த இரவு வீட்டில் இருந்தான் சரவணன். அறையில் அமர்ந்திருந்தவனிடம் பேச்சுக் கொடுக்க வந்தவளுக்கு உற்சாகமாகவே பதில் கொடுத்துக் கொண்டிருந்தான் அவன்.

''ஸ்டேட் கவர்ன்மெண்ட் வழியா ஃபிலிம் ஃபினான்ஸ் அஸோஸியேஷன்லே கடனுக்கு ஏற்பாடு பண்ணப் போறோம். எங்களுக்கு முற்றிலும் புது முகம் மூணு பேர் வேணும். இப்ப பீல்டிலே இருக்கிறவங்க எவங்களும் எங்களுக்குத் திருப்தி இல்லே. ஏன்னா அவங்க நடிப்பைப் பற்றி மக்கள் ஏற்கனவே ஒரு முடிவோட இருக்காங்க. இவங்க நடிப்பு இதுதான் அப்படின்னு ஒரு வரையறுக்கப்பட்ட முடிவோட இருக்கிறவங்ககிட்டே நாம என்னதான் புதுமையாச் செய்ய வைச்சாலும் எடுபடாது. புது முகமாகவே போட்டு முயற்சி பண்ணினால் வெற்றிகரமாப் படம் எடுக்கலாம்.''

''இவ்வளவு விஷயங்களை எப்படித் தெரிஞ்சுக்கிட்டீங்க? ரொம்ப நுணுக்கமா விஷயங்களைத் தெரிஞ்சு வைச்சி இருக்கிங்களே!''

''அந்தந்த லைன்லே இருக்கிறவங்களோட அது விஷயமாப் பேசிப் பழகறபோது எல்லாம் தெரியுது.''

நித்யாவுக்குப் பெருமைதான்.

கணவனின் புத்தி சாதுரியமும், விஷயங்களை அறிவதில் உள்ள கூர்மையும், அவள் அறிந்து வியந்தவைதான். அதை நியாயமான வழிகளில் பயன்படுத்தவில்லையே என்கிற ஏக்கம் அவளுக்கு.

அன்றையப் பேச்சை அத்துடன் முடித்துக் கொண்டு விட்டாள். ஜெயா கூறுவது போல் இந்த அணுகலில் கொஞ்சம் பலன் தெரிவது போல் தோன்றவே, அதே இழையைப் பற்றிக் கொண்டாள். ஆரம்பத்திலேயே ஒரு முட்டுக் கட்டையைப் போடுவதை விடுத்துச் சரவணன் இதன் பேரில் கொண்டுள்ள நம்பிக்கையும், ஆர்வமும் உண்மையானதுதானா என்பதை முதலில் தெரிந்து கொள்ளவே துடித்தாள்.

''எப்படி இருக்குங்க உங்க 'நியூ வேவ் பிலிம் முயற்சி?''

அவனது மன உணர்ச்சிகளை அனுசரித்தும், தனது அனுசரணையை வெளிப்படுத்துவது

பரிசுத்தமான பாலினால் செய்யப்பட்டது





காட்பரிஸ் சாக்கலேட்

சுவையானது
மட்டுமல்ல...
போஷாக்கு
அளிக்கவும் வல்லது!




பரிசுத்தமான பால்,
சத்துள்ள கொகோ,
இவையுடன் சர்க்கரையின்
இனிப்பு—அதுவே
காட்பரிஸ் மில்க் சாக்கலேட்!



காட்பரிஸ்

ஒவ்வொரு சாக்கலேட்டும்
பாலின் குணங்கள் அடங்கியது!

AIYARS-C.142 TM

எல்லா ஹேர் ஆயில்களுமே உங்கள் கேசத்தை
அலங்காரமாக வைக்கின்றன, ஆனால்

# ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்ட் கேஸ்டர் ஹேர் ஆயில்

உங்கள் கேசத்தை அடர்த்தியாக, ஒளிசிந்த
வைக்கிறது; ஆரோக்கியமாக வைக்கிறது.
அத்துடன் கேசம் எழிலோங்கச் செய்கிறது.

இக்காரணங்களால்தான், ஆண்டுதோறும் அநேக குடும்பத்தினர் நறுமணமுள்ள
ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்ட் கேஸ்டர் ஹேர் ஆயில் உபயோகிக்கத் தொடங்குகின்றனர்.




Shilpi HPMA 27/72a Tam

போல் உணர்த்தியும், ரொம்ப நிதானமாக அக் கேள்வியை ஒரு நாள் கேட்டான்.

நித்யாவின் கேள்விக்கு அவன் அலட்சிய மாக நகைத்ததை அவளால் ரசிக்க முடிய வில்லே.

''நீ ரொம்ப அவசியம் தெரிஞ்சுக்கணுமா?'

பதில் வந்த அர்த்தமற்ற அலட்சிய பாவம் சரவணனின் சுய சொரூபத்தின் பாதியைப் பளிச்சென்று காட்டிவிட்டது.

பரபரப்புடன் அவன் அமர்ந்திருந்த மேஜை முன் ஒரு 'நாற்காலியை' இழுத்துப் போட்டுக் கொண்டு அமர்ந்தவள் அவன் படித்துக் கொண்டிருந்த 'ரேஸ் டிப்ஸ்' புத்தகத்தைப் பிடுங்கி எறிந்து விட்டு, ''நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுங்கள்'' என்றாள்.

நாற்காலியைப் பின்னால் தள்ளி விட்டு, சற்றே கீழே இறங்கி யிருந்த 'பேண்டை' மேலே இழுத்து விட்டுக் கொண்டே வேகமாக வெளியேறிவிட்டான்.

தன்னுடைய நாசூக்கான முயற்சிகள் தோல்வி கண்டு விட்டதை இந்த ஒரே ஒரு நொடியில் உணர்ந்து கொண்டவுடனேயே அவளது போராட்ட குணம் முனைப்புப் பெற்றுக் கூர்மை அடைந்து விட்டது.

''**கா**லையில் கேட்டேன், சிரித்து விட்டு எழுந்து போய்விட்டீர்களே! அந்தச் சிரிப்புக்கு அர்த்தம் புரிந்தால் பரவாயில்லே.''

''சில கேள்விகளுக்கு எனது பதில் வெறும் சிரிப்பாகத்தான் இருக்கும். அதைப் புரிந்து கொள்ள முடியாதவர்களைப் பற்றி எனக்கு அக்கறை இல்லே.''

''கேள்வி கேட்பவள் உங்கள் மனைவி. அதன் அர்த்தத்தை என் யூகத்துக்கே விட்டு விட்டேன் என்பதுதான் உங்கள் பதில் என்றால் அதைப் பற்றி நான் கொள்ள வேண்டிய அர்த்தம் ஒன்றே ஒன்றுதான் உண்டு. உங்கள் 'நியூ வேவ்' சினிமா முயற்சியும் ஒரு மோசடி என்பதுதானே அர்த்தம்? என் யூகம் சரிதானே?''

சரவணன் பதில் ஒன்றும் கூறவில்லே.

''கொஞ்சம் நிதானமா நெனச்சுப் பாருங்க. நீங்க செஞ்சுக்கிட்டு இருக்கிறது உங்களுக்கே நல்லா இருக்குதா? உங்க படிப்புக்கு, உங்ககிட்ட இருக்கிற திறமைக்கு இப்படியெல்லாம் மோசடி செஞ்சுதான் சம்பாதிக்கணுமா? இப்படிச் சம்பாதிக்கிறதிலே உங்களுக்கு வெட்கமா இல்லே? நாலு பேர்கள் நாலு விதமா உங்ககிட்ட கேள்வி கேட்கிற போது தலே குனிவா இல்லே? கொஞ்சமா சம்பாதிச்சாலும் மானமா சம்பாதிச்சா எவ்வளவு பெருமையா இருக்கும்? கவிவரதனையும் ஜெயாவையும் பார்க்கிறீங்களே! எவ்வளவு ஆசையா யிருக்குது? அவங்க குடும்பம் நடத்தறதைப் பார்த்தா எவ்வளவு அந்நியோந்நியமா அவங்க இருக்காங்க! நாம மாட மாளிகை, கூட கோபுரம் கட்டிக்கிட்டு வாழ ஆசைப்பட வேண்டாங்க. சாதாரண வாழ்க்கை வாழக்கூடிய அளவுக்கு ஒரு சராசரி ஆசாமிகளா இருந்தாப் போறுதா? உதாரணத் தம்பதிகளா இருக்க வேண்டாம். நாலு பேர் பழிக்கிற அளவுக்கு இல்லாம இருந்தா எவ்வளவு நல்லா இருக்கும்!''

## ஆச்சரியம்!



பையன்: தண்ணியிலே எப்படியப்பா மீன் இருக்கு?

அப்பா: அது என்னடா ஆச்சரியம்? உங்கம்மா கண்ணீரிலே ஒரு பட்டுப் புடவையே இருக்கே!

— ஏ. வி. கிரி

மீண்டும் காலேயில் செய்தது போலவே அவள் உணர்ச்சிகளே அலட்சியப்படுத்தி எழுந்து போக முயன்றவனைத் தடுக்க அறைக் கதவைச் சாத்திவிட்டுக் குறுக்கே நின்றான்.

''எனக்குப் பதில் சொல்லிவிட்டுப் போங்க, இந்தச் சினிமா மோசடியை விடப் போறீங்களா இல்லேயா?''

''இவ்வளவு சீக்கிரமாகவா? நடக்காது. வந்துக்கிட்டு இருக்கிற மணியார்டருங்க, 'எனக்கு சான்ஸ் கொடு. இவ்வளவு தொகை தரேன்', 'என்னை ஒரு நல்ல ரோல்லே உபயோகப்படுத்திக்கிட்டா இவ்வளவு தொகை தருவேன்' அப்படின்னு கேட்டுக்கிட்டு நோட்டு நோட்டாக் கொண்டு வராங்களே, அவங்க எல்லாம் வருவது கொஞ்சம் கணிசமாக் குறையட்டும். தன்னாலே சினிமா இட்டம் நின்னு போயிடும். இதுவரையிலே வந்ததை என்னோட பார்ட்டனருங்க அமுத்திக்கிட்டுப் போயிட்டாங்க. இனிமே வர்றதெல்லாம் தான் என்னோட ஷேர்'' — அவனைப் பிடித்து அப்பால் நகர்த்திவிட்டுக் கதவைத் திறந்த போது அவனது சட்டையைப் பிடித்து இழுத்துக் கண்ணீருடன் தடுத்தாள்.

''வேண்டாங்க. இப்பவே உங்க மோசடி உச்சத்துக்குப் போயிட்டுது. தயவுசெய்து இதோட நிறுத்திக்குங்க.... உங்களே நான் என்னிக்காவும் 'ஏன் வேலேக்குப் போகலே?' என்று கேட்டிருக்கேனா? நான் சம்பாதிக்கிறேங்கறதுனாலே அகம்பாவமாப் பேசியிருக்கேனா? உங்களுடைய தேவைகளே அலட்சியப் படுத்தியிருக்கேனா? சொல்லுங்க... என்னோட நெஞ்சிலே நிறைய ஆசை இருக்குங்க. அது நீங்க கைநிறையச் சம்பாதிக்கணும்கிற ஆசை இல்லே. உங்க கையாலே நிறைய நகை நட்டுப் போட்டுக்கணும்கிற ஆசையுமில்லெ. நீங்க இம்மாதிரி வழக்கங்களே விட்டுட்டு ஒரு யோக்கியமானவராக மாறினால் போதும்னு தான் கடவுளைப் பிரார்த்தனை பண்ணிக்கிட்டு இருக்கேன். உங்களே ரொம்பக் கெஞ்சிக் கேட்டுக்கிறேன். இதை இன்னியோட விட்டுடுங்க.... இதுக்கு மேலே தொடராதீங்க.''

''அவங்க ரெண்டு பேரும் கிடைத்தவரையிலே சுருட்டிக்கிட்டுப் போயிட்டானுங்க. 'வெளியே ஏதாவது உளறினே பேப்பர்லே அறிக்கை கொடுத்திட்டுப் போயிடு

''வரப்போகும் ஆண்டுகள் மோசமாக இருக்கும்.''
-இந்திரா காந்தி



கடந்த ஆண்டுகள் மட்டும் எப்படி இருந்தனவாம்?
- ஹிந்துஸ்தான் டைம்ஸ் — பாலி

வோம்ன்'னு மிரட்டிட்டு வேறே போயிருக்காங்க. அப்படி ஒரு அறிக்கை வந்தால், மணியார்டருங்க, பணத்தோட சினிமாவுக்கு சான்ஸ் தேடிக்கிட்டு வர்றவங்க ரெண்டும் நிக்கும். போலீஸ்தான் வரும். அப்ப நான் தான் ஏமாந்தவனு? மன்னிச்சுக்கோ, நித்யா...இதுலே நீ குறுக்கிட்டுப் பிரயோசனமில்லே.''

அவளை ஒதுக்கிவிட்டு வெளி வராந்தாவுக்கு வந்தான்.

''நீங்க நிறுத்தலேன்னு, நிறுத்தும்படியா நான் செய்வேன். என்ன சொல்றீங்க? முடிவா கேக்கறேன்.''

''மிரட்டிப் பார்க்கிறியா? முடிஞ்சாச் செய்.!''

சரவணன் வேகமாகப் படி இறங்கிப் போய் விட்டான்.

''இப்படிச் செய்து விட்டாயே! அப்படியொரு விளம்பரத்தை நீ கொடுத்திருக்க வேண்டாம்!'' என்று நித்யாவின் தந்தையுட்படச் சரவணனின் பெற்ருேர், ஜெயா எல்லோரும் அதையே கூறினர்.

ஏமாருதீர்கள்!

சன் பிலிம்ஸ் என்ற பெயரில் தமிழ், தெலுங்கு, மலையாளம், ஹிந்தி ஆகிய நான்கு மொழிகளில் படம் தயாரிக்கப் புது முகம் தேவை என்ற விளம்பரத்தைக் கண்டு ஏமாருதீர்கள். அது வெறும் மோசடி, ஏமாற்று வேலை....

என்ற விளம்பரத்துக்கு அடியில், 'இப்படிக்கு — நித்யா' என்றே இருந்தது. இந்த விளம்பரத்தைத் தொடர்ந்து வந்த பல புகார்கள் போலீசாரை விழிப்படைய வைக்கவே, சரவணன் சில நாட்கள் தலைமறைவாகச் செல்ல நேர்ந்தது.

சரவணனைச் சேலம் ஹோட்டல் அறையொன்றில் பிடித்துக் கைது செய்து சென்னைக்குக் கொண்டு வந்தார்கள்.

சரவணனின் வாக்குமூலப்படி தலைமறைவாகிவிட்ட மற்றவர்களைப் போலீஸார் வலை போட்டுப் பிடித்து விட்டனர்.

மோசடிக் குற்றம், ஏமாற்று, நம்பிக்கைத் துரோகம் என்று பலவகைப் பிரிவுகளில், அவர்கள் மேல் குற்றம் சுமத்தப்பட்டது. எதையும் அவர்களால் மறுக்க முடியவில்லை.

ஆறு மாதம் சிறைவாசம்!

அவளை அவன் இந்தச் சிறை வாசத்தின் போது சந்திக்கவே இல்லை. வழக்கு நடந்த போதுகூட வழக்கு மன்றத்தில் பார்வையாளர்களோடு பார்வையாளராக அமர்ந்து அவனைப் பார்த்தாள். எப்பொழுதேனும் அவன் முகம் அவள் பக்கம் திரும்பும். அப்படித் திரும்பும்போதெல்லாம் அந்த முகத்தில் ஆத்திரமும், கடுகடுப்பும்தான் தெரியும்.

தண்டனை வழங்கி நீதிபதி தம் தீர்ப்பை வாசித்தபோதுகூட அவன் கண்கள் கலங்கவில்லை. வன்மத்துடன் நித்யாவின் பக்கம் பார்த்துவிட்டு அலட்சியமாக நகைத்தான்.

போலீஸ் வேனில் ஏறும் முன்னுல் அவனுடன் சில வார்த்தைகள் பேச வேண்டும் என்ற ஆவலுடன் நித்யா வெளியே வந்தபோது வேகமாக உள்ளே போய்விட்டான்.

''அவ முகத்திலே இனி விழிக்க மாட்டேன். என்னை யாரேனும் பார்க்க வரணும்னு நீங்க 'யாரும் வந்தாப் போதும். அவளை அழைத்து வரக் கூடாது'' என்று பெற்ருேரிடமும் கனிவரதனிடமும், போலீஸ் வேனில் உள்ளே அமர்ந்தபடியே பேசினுன் சரவணன்.

போலீஸ் வேன் போய்விட்டது.

ஆறு மாதங்களை நித்யா ரொம்பவும் கடினத்துடன்தான் கடத்தினுள்.

ஆறு மாதங்களில் அவர் திருந்தியவராக வெளியே வந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும். குறைவான நம்பிக்கையும் அதிகமான எதிர்பார்ப்புக்களுமாக நாட்களைக் கடத்திக் கொண்டிருந்தாள்.

மாதங்கள் ஒன்று இரண்டு என்று போய்க் கொண்டிருந்தன.

'ஏன் அவர் வருகை பற்றி ஒன்றும் தெரியவில்லை? விடுதலையாகி நேரில் வர வெட்கப் பட்டுக் கொண்டுதான் வராமல் இருக்கிருரா?'

அன்று விவாகரத்துக்கான அந்த வக்கீல் நோட்டீஸ் வந்தது. அதில் அவன் அறை விலாசம் இருந்தது. நெஞ்சில் இலேசான படபடப்புடன் அவனைக் காணச் சென்ருள்.

அவள் வந்திருப்பதைக் கண்டும் காணுதவன் போல சில விநாடிகள் தலை கவிழ்ந்து அமர்ந்திருந்தான். ஒரு முறை அவளை நிமிர்ந்து பார்த்து விட்டு ஏளனத்துடன் நகைத்தபடி கேட்டான்:

''இந்த ஆறு மாதங்களில் உடம்பு ஒரு சுற்றுப் பருத்து, தனிச் சிவப்பொன்று சிவந்து...நிம்மதியான வாழ்க்கை இல்லையா?''

ஆறு மாதங்களாக வீட்டில் தான் இல்லாமல் போனதால் நித்யா அதிகம் பாதிக்கப் பட்டிருப்பாள் என எதிர்பார்த்து, அதில் உண்டான ஏமாற்றம், வன்மமான கேள்வியாக உருப்பெற்று வருகிறது என்பதை உணர்ந்தவளாக, ''நானும் துணிந்துதான் வாழ்க்கை நடத்துகிறேன். இந்தத் துணிவு தான் மனுேதிடத்தையும் தந்திருக்கிறது. நிம்மதி பெறவும், நிம்மதி இழக்கவும் இதில் என்ன இருக்கிறது?'' என்ருள்.

''என் வக்கீல் நோட்டீஸ் கிடைத்திருக்குமே உனக்கு?''

''கிடைத்தது. நீங்கள் கூறியிருந்த முகாந்திரங்களைப் பார்த்தேன். எனக்குச் சிரிப்பு



கண் பார்வை இல்லாதவர்களுக்கென்று வெலிங்டனில் ஒரு 'டிராபிக் லைட்' வைத்திருக்கிறார்கள். பச்சை எரியும் போது ஒருவித சத்தமும் சிவப்பு எரியும்போது வேறு ஒரு சத்தமும் கேட்கும். இதைப் புரிந்துகொண்டு சாலையைக் கடப்பது பற்றி அவர்கள் முடிவு செய்வார்கள்.

ஹிந்துஸ்தான் டைம்ஸ்

- பாலி

ஒரு புறம், உங்கள் மேல் பரிதாபம் ஒருபுறம், இதற்குப் பதில் கொடுக்கவே மனமில்லே.''

''என்றாலும் நீ அவசியம் பதில் தந்தாக வேண்டும். கோர்ட்டுக்கு வந்தாகவேண்டும்.''

''நீங்கள் சொல்லி விருக்கும் முகாந்திரங்கள் வழக்கு மன்றத்தில் பலவீனமாகப் போய்விடும். அதோடு, அதில் உண்மையை விடப் பொய்தான் அதிகமாக இருக்கிறது.

''ஒரேயொரு பேரத்தில் உங்களை அப்படியே மாத்திட முடியும். உங்க வழிக்குக் குறுக்கே இனி வரமாட்டேன்னு சொல்லிட்டாப் போதும். ஆனா நான் அந்தப் பேரத்துக்குத் தயாரா இல்லே. இதனால் எல்லாம் நான் மிரண்டு போய் நிற்பதாகவும் தப்புக் கணக்குப் போட்டுடாதீங்க.

''நானெல்லாம் உங்களோடு போரிட்டுக் கிட்டேதான் வாழணும்கிறதை நீங்க என்னோட தலை விதியின் நிர்ணயிப்பா மாத்த நெனச்சா அந்த விதியின் நிர்ணயிப்பை என்னாலே உடைக்க முடியும். மாத்த முடியும்.''

''உண்மையோ பொய்யோ அதை கோர்ட் தீர்மானிக்கட்டும்... கட்டிக்கிட்ட புருஷனை மனம் துணிந்து ஜெயிலுக்கு அனுப்பினவ தானே நீ? உன்னோட நெஞ்சு தைரியம் எப்படிப்பட்டதுன்னு எனக்குத் தெரியாதா?''

''அப்படிச் சொல்லாதீங்க. உங்க வழியிலேருந்து உங்களை மீட்கணும்கிற ஆசையினாலே, நீங்க செய்யற அநீதிகளிலிருந்து உங்களைத் திருப்ப இந்த வழியை ஒரு கண்ணீர்ப் புகை மாதிரி உபயோகப்படுத்தினேன். இப்பக்கூட என்னோட நியாயமான உணர்வை உங்களால் புரிஞ்சுக்க முடியும். ஆனால் பிடிவாதமா மறுக்காதீங்க. உங்க மேலே எனக்குக் கோபமில்லே. ஆத்திரமில்லே. எல்லாத்தையும் மறந்துடுங்க. நம்முடைய வாழ்க்கையை நல்ல முறையிலே அமைச்சுப்போம். பாதியிலே சிதைஞ்சு போன வாழ்க்கை வீட்டை ரெண்டு பேருமாச் சேர்ந்து செம்மைப்படுத்திப்போம். இப்பக்கூட நீங்க திருந்தி வாழறதாக இருந்தால் உங்க மேலே நான் மனப் பூர்வமா அன்பு செலுத்துவேன்.''

அறையில் அமைதி நிலைகொண்டிருந்தது. வெளியே ஆரவாரத்தின் கலவையொலி.

சரவணனைச் சில விநாடிகள் கண் கொட்டாமல் பார்த்தான். அவனுடைய ஜட நிலையிலிருந்து அவனுடைய இயக்கங்களை அநுமானிக்க முடியவில்லை.

''எத்தனை தடவை நீ கேட்டாலும் என்னுடைய முடிவு மாறப் போவதில்லை.''

நித்யாவின் கண்களில் கரகரவென்று கண்ணீர் வழிந்தது. சரவணனின் இந்தக் கடைசி வரிகள் தன்னையும் அவனையும் முழுமையாகப் பிரித்து விடப்போவதை உணர்ந்தவுடன் அதன் கனம் தாளாமல் கலங்கினாள்.

''என்னாலே என்னங்க செய்ய முடியும்? நானும் ஒரு பெண்தானே? எனக்கு நீங்க கொடுக்கிற தண்டனை ரொம்ப ரொம்ப அதிகங்க. இருந்தாலும் அதை நான் தாங்கிக்கத் தான் வேணும். ஏன்னா உங்களுடைய தவறுகளோடும் உங்களோடும் சேர்ந்து வாழற எண்ணம் இப்ப எனக்கும் இல்லாமப் போயிடுத்து. நானெல்லாம் போராடி வாழ்க்கை நல்லபடியா அமையாதா என்று ஏங்கிக் கிட்டு இருக்கிறதை விட அந்த ஏக்கமே இல்லாம இருக்கிறதும் நல்லதுதானே?''

நித்யா கண்களைத் துடைத்துக் கொண்டு புடவையைத் தோளை மூடும்படியாக இழுத்து விட்டுக் கொண்டவள், ''ஆகட்டுங்க. உங்க விருப்பப்படியே நடக்கட்டும். நாம் நீதிமன்றத்தில் சந்திப்போம்'' என்றாள்.

நித்யா திரும்பி விட்டாள்.

கீழே வந்தவுடன்தான் நித்யாவுக்குத் தான் கையில் கொண்டு வந்திருந்த வக்கீல் நோட்டீஸை மேலேயே வைத்துவிட்டு வந்தது நினைவுக்கு வந்தது.

மீண்டும் அங்கே போக வேண்டுமா? ஒரு தயக்கம்; ஒரு வெறுப்பு என்றாலும் மேற்கொண்டு காரியங்களுக்கு அது தேவைப்படுமே!

மேலே திரும்பிப் பார்த்தாள். ஒருவேளை அவர் அதை வைத்துக் கொண்டு வாயிற்படியில்கூட நிற்கலாம்.

வாயிற்படியில் சரவணன் நிற்கவில்லை.

கதவு திறந்துதான் இருக்கிறது. ஆனாலும் ஒரு வெறுமை. கதவு திறந்திருந்து என்ன பிரயோசனம்? அவரது நற்பண்புகளின் கதவு மூடிக் கிடக்கிறதே!

''அந்த நோட்டீஸை இங்கே வைத்தேனே, அது எங்கே?''

அவன் வேறு புறம் திரும்பிக் கொண்டிருந்தான்.

திரும்பிய நிலையில் நின்ற சரவணன் அதைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்துக் கொண்டிருந்தான். அவன் செய்கைகளை அவள் பின்னால் நின்று பார்த்துக் கொண்டிருந்தாள்.

''அதை ஏன் கிழித்தீர்கள்? அது எனக்கு வேண்டும்.''

அவன் திரும்பி அவளைப் பார்த்தபோது அவன் கண்களில் ஒரு கலக்கம் இருந்தது. அதே கலக்கம் அவள் கண்களையும் கரித்தது.

''பரஸ்பரம் நாம் கொடுத்துக் கொண்ட தண்டனைகள் போதும், நித்யா. உன்னைத் தண்டிக்க வேண்டும் என்ற விருப்பம் எனக்கும் மனப்பூர்வமாக இல்லாவிட்டாலும் அவ்வப்போது ஏற்படும் ஒரு வேகம் இந்த முடிவுக்கு என்னை விரட்டியது என்னவோ உண்மைதான்... உன்னைப் போலவே நானும் எல்லாவற்றையும் மறந்து விடுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே அவளை நெருங்கி, அவள் கைகளை இறுகப் பற்றிக் கொண்டே சொன்னான் : ''என் வழக்கு இங்கேயே தோற்றுப் போய் விட்டது!'' □

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras 600031
Managing Editor: T. Sadasivam

# பனிக் கால சரும வரட்சியா? உங்களுக்கு உள்ள இப் பிரச்சினை ரோம், லண்டன், பாரிஸ் நங்கையருக்கும் உண்டு

## அவர்கள் கண்ட வழியே உமக்கும் உசிதம்




புத்தழகுக் கோலமுடன் வருகுது

# பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்

## உமது சருமத்தை மென்மையாக்கிப் பாதுகாக்கும்

குளிர் நாட்களிலே வரண்டிடும் சரும மென்மையைக் குழைவுடனே உமக்கு மீட்டுத் தருவது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்: உலகெங்குமே அரம்பையர் விரும்பும் அழகுசாதனம் இயற்கை எவ்வாறு செயல்படுகிறதோ அதே முறையில்



உமது சருமத்தைப் பேணிக் காப்பது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம். வாடாமலரென மென்மையோடு மிளிரத் தேவைப்படும் சருமத் தைலங்களை மீட்டுத் தருகிறது பாண்ட்ஸ் கோல்டு க்ரீம். இட்டுப் பயனடைவீர் இன்றிரவே!

## உலகிலேயே உச்ச விற்பனை உடைய கோல்டு க்ரீம்: பாண்ட்ஸ்

*சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்க்.*, (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் அமெரிக்காவிலே இணைக்கப்பட்டது.)

லின்டாஸ்- CPC. 2-140 TM

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)

# நீடித்திருப்பது




# டுலக்ஸ்

# எழிலுக்கு

குறைந்த அளவு டுலக்ஸ் பெயின்ட் கொண்டு
பரந்த இடப்பரப்பிற்குப் பிழையின்றி
பூசலாம். அழுக்குகளை
நீர்கொண்டு நன்றாக நீக்கலாம்.
ஒரு பொழுதும் மங்காது.




உங்கள் கன்ட்ராக்டரிடம் கேளுங்கள். இவர் டுலக்ஸ் எப்படி ஆச்சரியகரமாக உங்கள் வீட்டிற்கு அதிக சோபை அளிக்கிறது என்பதை விளக்கிக் காட்டுவார்.

டுலக்ஸை இந்தியாவில் தயாரித்து விற்பவர்கள்:
தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆப்
இந்தியா லிமிடெட்.




டுலக்ஸ்—வீட்டின்
நெருங்கிய நண்பன்